# THE LIFE OF JESUS

## IN TAMIL

DERIVED FROM THE FIRST THREE GOSPELS AND REWRITTEN

BY

FRANCIS KINGSBURY, B. A.

COLOMBO
1939

TO THE MEMORY

OF

CLAUDE G. MONTEFIORE

SCHOLAR AND SAINT

WHO ALL HIS LIFE TRIED TO INTERPRET

JUDAISM TO CHRISTIANS AND

CHRISTIANITY TO JEWS AND

WHO HELPED BOTH JEWS AND CHRISTIANS

TO REDISCOVER

THE JESUS OF HISTORY

# ஏசு வரலாறு

கலைமாணி

**பிரான்ஸிஸ் கிங்ஸ்பரி**

முதல்மூன்று சுசமாசாரத்தில்
வடித்தெடுத்துக் கலந்தது

கொழும்பு
பிரமாதிஹு வைகாசிமீ

# முன்னுரை

இக்காலத்தில் ஒருவரது கதையை எழுதவிரும்புவோர், கதா நாயகரைக்குறித்துப் பலவிஷயங்களைத் தேடி ஆராய்ந்து, கதை வாசிப்பார் அறியவிரும்புங் காரியங்களைக் காலக்கிரமப்படி எழுதுவர். அப்படி ஒருகதை ஏசுவைக்குறித்து எழுதுவ தற்கு நாம் அறியவிரும்பும் விஷயங்கள் பல நமக்குக்கிடையா. தம் வரலாற்றில் ஒருசிறுபகுதியையேனும் தம் உபதேசத்தில் ஒரு சிறுபாகத்தையேனும் ஏசு எழுதிவைக்கவில்லை. அவரை நேரில் அறிந்து பழகினவர்களுள் ஒருவரேனும் அவரைக் குறித்தாயினும் அவரது உபதேசத்தைக்குறித்தாயினும் எழுதிவைத்திலர்போலும். அப்படி எவரேனும் எழுதிவைத் தது உண்மையாயின், அவற்றுள் ஒன்றும் நேரே நம் கைக் கெட்டவில்லை. இப்பொழுது ஏசுவின் சரித்திரத்தைக் குறித்தும் அவர் உபதேசத்தைக்குறித்தும் நாம் அறியக் கிடப் பன எல்லாம் முதல்மூன்று சுசமாசாரங்களிலுள்ளவையே. இம்மூன்றனுள் காலத்தால் முந்தியது மார்க்கனார்சுசமாசாரமே. இஃது எழுதியது ஏசு பரமபதமடைந்து முன்பின் நாற்பது வருடங்களுக்குப்பின் போலும். இதனை எழுதியவர் ஏசுவை நேரில் அறிந்திலர். மற்றைய இரண்டு சுசமாசாரங்களை எழுதினவர்களும் ஏசுவை அறியாதாரே.

முதல் மூன்று சுசமாசாரங்களையும் எழுதியவர்நோக்கம் ஏசுசரித்திரத்தை அறிவிப்பதன்று, அவர் செயல்களுட் சில வற்றையும் அவருக்குநேரிட்ட சம்பவங்களிற் சிலவற்றையும் அவர் உபதேசத்திற் சிலவற்றையும் தாம் தாம் கேள்விப்பட்ட படி எழுதுவதே. இவையும் காலக்கிரமம் விஷயக்கிரமம் என்பவற்றைக் கவனித்து எழுதவில்லை.

ஆகவே (1) ஏசுவின் வரலாற்றிலும் உபதேசத்திலும்

காம் அறியவிரும்புபவை பல எழுதப்பட்டில; (2) இருப்ப வையும் முறைபிறழ்ந்து கிடக்கின்றன; (3) அவையும் ஓரோ விடங்களிற் றிரிந்துள்ளன; (4) நடவாதவிஷயங்களும் ஏசு உபதேசியாத உபதேசங்களும் நுழைந்துள்ளன.

"**அற்புதங்கள்**"—: அற்புதம், அதிசயம், ஆச்சரியம் என்பன பெரும்பாலும் ஒருபொருட்சொற்களாய் வழங்கு கின்றன. இவற்றுள் அற்புதம் என்னுஞ்சொல் மற்றைய இரண்டினின்றும் பொருளில் வேறுபட்டு, இயற்கைக்குமிஞ்சி யது அல்லது இயற்கையோடுமுரணுவது என்னும் பொரு ளிலும் வழங்குவதுண்டு. உதாரணமாக, செத்தவருக்கு மீட்டும் உயிர்கொடுத்துச் சவத்தையெழுப்புதல், தாமே தம் சரீரத்தைவிட்டு வேறொரு சரீரத்திற்புகுதல், மீண்டும் தம் சரீரத்தில்வருதல், நீர்மேல்நடத்தல், ஒருபொருளை வேறொரு பொருளாகத் திரித்தல் முதலியனவாம். இப்படிப்பட்ட அற்புதங்கள் எச்சமயநூல்களிலும் காணலாம். இவற்றைச் செய்யும் "சித்திகள்" உடைமையே மெய்ப்பத்தருக்கு அடையாளமெனவும், சமயத்தின் மெய்ம்மை இவற்றி லேயே நிலைபெறுமெனவும் நம்பினகாலமுண்டு. இவற்றை நம்புவார் இக்காலத்தும் பலருளர். சுசமாசாரங்களிலும் இப் படிப்பட்ட அற்புதம் பல காணலாம். இவை இதிகாசத் துக்கும் சாத்திரங்கட்கும் பொருந்தா.

ஆயினும், பிணியாளரை, மருந்தின்றி, பார்வையால், பரி சத்தால், சொல்லால், பிணிதீர்ப்பது முடியும் எனத் தற்காலத்து மானதசாத்திரிகள் கூறுவர்.

"**பேயோட்டுதல்**"—: மனிதரைப் பேய்பிடிப்பது உண்டு எனவும் பேயைத் துரத்தலாம் எனவும் இக்காலத்தில் இந்துதேசத்திலும் இலங்கைத்தீவிலும் பல்லாயிரவர் நம்பு வதுபோலப் பலத்தினைநாட்டிலும் யூதர் நம்பினர். ஏசுவுக்கும்

இவ்வெண்ணம் இருந்ததுபோலும். இப்படிப்பட்ட கதைகள் முதல்மூன்று சுசமாசாரங்களிலும் காணலாம். தற்காலத்து மானதசாத்திரிகள்பலர் பேய்பிடித்தலென்பது, ஒருவகைப் புத்திமாறுட்டம் எனக் கூறுவர்.

ஆகவே, மூன்று சுசமாசாரத்தையும் நுண்மையோடு ஆராய்ந்து, ஒப்பிட்டு, தள்ளவேண்டுவனவற்றைத் தள்ளி, திருத்தவேண்டுவனவற்றைத்திருத்தியபின், கொள்ளவேண்டுவனவற்றைக்கொள்ளலாம். இவ்வாறுசெய்வது எத்துணை வல்லவர்க்கும் அரியசெயலாம். கடந்த நூறுவருஷம் சேர்மனி, பிராஞ்சு, அங்கிலம், அமரிக்கம் முதலிய தேசங்களில் விவிலிய நூல்வல்லார் பலர் இப்பணியைத் தலைமேற்கொண்டு ஆராய்ந்து எழுதியநூல் பல. இவையெல்லாவற்றையும் யான் வாசித்திலேனுயினும் ஏசுவின் சரிதத்தையும் உபதேசத்தையும் கூடியமட்டும் அறியவேண்டும் என்னும் பேரவா என்னை ஓயாதுதூண்ட, யான் கற்றநூல், ஒன்றிரண்டல்ல, இருபது முப்பதல்ல, ஐம்பது அறுபது எனிற் பொய்யாகாது. இவற்றைக்கற்று, ஏசுவின் வரலாறும் உபதேசமும் இவையென ஒருவாறு தெளிந்தேன். யான் வருந்தித் தேடிக் கற்றுத் தெளிந்ததைப் பிறரும் அறியவேண்டும் என்னும் ஆசையால் முன் நான் ஆங்கிலத்தில் எழுதினதுபோலவே இப்பொழுது தமிழிலும் எழுதப்புகுந்தேன். இந்நூல், கற்றோருக்கு மட்டுமன்று, மற்றோருக்கும் பயன்படவேண்டும் என்னும் விருப்பத்தால், நான் கண்ட முடிபுகளைமட்டும் இந்நூலில் எழுதினேன். இம்முடிபெல்லாம் எவ்வாறு வந்தன என அறியவிரும்புவார், ஆங்கிலம் முதலிய மொழிகளில் மிகப் பரக்க எழுதியுள்ள நூல்களை வாசித்து, தாமே உய்த்துணர்ந்து கொள்ளல்வேண்டும். அப்படிச்செய்யக் காலமும் பொருளும் கல்வியும் இல்லாதார் யான் எழுதிய இச்சிறுநூலையேனும் வாசிப்பின் சிறுபயனுவது பெறுவர் என்பது திண்ணம்.

பத்தொன்பதுநூற்றாண்டுக்கு முன்னே பலத்தினை நாட்டிலே ஊதசமயகுரவர் ஏசு தமது உடன்சமயத்தாருக்குப் போதித்தவைகளையும் அக்காலத்தில் அங்கு நிகழ்ந்தவைகளை யும், இருபதாம்நூற்றாண்டிலே தமிழருக்கு எடுத்துக்கூற வந்த யான், வாசிப்பவர் அறிந்துகொள்ளும்பொருட்டு, தமிழ் நாட்டுப்பத்தர் சிலரது அனுபவங்களையும் அவர் உரைகளையும் ஒப்புமைக்காக எடுத்துக்காட்டியுள்ளேன்; தமிழ் இலக்கியங் களினின்று சில உதாரணமும் வரைந்துளேன்.

இந்நூலிற் தொடுத்தன விடுத்தன திரித்தன பிரித்தன எவற்றிற்கும் உத்தரவாதி நானே.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

"குணம்நாடி, குற்றமும் நாடி, அவற்றுள்
மிகைநாடி, மிக்க கொளல்."

Francis Kingsbury

கொழும்பு,
வெகுதானியஹு பங்குனிமீ

## இந்நூலில்வரும் இயற்பெயர் முதலியவற்றிற்கு ஆங்கிலஉருவம், சொல் முதலியன.

| | |
|---|---|
| விவிலியம் | Bible |
| பூர்வசுருதி | Old Testament |
| பஞ்சாகமம் | Pentateuch |
| திருப்புகழ்மாலை | Book of Psalms |
| மீகனார் | Micah |
| உத்தரசுருதி | New Testament |
| சுசமாசாரம் | Gospel(s) |
| அலல் | Hallel |
| மார்க்கனார் | Mark |
| மத்தனார் | Matthew |
| உலுகனார் | Luke |
| பவுல்முனிவர் | St Paul |
| மோசயர் | Moses |
| அகுத்து சீசர் | Augustus Caesar |
| ஊதர் | Jews |
| சூசை | Joseph |
| மரி | Mary |
| ஓசுவன் | Joshua |
| யாகவன் | Jacob ( James ) |
| ஊதயன் | Jude ( Judas ) |
| சீமன் | Simon |
| ஏசு | Jesus |
| ஓகனமுனிவரர் | St John the Baptist |
| ஓகனன் | John |
| மக்கபி | Maccabee |
| கிரிகியர் | Greeks |
| பம்பி | Pompey |
| ஏரதன் அந்திப்பன் | Herod Antipas |

| | |
|---|---|
| அந்திரன் | Andrew |
| இலவியன் | Levi |
| சாத்திரிமார் | Scribes ( & Pharisees ) |
| சதுசயர் | Sadducees |
| தாவிதன் | David |
| சாலமன் | Solomon |
| பிலிபன் | Philip |
| பருத்தலமன் | Bartholomew |
| மத்தன் | Matthew |
| தோமன் | Thomas |
| அலவன் | Alpheus |
| தத்தன் | Daddeus |
| கானன் | Canaanite |
| ஒனமுனிவர் | Jonah |
| ஒகனை | Joanna |
| சூசனை | Susanna |
| சாத்தன் | Satan |
| பெயலசிபன் | Beelzedub |
| இலகியன் | Legion |
| இயவிரன் | Jairus |
| சீரியபினிகியஸ்திரி | Syro-Phoenician woman |
| மேசியன் | Messiah |
| கிறிஸ்து | Christ |
| எலியமுனிவர் | Elijah |
| சீரியர் | Syrians |
| இலேவியன் | Levite |
| சமரியன் | Samaritan |
| மாதை | Martha |
| பொந்தி பிலத்தன் | Pontus Pilate |
| இலசரன் | Lazarus |
| ஆபிரகன் | Abraham |

| இசிரவல் | Israel |
|---|---|
| இல்லலர் | Hillel |
| சம்மயர் | Shammai |
| சகயன் | Zachaeus |
| பத்திமன் | Bartimaeus |
| சிரேஷ்ட அருச்சகர் | Chief priests |
| ஈசகன் | Isaac |
| இசரல் | Israel ( Israelites ) |
| ஏகவர் | Jehovah |
| தீத்தன் | Titus |
| மகாஅருச்சகன் | High Priest |
| காயப்பன் | Caiaphas |
| சலமி | Salome |
| உரமை | Rome |
| நிலநடுக்கடல் | Mediterranean Sea |
| பெருங்கடல் | Great Sea |
| பலத்தினை | Palestine |
| கலிலை | Galilee |
| நசரை | Nazara ( Nazareth ) |
| பாபிலனை | Babylon |
| பாரசிகம் | Persia |
| கிரிகம் | Greece |
| எருசலை | Jerusalem |
| ஒதனை | Jordan |
| பேரை | Perea |
| பத்தூர் | Decapolis |
| கப்பணம் | Capernahum |
| கலிலைக்கடல் | Sea of Galilee |
| திவரியேரி | Lake of Tiberius |
| வெல்லை | Bethlehem |

| | |
|---|---|
| கரியதம் | Kerioth |
| அசிரியம் | Assyria |
| நினிவை | Nineveh |
| மகதலை | Magdala |
| கேரசை | Kerse |
| வேற்சதை | Bethsaida |
| கென்னசரை | Gennesareth |
| பினிகம் | Phenecia |
| சீதனம் | Sidon |
| பிலிபி கேசரி | Caseraea Philippi |
| தீரம் | Tyre |
| சமரி | Samaria |
| எரிகம் | Jericho |
| ஒலிவமலை | Mt of Olives |
| வேதனி | Bethany |
| வெற்பகம் | Bethphage |
| கெற்சமனை | Gethsemane |
| சிலவம் | Siloam |
| அந்தனிக்கோட்டை | Fort of Antony |
| பிரத்தரியம் | Praetorium |
| சிரனை | Syrene |
| ஆபிரிகம் | Africa |
| இலிபி | Libia |
| கொல்கதை | Golgatha |
| அரிமத்தி | Arimatthea |
| எபிரயம் | Hebrew ( language ) |
| அரமைகம் | Aramaic |
| சிரியகம் | Syriac ( language ) |
| சனதரம் | Sanhedrim |
| தினாரம் | Denarius |
| பேசகவிழா | Pascha ( Passover ) |
| நீசான் | Nisan ( month ) |

# பொருளடக்கம்

## முற்பகுதி

பக்கம் 15—27



## பிற்பகுதி

28—55

## மூவதுபிரிவு

புறநாட்டலைவு

## படலம் IV

### பரதேசசஞ்சாரம்



## நால்வதுபிரிவு

### ஊதைந்தோண்டு



## படலம் V

### சீமூர்தம்முட்செய்த திருப்பணி

பக்கம்



## படலம் VI

### எருசலேத் திருப்பணி

### இன்னல்நாள் ஆறு

ஞாயிற்றுக்கிழமை

பக்கம்

திங்கட்கிழமை



செவ்வாய்க்கிழமை



புதன்கிழமை



வியாழக்கிழமை

பக்கம்

### வெள்ளிக்கிழமை



### ஏசு உபதேசமொழி சில



## படலம் VII



### பிற்கட்டு

# குறிப்பு

பலத்தினைப்படம்: வனிதையார் ஒருவர் பதுமகரத்தால் வரைந்தது.

ஏசு ஓவியம் : ஓவியமன்னர் ஓவுமனர் மனோபாவனையாற் சித்திரித்தது.

ஆயோலை திருத்த எனக்கு உதவினர் என்மகளார் ஒருவர்.

இந்நூல் அச்சுப்பிரதியின் நலமெல்லாம் கோப்பார் மோசயர் ஆற்றலால் வந்தவை.

# ஏசு வரலாறு

## கடவுள் வாழ்த்து

“மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.”

# முதற்படலம்

பெற்ருே ரியல்பு, பிறப்போ டிளமை,
உற்ற பயிற்சி உரைக்கும்இப் படலம்.

## பெற்ருேர் ; பிறப்பு ; இளமை ; பயிற்சி.

**ப**ண்டைக்காலத்தில் விளங்கிய இராச்சியங்களுட் தனக்கு உயர்வும் ஒப்பும் இல்லாதது உரமையே.* உரமைப்பெரும் பதியில் வேந்தர்வேந்தன் அகுத்து சீசர் செங்கோல்செலுத்திய காலத்தின் பிற்பகுதியில், நிலநடுக்கடல் எனும் பெருங் கடலுக்குக் கிழக்கிலுள்ள பலத்தினைநாட்டில், கலிலே மாகாணத்தில், நசரைப்பதியில், சாதியிலும் சமயத்திலும் ஊதர், சூசையார் என்னும் பெயர்கொண்ட தச்சனுர் ஒருவர், வாழ்ந்தார். இவர் பொருட்செல்வத்திலுங் கல்விச் செல்வத்திலும் வறிஞராயினும் கடவுளது திருவடியைக் கனவிலும் மறவாதவர், அறங்குடிகொண்ட நெஞ்சினர். இவருக்கு வாழ்க்கைத்துணையாக வாய்த்தவர் மரியம்மையார். மனைவியாரும் கணவனுர்போலவே கடவுளிடத்தன்பும் நற்குண நற்செய்கைகளும் நிரம்பப்பெற்றவர். இருவரும், மணியும் ஒளியும்போல, உடலிரண்டு உயிரொன்றென இல்லறம் நடத்து நாளில், இறைவனது திருவருளினலே இவருக்குப் புதல்வர் ஐவரும் புதல்வியர் சிலரும் பிறந்தனர். புதல்வர் ஐவருக்கும் முறையே (ஓசுவன்,) யாகவன், சூசை, ஊதன், சீமன் எனப் பெயரிட்டார் பெற்ருேர். புதல்வியர்பெயர் அறியேம். ஓசுவன் என்னுஞ்சொல்லே ஏசு என மருவிற்று. மக்களெல்லாரும்

* ரோமா உரமை எனத் திரிந்தது.

உடலினும் அறிவினும் நாளொருவண்ணம் பொழுதொரு மேனி என வளர்ந்தார்.

இவருள் மூத்தபிள்ளையார் ஏசு மிகக் கூரிய மதியினர். அக்காலத்தில் அந்நாட்டில் அவர்நிலையில் உள்ள பிள்ளைகளெல்லாருக்குங் கிடைத்த பயிற்சியெல்லாம் ஏசுவுக்குங் கிடைத்ததென்பதில் ஐயமின்று. பெற்றோரிருவருங் கடவுளடியார் என்பதும் அறங்கிடந்தநெஞ்சினர் என்பதும் அன்பே யாக்கையாகக்கொண்டவர் என்பதும் உண்மையாகலின், தம் மக்களெல்லாரையுந் தக்கபடி வளர்த்துவந்தார் என்பது சொல்லாமலே அறியத்தக்கது.

ஏசு கூரியமதியினரேயாயினும் பிஞ்சிற்பழுத்தவர் அல்லர். சிறுவர் எல்லாரையும்போலவே படிப்படி வளர்ந்துவந்தனரேயன்றி அவரிடம் விசேஷமொன்றும் விளங்கவில்லை. வீட்டிலே தம்பியர் தங்கையரோடும், ஊரிலே பிள்ளைகளோடும் விளையாடி வந்தார். பெற்றோரிடத்தும் ஊர்ப்பள்ளிக்கூடத்திலும் படித்துவந்தார்.* ஏசு ஓதாதுணர்ந்தவரல்லர். மனிதருக்குள்ள அறிவெல்லாம் கல்வி, கேள்வி, கவனம், அனுபவம் என்னும் நால்வகை வழியில் வருவன. ஏசுவுக்குள்ள அறிவும் இவ்வாறே வந்த அறிவாம். பெற்றோர் கலைஞர் அல்லர், எழுத

* ஊதாது சமயநூற் திருமுறைகளுட் பெரும்பான்மைய எபிரயமொழியில் எழுதியன. ஏசு பிறப்பதற்கு இருநூறு ஆண்டுகட்குமுன்னர் எபிரயமொழி பேச்சுவழக்கற்றது. அதன்பின் பலத்தினநாட்டிலிருந்த ஊதர் அரமைகம் எனும் பாஷை பேசிவந்தனர். ஏசு பேசின பாஷையும் அரமைகமே. எபிரயமொழியிலுள்ள நூலெல்லாம் வாசிக்கும் வன்மை ஏசுவுக்குண்டு. இதை இவர் கற்றது நசரைப்பள்ளிக்கூடத்திலேதான். அரமைக மொழி எபிரயத்திற் சிதறித்திரிந்த மொழியே. இதிலும் சில நூல் எழுதப்பட்டுள்ளன.

வாசிக்கத் தெரிந்தவர். நமதுநாட்டில் கிராமவாசிகளுக்கு இராமாயணக்கதை, மகாபாரதக்கதை, பாகவதக்கதை, காந்த புராணக்கதை, பெரியபுராணக்கதை, திருவிளையாடற்புராணக் கதைகள் தெரிந்துள்ளதுபோல, பலத்தினநாட்டில் யூத ஸ்திரீபுருஷர் யாவரும் தம் சமயநூற் திருமுறைகளிற் கூறியுள்ள கதைகளெல்லாம் நன்கறிந்தவர். பெற்றூர் மக்களுக்கு இக்கதைகளைச் சொல்லிவருவர். இவ்வாறே ஏசுவும் தம் பெற்றூர் கதைசொல்ல, அவற்றைச் 'செவிவாயாக நெஞ்சுகளனாக'ப் பிள்ளைப்பருவத்திற் கற்றூர். நசரையிலிருந்த பள்ளிக்கூடம்* பெருங்கல்லூரியன்று, சிறுவர்சிறுமியர் எழுதவாசிக்கக் கற்கும் சிறுபள்ளிக்கூடமே. இப்பள்ளிக்கூடம் யூதர்ப்பள்ளியைச்சேர்ந்தது. இங்கே ஏசுசென்று, உபாத்தியாயர் கற்பித்தவற்றைக் கற்றுவந்தார்.

இவற்றைத்தவிர ஏசுகற்றவை கவனத்தாலும் அனுபவத்தாலும் வந்தவை. வீட்டிலும், பள்ளிக்கூடத்திலும், கடைத்தெருவிலும், வயலிலும், மலையிலும், சோலையிலும், மற்ற இடங்களிலும், இரவிலும்பகலிலும், பூமியிலும்வானமண்டலத்திலும், கண்ணூற்காணக்கூடியவையெல்லாங் கண்டனர், காதாற் கேட்கக்கூடியவையெல்லாங் கேட்டனர். இவ்வண்ணமே ஏனையபொறிகளாலும் அறிவடைந்தனர். இவையெல்லாம் ஞாபகம் என்னுந் திரைச்சீலைகளிலே பல்வகைப் படங்களாகப் பதிந்தன. ஞாயிறும் திங்களும் விண்மீன்களும் முகிற்படாங்களும் அவர் கண்ணிலும் உள்ளத்திலும் விளங்கின. புள்ளும் விலங்கும், புல்லும் பூவும், மணியும் பதரும், மரமுஞ் செடியும், மழையும் வெயிலும், பனியுங் காற்றும், தீயும் நீரும் அவரோடு பேசின. அவரும் அவைபாற் கற்றுவந்தனர்.

* பள்ளியின் கூடமே பள்ளிக்கூடம். பள்ளிஎன்பது யூதரார் தொழும் இடம். பள்ளிக்கூடம், ஆகுபெயர்.

இவையேயன்றி, வீட்டிலும் நாட்டிலுமிருந்த சிறுவர்சிறுமியர், ஆடவர்அரிவையர், செல்வர்வறிஞர், ஆண்டார்அடியார், கணவர்மனைவியர், பெற்றூர்மக்கள், நல்லார்பொல்லார், விற்பார் கொள்வார், கடன்கொடுப்பார் கடன்வாங்குவார் யாவரையுங் கவனித்து, உலக இயல்பு இவ்வகைத்து என அறிந்தார் ஏசு.

கடவுள்ஒருவர் உளரென்பதும் அவரை வணங்கும்வகை இவ்வகை என்பதும் தாய்தந்தையரும் உபாத்தியாயரும் போதிக்க, அப்போதனையைக் கடைப்பிடித்து, கடவுளை உளம் மொழி மெய் என்னும் முப்பொறியாலும் வணங்கி வந்ததுமன்றி, அவரை அறியும் அறிவெல்லாம் எவ்வெவ்வகையால் அடையலாமோ அவ்வவ்வகையால் அடைந்துவந்தார் ஏசு. இவற்றூல், கடவுள் தமக்குத் தந்தை, தாம் கடவுளுக்குப் பிள்ளை என்னுந் தெளிவு பிறந்தது. இத்தெளிவு நாட்செல்லச் செல்ல வலியுற்றது. கடவுளைப்பற்றிய அறிவு, கல்வியறிவு கேள்வியறிவுகளோடு நில்லாது உள்ளங்கைநெல்லிக்கனி போலத் தெளிந்து விளங்கினது.

"திக்கொடுகீழ் மேலாந் திருவருளின் பெட்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே, பராபரமே."*

ஏசுவின் தாய்தந்தையர் செல்வரல்லர், வறியவர் எனவும் சூசையார் சீவனோபாயத்தின்பொருட்டுத் தச்சுவேலைசெய்து வந்தாரெனவும் முன்னமே கண்டுளேம். ஏசுவும் தந்தையார் தொழிலறையிற்சென்று அவருக்கு உதவிசெய்தும் தச்சு வேலைசெய்ய அவர்பாற் பயிற்சியடைந்தும் வந்தார். ஏசு காளைப்பருவம் அடையுமுன்னரே தந்தையார் பரமபதஞ் சேர்ந்தனர். அன்றுமுதல் ஏசு அன்னையாரையும் தம் உடன் பிறந்தாரையும் ஆதரிப்பது தங்கடன் என உணர்ந்து, நெற்றி வியர்வை நிலத்திலொழுக, "தச்சன்மகன் தச்சன்" என முப்பதுவயதுவரையும் உழைத்துவந்தனர்.

* தாயுமானவர் பாடல்.

# இருவது படலம்

கடவுள் அரசியல் கழறக் கேட்டு,
தீய கடிந்து, தீக்கைபெறு படலம்.

## கடவுளரசியல்; ஓகனமுனிவரர்; ஏசு திருமஞ்சனம்; உளப்போராட்டம்

**ப**லத்தினே உலகத்தில் மிகச்சிறியநாடுகளில் ஒன்று. ஆயினும் ஒருகாலத்தில் அந்நாட்டார் வேற்றரசர்ஒருவருக்குந் திறைகொடாது, தம் அரசரே தம்மைஆள, வாழ்ந்து வந்தனர். அக்காலம் ஒழிந்தது. பின் பாபிலனே, பாரசிகம், கிரிகம் முதலிய பலநாடுகளின் அரசர், ஒருவர்பின் ஒருவராய்ப் பலத்தினேயைப்பிடித்து, ஊதரைச் சுவாதீனபங்கப்படுத்தி ஆண்டார்.

இம்மானபங்கத்தைப் பொறுக்கமுடியாது மக்கபி என்னும் ஒரு குடும்பத்தார் கிரிகியரை முரியடித்து, தாமே சில காலம் அரசியல் நடத்தினர். அஃதும் ஒழிந்தது. உரமைப் பெருநாட்டுச் சேனுபதி பம்பி படையோடுவந்து ஊதரைப் போரில் வென்று, எருசலே என்னும் பெரும்பதியில் உரமைக் கொடியைநாட்டிச் சென்றனன். அதுமுதல் ஊதர்,

"பராசர் கோலொழிந்து, பண்டையிலும் நல்ல
அரசனங்கோன் நம்மையினி ஆள்வதுதான் எக்காலம்?
"நங்கடவுள் நம்மப்பன் நம்பால் மனமுருகி,
நங்கட்கோர் நம்பி நயந்தளிப்ப தெக்காலம்?
"நம்பன் நமைமறவான், நங்களுக்குச் சிங்கம்போல்
நம்பிதரு வான்;அவனே நாங்காண்ப தெக்காலம்.?"

என நினைந்துநினைந்து, " நாம் சுவராச்சியம், மீட்டும்பெறுவது நிச்சயம்; அதற்கு ஐயம் எட்டுணையும் இல்லை. கடவுளால் அபிஷேகம்பெற்ற அரசன்வருவன்; அவனே இப்பரதேசிகளைத் துரத்துவன். அந்தநாள் எந்தநாளோ?" என ஏங்கியேங்கி நாள்கழித்தனர்.

இங்ஙிலையிலே, ஓகனர் எனப் பெரிய முனிவரர்ஒருவர், ஒட்டகமயிர் உடையினர், தோல்வார் இடையினர், வளர்ந்து முறுகின சடையினர், வெட்டுக்கிளியும் காட்டுத்தேனும் நீரும் அன்றி வேறொன்றும் உண்ணு விரதியர், பாலைவன வாசியர் திடீரெனத்தோன்றி, உபதேசஞ்செய்யத் தலைப்பட்டனர். நாடுமுழுதும் அவரது உபதேசத்தைக் கேட்கக் கூடிற்று. தம்பால் வந்தவரை நோக்கி, இடிபோற்கழறி உபதேசித்தனர் ஓகனர். அவர் உபதேசம் வருமாறு:

" கிட்டிற்று கடவுளரசு. மறமெல்லாம் ஒழிமின். இப்பொழுதே மரங்களின் வேரில் வைத்துளது கோடரி. பயன் கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு எரிபுகும்நாள் அடுத்தது. தேவகோபத்துக்குத் தப்பிப்பிழைக்க வழிதேடுமின். நும்பாவம் ஒவ்வொன்றையும் மறையாது எடுத்தோதி, அவற்றைக் கடிந்து, இந்த ஓதனையாற்றில் முழுகுமின். இவ்வண்ணஞ்செய்வீரேல் கடவுள் நும் பிழைகளையெல்லாம் நுமக்கு மன்னித்தருளுவர்.

" நாம் நாடிய மன்னனைக் கடவுள் அருளும் நாளும் கிட்டிற்று. அம்மன்னவன் பாதகுறட்டைக் குனிந்து தொடவும் அவற்றின்வாரை அவிழ்க்கவும் நான் அருகனல்லேன்."

இவ்வாறு ஓகனர் இடித்துரைத்தவற்றைக் கேட்டவருட் பல்லாயிரவர் உளம் மொழி மெய்களால் தாம் செய்த தீமையையெல்லாம் எண்ணியெண்ணி அழலிடைப்பட்ட மெழுகுபோல உருகி, தம்தம் பிழைகளை எடுத்தோதி, ஓகனமுனிவரர்

சொற்படி ஓதனேயாற்றிற் தீர்த்தமாடி, 'உய்ந்தேன், உய்ந் தேன்' என ஆர்ப்பரித்தனர். அவரை விளித்து ஓகனமுனி வரர், "நீவிர் உள்ளந்திரும்பி நல்வழிப்புகுந்தது உண்மை யேல், அதனை ஒழுக்கத்திற் காட்டுமின்" என உபதேசித்தனர்.

இப்படி ஓகனமுனிவரர் செய்த உபதேசத்தைக் கேட்க வந்த பல்லாயிரவருள் ஏசுவும் ஒருவர். இவர் கலிலேமாகாணத்து நசரைப்பதியை விடுத்து, ஓதனேயாற்றங்கரையையடுத்து, முனிவரர் கூறிய போதகத்தைச் செவியில் மடுத்து, தம் பிழை யெல்லாம் நினைந்திரங்கி,

"எத்தன்மைக் குற்றம் இயற்றிடினும் தாய்பொறுக்கும்;
அத்தன்மை நின்னருளு மன்றோ, பராபரமே"

எனக் கடவுளை வேண்டினர். ஏசு ஆற்றிலிறங்கித் தீர்த்தமாடி, கரையேறிநின்று, இறைவன் திருவருளை எண்ணிக்கொண் டிருக்கையில், அவருள்ளத்தில் ஒருகாட்சி தோன்றிற்று ஆகாயமுகடு பிளவுண்ண அப்பிளவினூடு தேவசத்தி*, புறாச் சிறகடித்து இறங்குகையில் ஒலிக்கும் ஒலியோடு, கீழே வந்து தமக்குட்செல்வதுபோல் உணர்ந்தார்; அப்பொழுதே "நீ என் மகன், உன்னைநான் நேசிக்கிறேன்" எனக் கடவுளே நேரிற் பேசும்வாக்கு ஒலித்தது.

இவ்வரலாற்றை ஆதியிற்கூறும் மார்க்கனுரைஉரை கவ னிக்கத்தக்கது. இங்கே சொல்லுங்காட்சி ஏசு உள்ளத்தில் நிகழ்ந்த காட்சி; அயலில் நின்றவருள் எவரும் ஒன்றுங் கண்டிலர், ஒன்றுங் கேட்டிலர். ஆகாயத்துக்கு முகடில்லை, இல்லாத முகடு பிளவுண்பதில்லை; கட்புலனுக்குப் புறாவுருவம் ஒன்றுந் தோன்றவில்லை; அசரீரிபேசவுமில்லை, காது ஒன் றையுங் கேட்கவுமில்லை. ஆகவே இவையனைத்தும் ஏசுவின்

* கடவுளது கலியாணகுணங்களில் ஒன்று தேவசத்தி. அஃது ஓர் உயர்திணைப்பொருள் அன்று.

மனத்துக்குப் புலப்பட்டவையேயன்றி வேறல்ல. அப்படி யாயின், உருவெளித்தோற்றம்போல, இவையெல்லாம் பொய்யோவெனின், ஐம்பொறியினல் நுகரப்படாதவையெல்லாம் பொய்யோ? பத்தர் அனுபவிக்கும் அனுபவமெல்லாம் ஐம்பொறி அனுபவத்துள் அடங்குமோ? ஏசு ஓதனையாற்றங் கரையிலடைந்த பத்தியனுபவம் பொய்யன்று, மெய்யே.

"பத்தர் அருந்தும் பரமசுகம் யானருந்த
எத்தனைநாட் செல்லும், இறையே பராபரமே.?"

தாம் உள்ளத்திற்கண்ட காட்சியும் கேட்டஒலியும் பெற்ற பத்தியனுபவமும் ஏசுவின்மனத்திற் பெருங்கிளர்ச்சியை உண்டுபண்ணின; எல்லாம் புதியனவாகத் தோன்றின; பல கேள்விகள் எழுந்தன. உடனே அவர் சனக்கூட்டத்தை விட்டு, தனியிடந்தேடி, ஒரு பாலைவனஞ்சென்று பலநாட் கழித்தனர். பற்பல ஐயம் எழுந்தன.

"திடமிலா எனது நெஞ்சிற் சிந்தனை ஐயம் அச்சம்
கடலலை போல் முன்னும் பின்னுமே கடுகி வாட்டும்;
படையுடன் பொரும்போர் போலப் பாழுளந் தனிற்போ [ரேனும்
கடவுளே அப்பா வந்தேன் கடைக்கணி என்னை நீயே."

என் இராப்பகல் இறைவனடிநீழலில் எண்ணமெல்லாம் இருத்தவே மனத்தில் அமைதி பிறந்தது.* அதன்பின் ஏசு மீட்டும் ஓதனையாற்றங்கரையில், ஓகனமுனிவரர் சிஷரோடு தாமும் ஒருவராய், சிலநாட்கழித்தனர்.

* பாலைவனத்தில் ஏசுவுக்கு நிகழ்ந்த ஐயம், சோதனை, போராட்டம் எல்லாம் சாத்தன் எனப் பெயரிய பிசாசதிபதியினல் நிகழ்ந்தன என்பது மார்க்கனர் கூற்று. கௌதமசித்தார்த்தரை, அவர் புத்தர்ஆதற்கு முன்னும் பின்னும், மாரன் என்பான் பலமுறை சோதித்ததைப் புத்தசரித்திரத்திற் காண்க.

# மூவது படலம்

## கலிலேத்தொண்டு

### முற்பகுதி

இறைவழி பாட்டை எவர்க்குமெடுத் துரைக்கும்
ஆசா னுவதை அறையும்இப் படலம்.

### ஏசு குருமூர்த்தியாக எழுந்தருளியது

**ப**லத்தினாடு ஐந்துமாகாணம் உள்ளது. அவற்றுள், கலிலே பேரை என்னுமிரண்டையும் குறுநிலமன்னன் ஒருவன் ஆண்டுவந்தான். இவன்பெயர் ஏரதன் அந்திப்பன். இவன் உரமை வேந்தர்வேந்தனுக்குந் திறைகொடுப்பவன். எந்நாட்டிலும் குறுநிலமன்னர் பெருமன்னருக்கு அடிமைகள், அவர் அடியில் தம் முடிவைத்து இறைஞ்சுபவர். இப்படி இவர்செய்யும் வணக்கமெல்லாம் வெறும் நாடகம். இவ்வாறு செய்யாவிடின் தந்நிலை கெடும் என்னும் அச்சமுடையார் இவர். ஏரதன்அந்திப்பனும் உரமை வேந்தர்வேந்தனை அடிவணங்குபவன். இவன் சாதியில் ஊதனேனும், சுதேசாபிமானம் சமயாபிமானம் சிறிதுமில்லாதவன். 'சுவராச்சியங் கிட்டிற்று' என ஓகனமுனிவரர் பிரசங்கித்துவருவதை இவன் கேள்வியுற்று, "ஓகனன் இப்படிப் போதிப்பது இராசதுரோகமன்றோ? இவன் சொல்லும் சுவராச்சியம் வரின் என்கதி யாதாம்? இத்துரோகிகள் பெருகி நாடு கேடுறுமுன் யான் செய்வன செய்தல்வேண்டும்.

'வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்'

என்பது பழமொழி" என எண்ணி, காவற்சேவகரையனுப்பி, ஓகனமுனிவரரைப்பிடித்துச் சிறைப்படுத்தினன். இப்படிச் செய்தபின், கலகமெல்லாம் ஒழிந்தது என்று மனப்பால் குடித்தான் ஏரதன். 'கிணறுவெட்டப் பூதம்புறப்பட்டது போல' முடிந்தது அவன்செயல். ஓகனமுனிவரர் சிறையுற்றதைக்கண்ட அவரது சீஷருட் சிரேஷ்டராகிய ஏசு, ("என்குரு சிறைப்பட்டாலும் அவர் வாக்குஞ் சிறைப்படுமோ? ஓகனமுனிவரர்வாக்குத் தேவவாக்கன்றோ? நான் வாளாவிருத்தல் சரியன்று; என்குரு செய்துவந்த கைங்கரியத்தை நான் செய்யத் தலைப்படுவேன்") எனத்துணிந்து, கலிலைநாட்டுக்குத் திரும்பிப்போய், கப்பணம் என்னும் பதியில் உபதேசஞ்செய்யத் தொடங்கினர்:

"கிட்டிற்று கடவுளரசு. கடவுளருள் தேடுமின். மறம் ஒழிமின். இவ்வண்ணஞ்செய்வீரேல் நும் பாவத்தையெல்லாம் கடவுள் மன்னிப்பார்."

கப்பணம் எனும்பதி நசரைக்கு வடகிழக்கே இரண்டரைக் காத*தூரத்தில், கலிலைக்கடல் என்னும் ஏரியின் வடமேற்குக்கரையில் இருந்தது. கலிலைக்கடல் திவரியேரியெனவும் பெயர்பெறும். இஃது உண்மையில் ஓர் ஏரியன்று; வடக்கிருந்து தெற்குநோக்கிப்பாயும் ஒதனையாறு இவ்விடத்திலுள்ள பள்ளத்தால் ஏரியுருவங்கொண்டு, இதற்குத் தெற்கே பின்னும் ஆறுவடிவுகொண்டு ஓடும். இவ்வேரியுட் பலவகை மீன் வாழும். ஆகவே, கரைகளிற் செம்படவர் பலர் வசித்தனர். கப்பணப்பதியிலும் வலைஞர் பலருண்டு. ஒருநாள் ஏசு ஏரிகரைவழியே நடந்துபோகையில், வலைஞரிருவர், உடன்பிறந்தார், அந்திரன் சீமன் என்னும் பெயரினர், ஏரியில் வலை

* காதம் ஏறக்குறையப் பத்துமைல் கொண்டது.

வீசுவதைக்கண்டு, "நீவிர் இருவீரும் நும்தொழிலை விடுத்து, என்பின் வம்மின்" என்றார். இவரிருவரையும் ஏசு இதன்முன் அறிந்தவர்போலும். ஏசு அழைக்க, அந்திரனும் சீமனும் மீன்பிடிக்குந்தொழிலைவிட்டு ஏசுவுக்குச் சீஷராயினர். பின்னொருநாள் ஏசு கப்பணப்பதியில் ஏரிகரைவழியே நடந்து செல்கையில், ஒரு வள்ளத்தில் முதியவனொருவன் தன் மக்களிருவரோடு வலைதிருத்துவதைக்கண்டு, இளைஞரிருவரையும் தமக்குச் சீஷராகும்படி அழைத்தார். அவரிருவரும் தம் தந்தையைவிட்டு ஏசுவுக்குச் சீஷராயினர். யாகவன் ஓகனன் என்பன அவ்விருவருக்கும் பெயர்.

கப்பணப்பள்ளி.—அடுத்த *ஒய்வுநாட்காலையில் ஏசு கப்பணத்திலுள்ள பள்ளிக்குச்சென்று உபதேசஞ்செய்தார். அப்பொழுது பேய்பிடித்தவனொருவன் அவரைநோக்கி, "ஓ நசரையாரே, நீர் தேவபத்தர்; உம்மை நான் அறிவேன். எங்களை அழிக்கும்பொருட்டு வந்தீரோ? எங்களிடம் உமக்கென்ன அலுவல்?" என உரத்துக் கதறினன். ஏசு, "மூடு வாயை. இவனைவிட்டு இக்கணமே புறப்படு" என உரப்பினர். உடனே பேய், தான் பிடித்திருந்தவன் உடலமெல்லாம் மிக

* ஆறுநாள் வேலைசெய்தல்வேண்டுமென்பதும், எழுவதுநாள் சனிக்கிழமையில் எல்லாவேலையினின்றும் ஓய்ந்திருந்து பள்ளிக்குச்சென்று கடவுளைத்தொழவும் திருமுறைகளை வாசிக்கக்கேட்கவும் அங்கு குருமார்செய்யும் பிரசங்கத்தைக் கேட்டு அவற்றின்பொருளைச் சிந்திக்கவுங் கடவர் என்பதும் ஊதசமய ஆசாரம்.

பொழுதுபட்டதுமுதல் அடுத்தநாட்பொழுதுபடுமளவும் ஒருநாள் எனக்கொண்டனர் ஊதர். ஆகவே, வெள்ளிக்கிழமையிற் பொழுதுபட்டதுமுதல் மறுநாட்பொழுதுபடும்வரையும் சனிக்கிழமையாம். இஃதே ஊதருக்கு ஒய்வுநாள். சனிக்கிழமையில் பொழுதுபட்டவுடனே ஞாயிற்றுக்கிழமை தொடங்கும்.

நடுங்க, அவனைவிட்டு, உரத்தசத்தத்தோடு கனைத்து, வெளியே போயிற்று.

இதைக் கண்டவரெல்லாரும் பிரமித்தனர். கூட்டம் கலைந்தது. வெளியே சென்றவர் பலவாறு பேசினர். "இஃதென்னை?" என்றார் சிலர்; "புதுப்போதனையிது" என்றார் சிலர்; "பேயையும் பணிக்கின்றார் இவர்" என்றார் சிலர்; "பேயும் இவருக்குப் பணிகின்றன" என்றார் சிலர். பள்ளியில் நிகழ்ந்த நிகழ்ச்சியெல்லாம் ஊர்முழுதும் பரம்பிற்று. பரம்பவே, ஏசுவின் புகழும் எங்கும் விளங்கிற்று.

சீமன் மாமி.—பள்ளியைவிட்டுப் புறப்பட்ட ஏசு, ஒகனயாகவர் தம்முடன்வர, அந்திரசீமர் வீட்டுக்குப் போயினர். ஆங்கு சீமன்மனைவியின்தாய் வெப்புநோயால் வருந்துவதைக் கேள்வியுற்று, அவள்படுக்கைக்கருகிற் சென்று, அவள் கையைத் தமதுகையாற்பற்றி, "எழு" என்று தூக்கினர். உடனே வெப்புநோய் அவளைவிட்டது. அவள் எழுந்து, ஏசுவையும் அவரோடு வந்தவரையும் உண்டிமுதலியன படைத்து உபசரித்தனள்.

நோயர்; பேயர்.—அற்றைப் பொழுதுபட்டபின் ஓய்வுநாள்முடியவே, கப்பணத்திலுள்ள பிணியாளரை ஏசுவிடம் ஊரார் கொண்டுவந்தனர். அவரிருந்த வீட்டுவாயிலின் முன் ஊர்முழுதுங்கூடினதுபோற் தோன்றிற்று. தம்மிடங் கொண்டுவந்த நோயாளிகளுட் *பலர்நோயை ஏசு தீர்த்தார்; பேய்பிடித்தவர்களிற் *பலரைப் பேயோட்டினர்.

திரிந்துசெய் திருப்பணி.—அன்றிரா வைகறைப்பொழுதில் ஏசு எழுந்து வீட்டைவிட்டு ஒரு தனியிடஞ்

* "எல்லாரையும்" என்னாது "பலரை" என்றமையால், சிலர் நோய்தீரப்பெற்றிலர், சிலர் பேயோட்டப்பெற்றிலர் என்பது பொருள். இதுவே மார்க்கனார் கருத்தும்.

சென்று அங்கே கடவுளை வேண்டினர். இரவு விடிந்ததும் பலர் ஏசுவைத் தேடிவந்தனர். அவரை வீட்டிற் காணுது சீமனும் பிறரும் தேடிவந்து, ஏசு தனியிடத்திற் பிரார்த்தனை செய்வதைக் கண்டனர். "ஊரார் அடிகளைத் தேடிவந்தனர்" எனச் சீமன் ஏசுவுக்குரைத்தான். "நான் ஏனைய ஊர்களுக்குஞ்சென்று அவ்விடங்களிலும் போதித்தல்வேண்டும்" என்று, வீட்டுக்குத் திரும்பாமலே ஏசு வேறூர்நாடி அகன்றனர்.

"தொழுநோயன்".—இவ்வண்ணம் ஊர்தோறுஞ் சென்று உபதேசஞ்செய்துவருகையில் ஒருநாள், பாலைவனத்திலே *தொழுநோயன் ஒருவன், வழியிற் செல்லும் ஏசுவிடம் வந்து, "நமக்குச் சித்தமேல், என்னைச்சுத்தனுக்க நமக்கு இயலும்" என இரந்தனன். அவன் நிலையைக் கண்ணுற்ற ஏசு, நெஞ்சில் இரக்கம்மீதூரத் தம்மைமறந்து, அவனைத் தம் கையாற்தொட்டு, "நீ சுத்தனுவதே என்சித்தம்" என, தொழுநோய் தீர்ந்து அவன் சுத்தனுனன். அப்பொழுது ஏசு அவனைப்பார்த்து, "இங்குநிகழ்ந்ததொன்றையும் நீ எவருக்குஞ் சொல்லாதே. ஆயினும் நீ உன் ஊருக்குட்செல்ல அருச்சகர்பத்திரம் அவசியமாகலின், அவரிடஞ்சென்று, நீ சுத்தனுனதை அவர்அறிய உன்தேகத்தை அவருக்குக்காட்டு. மோசயர்நெறியிற் கூறியுள்ளபடி நிவேதனத்துக்குவேண்டியவற்றைச் செலுத்துவையாயின் அப்பத்திரம் உனக்குக்

* ஈண்டு தொழுநோய் என்றது மாருக் கொடுநோய் குஷ்டரோகம் அன்று. ஆசைக்கண்டத்தின் பலநாடுகளில், சில சருமவியாதிகளைக் "குஷ்டரோகம்" என்பர். தமிழகத்திலும் "வெண்குஷ்டம்" என்றது இப்படிப்பட்ட நோயையே. ஏசு "குஷ்டரோகி"களது "குஷ்டத்தை"த் தீர்த்தார் என்பதும் இவ்வகைக் "குஷ்டத்தை"யே.

கிடைக்கும்; அதன்பின்தான் நீ உன் வீட்டுக்குப்போதல் இயலும்" என்ருர். அவனே போனபோனஇடமெல்லாம் தன் தொழுநோயைத் தீர்த்தவர் ஏசுஎன்று வாய்ப்பறையடித்தான். தொழுநோயனைத் தொட்டகாரணத்தால் சிலபகல் ஏசு ஓர் ஊருக்குள்ளுஞ் செல்லல் இயலாதாயிற்று.

புடைநோயன்.—பல ஊர்களில் உபதேசஞ்செய்தபின் ஏசு மீட்டும் கப்பணத்துக்கு வந்து, அங்கு சிலநாள் தங்கிஞர். இவர் கப்பணத்துக்கு வரும்பொழுதெல்லாம் தங்குவது சீமன்வீட்டிற்போலும். சீமன்வீடே இவருக்கு விடுதி போலும். ஒருநாள் வீட்டிலே பலர் கூடிவந்திருக்கையில் ஏசு தருமோபதேசஞ்செய்தார். அப்பொழுது பாரிசவாதத்தால் நோய்ப்பட்டாஞெருவனை நால்வர் படுக்கைமீது தூக்கிவந்தனர். வந்தவர், சனக்கூட்டத்தால் வீட்டிற்குட்போக இயலாது, பிணியாளியை வீட்டின் மேற்றளத்துக்குக் கொண்டுபோயினர். அவர் கூரையிற் சில ஓட்டை அகற்றி, படுக்கையின் நாலு மூலையிலும் கயிறுகட்டி, பிணியாளியை ஏசுசந்நிதியில் இறக்கினர். ஐவரது நம்பிக்கையையுங்கண்ட ஏசு பிணியாளியைநோக்கி, "மகனே, அஞ்சாதே; எழுந்து உன் படுக்கையைச் சுருட்டி எடுத்துக்கொண்டு உன் வீட்டுக்கு நடந்துபோ" என்ருர். அவன் எழுந்து அவ்வாறே செய்தான். இதனைக்கண்ட யாவரும் பிரமிப்படைந்து, "கடவுள் திருவருள் என்னே!" என ஈசனைப் பலவாறுபுகழ்ந்து துதித்தனர்.

இலவியன்.—ஒருநாள் ஏசு கப்பணப்பதியில் ஏரிகரை வழியே உலாவுகையில் அவரைச் சனக்கூட்டம் சூழ்ந்தது. அவர்களுக்கு அவர் உபதேசஞ்செய்தார். அதன்பின் அவர் திரும்பிப் புறப்படுகையில், அங்கிருந்த தீர்வைச்சாவடியில் இலவியன் எனப் பெயரிய தீர்வைத்தண்டற்காரஞெருவனைக்

கண்டு, "நீ என்பின் இப்பொழுதே வா" என்றார். அவன் அன்றே அவருக்குச் சீஷனானான். இதற்கு முன்னமே ஏசுவும் இலவியனும் ஒருவரையொருவர் அறிந்து பழகியிருத்தல்வேண்டுமென நாம் எண்ணுதற்கு இடமுண்டு.

ஒருநாள் இலவியன் ஏசுவையும் சிஷரையும் விருந்துக்கழைத்தான். அப்பொழுது அவன் தன் தோழர்பலரை ஏசுவோடு உடன்உண்ணும்படி அழைத்தான். இவன்தோழர் இவனைப்போலவே தீர்வைத்தண்டலாளர் சுங்கக்காரர் முதலியவர். இவரிற்பலர் ஆசாரமுறையிற் தவறினோர். நாட்டார் இவரைப் பாவிகளென அவமதித்து இகழ்வார். இவ்வாறு நாட்டார்புறக்கணித்தவரோடு உடனிருந்துண்ண ஏசு சிறிதுங் கூசினாரில்லை. இதைக் கேள்வியுற்ற சாத்திரிமார் சிலர் ஏசுவின் சிஷரைப்பார்த்து, "உங்கள்குரு பாவிகளோடு உடனிருந்து உண்ணுகின்றாராமே, இது முறையோ?" என்றார். இஃது ஏசுவின்செவியில்விழ அவர், "ஆரோக்கியமுடையாருக்கு மருத்துவன் ஏன்? பிணியருக்கன்றோ மருத்துவன்வேண்டும்? அறவோரையல்ல, மறவோரையே நான் தேடுகின்றேன்" என்றார்.

உபவாசம்.—நமது பஞ்சாங்கங்களில் இந்த இந்த நாள் உபவாசதினம் என்றிருத்தல்போல ஊதருக்குள்ளும் வருஷத்தில் இந்தஇந்தநாளில் உபவாசம் செய்தல்வேண்டும் என விதித்திருந்தது. அவ்வாறே ஊதசமயத்தார் உபவாசஞ்செய்து வந்தனர். ஏசுவும் சீஷருமோவெனின் இவ்வுபவாசதினங்களில் உண்டி வெறுத்திலர். "நும்சீஷர் இவ்வாறு முறைதவறி வாழ்வது நியாயமோ?" என, ஏசுவைக்கேட்டார் சிலர். அவருக்கு ஏசுகூறிய விடை: "பழந்துருத்தியில் புதுத்திராட்சைரசத்தை அடைத்து

வைத்தல் புத்தியன்று; அப்படிச்செய்யின் துருத்திவெடித்துத் திராட்சைரசம் எல்லாம் சிந்திவிடும். அன்றியும், பழைய ஆடையிற் கிழியலைப் புதுத்துணியால் ஒட்டுப்போடல் தகாது; ஆடையை வெளுக்கும்போது புதுத்துணி திரைய ஆடை முன்னிலும் அதிகம் கிழியும்."*

**விலைமகள் அருள்பெறல்.**—ஒருநாள் சாத்திரி ஒருவன், சீமன்என்னும் பெயரினன், ஏசுவை விருந்துக்கழைத் தனன். அவன்வேண்டுகோளுக் கிசைந்து ஏசு அவன் வீட்டிற்சென்று விருந்தயர்ந்தனர். ஏசு வாழ்ந்தகாலத்தில் ஊதரில் ஆடவர், ஒருபீடத்தின்மீது உண்கலங்களை வைத்து, விரித்த கம்பளங்களில் தாம் ஒருபுறஞ்சார்ந்து, தலைநிமிர்ந் திருக்க, காலிரண்டையும் நீட்டிக்கொண்டு, உண்பது வழக்கம். சீமன்வீட்டில் ஏசு விருந்தயரும்போது இருந்த இருக்கையும் இவ்வாறே. ஏசு விருந்தயரும்பொழுது, அவ்வூரில்

* "நான் விரும்பும் பொருளை இன்று எனக்குக் கொடுத்தாற் தான் உண்பேன், அதுவரையிலும் உண்ணேன்" எனத் தன் மகன் சொல்வதைக்கேட்குந் தாய், "ஐயோ! என்மகன் உண வின்றி வருந்துவதை நான் எவ்வாறுகாண்பேன்?" எனமயங்கி அவன் கேட்டதை உடனே தருவள். கடவுளும் இப்படிப் பட்ட பேயரெனப் பலர் நினைத்து, உபவாசஞ்செய்யின் தாம் விரும்பின எவற்றையும் கடவுள் ஈவரென மனப்பால் குடிக் கின்றனர். ஏசு இங்கு கூறிய வார்த்தை இப்படிப்பட்ட வர்க்கே.

மெய்ஞ்ஞோன்போ பசியைமறந்து உணவைமறந்து தியா னம் பூசைகளில் மனம் ஈடுபடுதல். அப்படிப்பட்ட உப வாசத்தை ஏசு இகழ்ந்திலர்.

வேறுசிலர் தங்கள் உடலின் சேட்டைகளை ஒடுக்க உண் டியைக் குறைப்பர். அதுவும் பிழையன்று.

எவருமறிந்த விலைமகளொருத்தி அங்கு வந்தனள். இவள் இதற்கு இரண்டொருநாளைக்கு முன்னே ஏசு ஏரிகரையிற் செய்த உபதேசத்தைக் கேட்டவள்; கேட்டவுடனே தன் வாழ்க்கையின் தீமையைக்கண்டு, உணர்ந்து, அதனை முற்றும் வெறுத்துத்தள்ளினவள்; கடவுள் திருவருள் ஒன்றையே நாடத் துணிந்தவள். இவள் விலைமகள் என்பதுவே சீமன் அறிந்தவிஷயம்; கடந்த இரண்டுநாளைக்குள் அவள் மனத்திலும் ஒழுக்கத்திலும் விளைந்த மாறுதலொன்றும் சீமன் அறிந்திலன்.

இவள், சீமன்வீட்டில் ஏசு உண்ணுமிடஞ்சென்று, அவர் அடியருகே இருந்து, கூந்தல் அவிழ்ந்துசோர, ஒன்றும் அறியாளாய், இருகண்ணிலிருந்தும் கண்ணீர்சொரிந்து ஏசுவின் அடியை நனைப்ப, தன்கூந்தலைக் கையாற்பற்றி ஏசுவின் அடிகளைத் துடைத்து, அவையிரண்டிலும் தன்னிதழைவைத்து ஓயாது முத்தஞ்செய்தாள். இஃதெல்லாங்கண்ட சீமன், " இஃதென்னை விபரீதம்? இவளோ வேசை! இவள் இப்படிப் பட்டவளென்றதை இக்குருமூர்த்தி அறிந்திலர்போலும்! இவர் குரு என்பது உண்மையோ?" எனத் தன் உள்ளத்திற் சிந்தித்தான். இவன்எண்ணமெல்லாம் இவன்முகத்திற் கண்டனர் ஏசு.

"சீமனே, உனக்கொன்று நான் சொல்லல்வேண்டும்" என்றார் ஏசு.

"ஐய, சொல்லுக."

"ஓர் ஊரில் ஒருவன் தனிகனொருவனிடஞ்சென்று பன்னூறுபொன் கடன்பட்டான். பின் தான்பட்ட கடனைத் தீர்க்க வகையின்றி, தனிகனிடஞ்சென்று, அவனடியில் வீழ்ந்து, 'ஐய, பொறுத்தருள்க; அடியேன் பட்டகடனைத் தீர்க்க வகையொன்றுமறியேன்' என இரந்தான். கருணை

நிறைந்த தனிகன் இவன்கடனை முழுதும் மன்னித்துவிட்டான். அப்பொழுது கடன்பட்டவன்மனம் எவ்வாறிருக்குமென நீ அறிவாயோ?"

இதனைக்கேட்ட சீமன், "அவன் நெஞ்சம் தனிகனை மிக நேசிக்கும்" என்றான்.

ஏசு, "நீ சொன்னது சரி. நான் இப்பொழுது சொல்வதைக் கேள்: இப்பெண்ணைப் பார்; இவளை வேசையென எண்ணினாய்; இவள் முன் வேசைதான்; கடந்த இரண்டு நாளுள் இவள் மனத்திலும் ஒழுக்கத்திலும் விளைந்த மாறுதலொன்றும் நீ அறியாய்; தன் வாழ்க்கையின் தீவினையையெல்லாம் நினைந்துநினைந்து உணர்ந்து, அவற்றையெல்லாம் வெறுத்துத்தள்ளி, கடவுள் அருள்நாடி நின்றனள்; கடவுள் இவள்செய்த பாவமெல்லாவற்றையும் மன்னித்துவிட்டார்; அதனால் கடவுள்பால் மாறா அன்புபூண்ட உத்தமோத்தமி இவள்; கடவுளடியேன் என்னிலும் அன்புகூர்ந்து என் பாதங்களைத் தன்கண்ணீரால் மஞ்சனமாட்டி, தன் அளகத்தாற் துடைத்து, என் அடியில் வீழ்ந்து ஓயாது முத்தஞ்செய்கின்றாள்; இவள் அன்பிருந்தவா றென்னே!" எனச் சீமனுக்குக் கூறியபின்; அவளைப்பார்த்து, "மகளே, உன்பாவமெல்லாம் கடவுள் மன்னித்தார். நீ பாக்கியவதி" என்றார்.*

"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனை,
பத்திநெறி அறிவித்து, பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்து, சிவமாக்கி எனையாண்ட
அத்தன்எனக் கருளியவா றார்பெறுவார்? அச்சோவே!"

* இவளே பின்னே நாம்காணும் மகதலேமரி என்பார் பலர். அவர் கூற்றுக்கு யாதோர் ஆதாரமும் இல்லை. இவள் வேறு, அவள் வேறு.

"'உன் பாவத்தையெல்லாம் கடவுள் மன்னித்துவிட்டார்' என்ன இவருக்கு அதிகாரமுண்டோ?" என்றார் சிலர். "மருந்தொன்றுமின்றிப் பாரிசவாதத்தை மாற்ற அதிகாரமுடையவர் பாவமன்னிப்புக்கூற அதிகாரமிலரோ?" என்றார் சிலர்.

நசரை நிகழ்ச்சி.—சீஷர் உடன்வர ஏசு தாம் பிறந்த ஊராகிய *நசரைக்குச் சென்றார். அங்கு ஓய்வுநாட் காலையிற் பள்ளிக்குச்சென்று உபதேசஞ்செய்தார். அதனைக்கேட்டார் சிலர், "இவன் மரிமகனலனே?" என்றார். சிலர், "யாகவன், சூசை, ஊதயன், சீமன் என்பார் இவனுக்கு உடன்பிறந்தவரலரோ?" என்றார். "இவனது தங்கையர் இங்கு வாழ்கின்றாரலரோ?" என்றார் சிலர். "தச்சப்பிள்ளைக்கு இந்த அறிவெல்லாம் எப்படிவந்தது?" என்றார் சிலர். இப்படித் தம்முட் பலவாறு பேசுவாராயினர். நசரையில் ஏசுவின் உபதேசத்தை எவருமேற்றிலர். இதனைக்கண்ட ஏசு, "தன் ஊரில், தன் உறவினருள், தன் வீட்டாருள் ஒரு குருவுக்கு மதிப்பில்லை; மறு ஊர்களில் மற்றவர்கள் அவரை மதிப்பார்" என்றார். தம் ஊருக்குப்போய் உபதேசஞ்செய்யின் பலர் தம் சொல்லை ஏற்றுக்கொள்வர் என எண்ணிவந்த ஏசு ஏமாந்து போனார். தம்ஊரார் தம்மை நம்பாததைக்கண்டு ஆச்சரியப்பட்டார் ஏசு.§

* ஊதைமாகாணத்து வெல்லைப்பதியில் ஏசு பிறந்தாரென்னுங் கதை பிற்காலத்தார் கட்டியது. மீகனார் கூறிய தீர்க்கதரிசனம் ஏசுவின் பிறப்பால் நிறைவேறியதெனத் தாபித்தற்பொருட்டு இக்கதை எழுந்தது. ஆதிவரலாறு எழுதிய மார்க்கனார் இதனை அறியார்.

§ ஆறுமுகநாவலர் தம் தமையனார் ஒருவருக்கு ரௌத்திரிஸு ஆடிமீ 27உ எழுதின கடிதத்தில், "யாழ்ப்பாணத்தினாலே உவாந்திக்கப்பட்ட அசுசிப்பிராணியாகிய நான்" என எழுதினர். இவரது பெருமையைச் சென்னபட்டணம் அறிந்து, இவரை மதித்து, இவருக்குச்செய்த சீருஞ்சிறப்புமென்னே!

**எது பெரிது: கடவுள்கட்டளையோ, மனிதர் பாரம் பரியமோ?.**—ஏசு நசரையைவிட்டு மீட்டும் கப்பணமடைந்து பலநாள் அங்கு கழித்தார். ஒருநாள் அவர் சீஷர் உண்டியருந்தப்போகுமுன் கைகழுவாததைக் கண்ட சாத்திரிமார் சிலர் ஏசுவைப்பார்த்து, "உம்முடைய சீஷர் கைகழுவாமற் போசனஞ்செய்வது முறையோ? நம் முன்னோரிடமிருந்து நமக்குவந்த பாரம்பரியங்களை இவர் பராமுகஞ் செய்கின்றனரே" என்றார். அதற்கு ஏசு, "நீவிர் கடவுள் தந்தருளிய விதிவிலக்குக்களைத் தள்ளிவிட்டு, மனிதரால் வந்த பாரம்பரியங்களைக் கைக்கொள்கின்றீர்! நும் பேதைமை இருந்தவாறென்னே! 'உன் தாய்தந்தையரைக் கனம்பண்ணு' எனக் கடவுள் விதித்திருப்பினும் அவ்வாறு செய்யாது, 'அன்னே, அப்ப, என் பொருளெல்லாம் இறைபணிக்குத் தந்துவிட்டேன், உங்களைக் காக்க வல்லேனல்லேன்' எனச் சொல்லும் போலிப்பத்தி பயின்றுளீர். அன்றியுங் கேண்மின்: ஒருவன் உண்ணும்ஊண் அவன் வயிற்றுக்குட்செல்லும்; உள்ளே செல்வன யாதொரு தீங்குஞ்செய்யா; வெளிவருவன செய்யுந் தீமைக்கோ அளவில்லை; கொலை, களவு, காமம், பொய், உலோபம் முதலிய தீய நினைவெல்லாம் உள்ளத்திற் தோன்றி வெளிவருவன" என விடைகூறினர்.

**ஓர் ஓய்வுநாள் நிகழ்ச்சி.**—ஒருசனிக்கிழமை ஏசுவும் சீஷரும் சில கோதுமைவயலினூடு வரம்புவழியே நடந்து சென்றனர். கோதுமை விளைந்திருந்தது. சீஷர் பசித்தவராய், கோதுமைக்கதிரைக்கொய்து கையில்நிமிட்டி உமிகளைந்து மணியைத் தின்றனர்.* இதனைக்கண்டசாத்திரிமார்

* விளைந்திருக்கும் வயலில் வறியவர் கோதுமையைக் கையாற் கொய்து, அவ்விடத்திற்றானே தின்பராயின், அது களவென எண்ணார் யூதர்; தானியத்தை அறுத்து அதை அங்கு தின்னாது கொண்டுபோவதுதான் களவென மதிப்பர்.

ஏசுவின் உபதேசங்கேட்க வந்தவர்பலர்; நோய்தீர நோயரைக் கொண்டுவந்தவர் பலர்; 'பேய்பிடித்தவரை'க் கொண்டு வந்தவர் பலர். ஏசு சிலநாழிகை உபதேசஞ்செய்தார்; அதன் பின் நோயர்பலரது நோய் தீர்த்தார்; 'பேய்பிடித்தவர்' பலரிடத்தினின்று 'பேயை' ஓட்டினர். சனத்திரள் அவரைச் சுற்றி நெருங்கி அவர் உடலைத் தொடும்படி முயன்றது. தொட்டவரிற்பலர் நோய்தீர்ந்தனர்.

சமவெளிப்பிரசங்கம்.—கூடிவந்திருந்த தமது சீஷர்மேல் ஏசு கண்சாத்தி உபதேசித்தது :

"வாழ்வுடையீர் வறியீர், நுமதே கடவுள் அரசு.

"வாழ்வுடையீர் இன்று பசித்தீர், நீவிர் நிறைவுறுவீர்.

"வாழ்வுடையீர் இன்று அழுவீர், நீவிர் ஆறுதலுறுவீர்.

"'மகற்கொல்லேல்* எனப் பண்டைக்காலத்தாருக்குக் கூறியதை நீவிர் அறிவீர். இன்று நுமக்கு நான் சொல்கின்றேன்: சகோதரனைக் [காரணமின்றி] கோபிப்பவன் கடவுளுக்கு உத்தரவாதஞ்செய்தல் வேண்டும்.

"'பிறன்மனைவியைக் கற்பழியேல்' என்னும் பழங் கட்டளை நீவிர் அறிவீர்; இன்று நுமக்கு நான்சொல்கின்றேன்: மாசுள்ள நெஞ்சத்தோடு ஒருபெண்ணைக் காதலித்து நோக்குபவன் தன் கருத்தளவிலே அவளைக் கற்பழித்து விட்டான்.

"'பொய்க்கரிபேசேல்' என்னும் பழங்கட்டளை நீவிர் அறிவீர். இன்று நுமக்கு நான் சொல்கின்றேன்: ஆணையிடுதல் வேண்டா; உள்ளதை உள்ளது என்மின், இல்லதை

* மகற் கொல்லேல்—மனிதனைக் கொல்லாதே.

இல்லது என்மின். இவற்றைமிஞ்சிக் கூறுவது பாவத்திற் றோன்றுவது.

" 'கண்ணுக்குக் கண்; பல்லுக்குப் பல்' என்னும் விதியை நீவிர் அறிவீர். *இன்று நுமக்கு நான் சொல்கின்றேன்: தீமைக்குத் தீமைசெய்ய வேண்டா; ஒருவன் ஒரு நாழிகைதூரம் போம்படி உன்னை நெருக்கினுல், நீ இரண்டு நாழிகை போ. ஒருவன் உன்னை ஒருகன்னத்தில் அறைந்தால், மறுகன்னத்திலும் அறையும்படி முகத்தைத் திருப்பிக்கொடு. ஒருவன் உன் மேலாடையைப் பெறும்படி வழக்குவைத்தால் நீ அவனுக்கு உன் அரையிற்கட்டிய ஆடையையுங் கொடு.

" 'அயலவன்பால் அன்புவை' என்னும் விதியை நீவிர் அறிவீர். இன்று நுமக்கு நான் சொல்கின்றேன்: நும் பகைவர்பால் மெய்யன்பு பாராட்டுமின். நும்மைப்பகைப்பவருக்கு நன்மைசெய்ம்மின், நும்மைச்சபிப்பவரை வாழ்த்துமின், நுமக்குத்தீமைசெய்பவர் திருவருள்பெறும்படி கடவுளை வேண்டுமின். இவ்வாறு ஒழுகுவதனுல் நீவிர் நுமதுதந்தையார் பிள்ளைகள் என்பது அறியக்கிடக்கும். அவர் நல்லார் மீதும் பொல்லார்மீதும் வெய்யில் எறிக்கச்செய்கிறுர், அறவோருக்கும் மறவோருக்கும் மழைபெய்விக்கிறுர். நும்மை நேசிக்கிறவர்களையே நீவிர் நேசித்தால், அதிற் பெருமையென்ன? தீர்வைத்தண்டலாளரும் அவ்வாறு செய்வரே! நுமக்கு உதவிசெய்வாருக்கே நீவிர் உதவிசெய்யின், ஏனையோர்

* 'இன்று நுமக்கு நான் சொல்கின்றேன்' என்பதனுல், முன்னேயுள்ள கட்டளை தவறு என்பது ஏசுவின் கருத்தன்று. இக்காலத்தார் முற்காலத்தாரைவிட அறிவுடையோராதலால், அவர்களைவிட உத்தரவாதம் அதிகம் உடையர் என்பதே பொருள்.

செய்வதிலும் நீவிர் செய்வது அதிகமோ? உதவிசெய்வாருக்கு உதவி தீயாருஞ்செய்வரே! நமது தந்தையார்போல் நீவிர் செய்தலே நுங்கடன்.

"உன்னிடம் ஒருவன் யாதாயினும் கேட்பின், நீ அஃது அவனுக்குக் கொடு. ஒருவன் உன்னிடம் கடன்கேட்க வரும்பொழுது, உன்முகத்தை மறுபக்கந் திருப்பாதே. நமக்குப் பிறர் செய்தல்வேண்டுமென நீவிர் விரும்புவன வற்றைப் பிறருக்கு நீவிர் செய்தல்வேண்டும்.

"பிறரைக் குற்றம்பேசன்மின்; பிறரும் நும்மைக் குற்றம்பேசார்.* பிறர்செயலைக்குறித்து நீவிர் தீர்ப்பது போலவே நும் செயலைக்குறித்துப் பிறர் தீர்ப்பார்.

"உன் கண்ணில் விழுந்துகிடக்கும் உத்திரத்தைக் கவனி யாத நீ, பிறன்கண்ணில் விழுந்துகிடக்கும் துரும்பைக் கவ னிப்பது ஏனோ? உன் கண்ணில் உத்திரம் கிடக்க, நீ உன் சகோதரனிடஞ்சென்று, 'உன் கண்ணிலுள்ள துரும்பை நான் எடுத்துவிடுவேன்' என்னலாமோ? மாய்மாலியே, முதலில் உன்கண்ணிற் கிடக்கும் உத்திரத்தைக் களைந்துவிடு; பின் உன் சகோதரன் கண்ணிலிருக்கும் துரும்பை எவ் வாறு களையலாமென்பது தெளிவுறக் காண்பாய்.§

* "பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளுந்
திறன்தெரிந்து கூறப் படும்"
—திருவள்ளுவர்.

§ "ஏதிலார் குற்றம்போற் தங்குற்றங் காண்கிற்பின்,
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு?"

"தன்குற்றம் நீக்கி, பிறர்குற்றங் காண்கிற்பின்,
என்குற்றம் ஆகும் இறைக்கு?"
—திருவள்ளுவர்.

"குருடன் குருடனுக்கு வழிகாட்டினால், இருவரும் பள்ளத்தில் விழுவர்.

"செய்யும்படி நுமக்கு நான்கூறுவனவற்றைச் செய்ய மனமில்லாத நீவிர், என்னைக் 'குருவே, குருவே' என்று அழைப்பது ஏன்? என் சொல்லைக்கேட்டுநடப்பவன் கன்மலைமேல் தன் வீட்டைக்கட்டின புத்திமானை ஒத்தவன். மழைபெய்து, வெள்ளம்பெருகி, புயல் மோதிஅடிப்பினும் வீடு பழுதுறாது, கன்மலைமேற்கட்டின வீடாகலின். என் சொல்லைக்கேட்டும் அவற்றின்படிசெய்யாதவன் மணல்மேல் தன் வீட்டைக்கட்டின பேதையை ஒத்தவன். மழைபெய்து, வெள்ளம்பெருகி, புயல்மோதியடிக்க, வீடுவிழுந்து நாசமுற்றது, மணல்மேற்கட்டின வீடாகலின்."

நூற்றுவர்க்கதிபதி. — சமவெளியிற்கூடிய சனத்திரளுக்கு உபதேசஞ்செய்தபின் ஏசு கப்பணத்துக்குத் திரும்பிப் போயினர். அங்கே உரமைச்சேனையில் நூற்றுவர்க்கதிபதி ஒருவன் அவரிடம் வந்தான். இவன் உரமைப்புரியினன், கலிலைமாகாணத்தில் காவற்கடமைபூண்டிருந்த உரமைச்சேனையின் ஒருசிறுபாகத்தில் நூற்றுவர்காலாட்களுக்குத் தலைவன். இவன் ஊதன் அல்லன். இவன் இந்நாட்டுக்குவந்தபின் ஊதர் பலரோடு பழகி, அவர் சமயக்கொள்கைகளைக் கற்று, அச்சமயத்திற் சார்புற்றிருந்தனன். இவன் ஏசுவிடம்வந்து, "ஐய, என் வீட்டில் என்*சிறுவன் நோயால் மிக வருந்துகின்றனன்" என்றான். "உமது சிறுவனது நோய்தீர்க்க உமதுவீட்டுக்கு நான் வரவோ?" என்று வினவினர் ஏசு. அதற்கு அவன், "அடிகள் என்வீட்டிற்குவர நான் அருகனல்லேன். அடிகள்

* ஈண்டு 'சிறுவன்' என்றசொல்லுக்குப் பொருள் புதல்வனோ அல்லது பணியாளோ என்பது தெரியவில்லை.

வருதற்கும் அவசியமில்லை. இங்கிருந்தே ஒருவார்த்தை சொன்னால், என் சிறுவனது நோய்தீர்ந்துவிடும். நானும் அதிகாரத்துக்கு உட்பட்டவன்; எனக்குக் கீழே காலாட்கள் பலர் உண்டு; ஒருவனைப் ' போ ' என்றாற் போகிறான்; ஒருவனை ' வா ' என்றால் வருகிறான் ; ஒருவனை ' இதைச் செய் ' என்றாற் செய்கிறான் " என்றான்.* இவ்வாறு இவன்சொன்னதைக் கேட்ட ஏசு, இவனது நம்பிக்கையைக்கண்டு ஆச்சரியப்பட்டு, அருகில் நின்றவரிடம், " இவ்வளவு பெரும்நம்பிக்கையை நான் இசரவிடமுங் கண்டதில்லை " என்று ; அவனைப்பார்த்து, " நீர் நம்பியவாறே உமக்கு ஆக ! " என்றார். அந்நாழிகையே சிறுவன் நோய்தீர்ந்தான்.§

ஓனரிஷி போல்வார் ஏசு.—ஒருநாள் சாத்திரிமார் சிலர், " ஐய, நீவிர் தெய்வப்புலமைவாய்ந்த குரு என்பதற்குக் குறி யாது ? " என வினவினர். ஏசு நெட்டுயிர்த்து, " இந்தத் தலைமுறையார் குறிகளும் அடையாளங்களும் தேடுகின்றார் :

* ' உரமை வேந்தர்வேந்தனது அதிகாரத்துக்குட்பட்டேனாதலின் எனக்கதிகாரம் உண்டு. பின், கடவுளது அதிகாரத்துக்குட்பட்ட அடிகளுக்கு அதிகாரம் உண்டு என்பது சொல்லவேண்டுமோ ?'

§ ஏசுவிடம் வந்தபலர் நோய்தீர்ந்தாரெனப் பலமுறை கண்டிருக்கின்றோம். இங்கு இச்சிறுவன் ஏசுவிடம் வரவில்லை, ஏசு அவனைக்காணவுமில்லை. ஆகவே, இக்கதையின் உண்மையை ஏற்றுக்கொள்ள ஐயமுறுவர் சிலர். சிறுவன் ஏசுவிடம் வந்திலனாயினும், தன்நோய் காரணமாக நூற்றுவர்க்கதிபதி ஏசுவிடம் போனதை அவன் அறிந்திருப்பான். தன் நோயைத் தீர்க்க வல்லார்ஏசு என்ற நம்பிக்கை சிறுவனுக்கும் இருந்திருக்கலாம். இக்கதை நம்பத்தக்கதே.

இவர் தேடும் அடையாளம் இவர் காணர். நினிவைப்பதி யார்க்கு ஓனரிஷி அடையாளமானற்போல, இத்தலைமுறை யாருக்கு நானே குறி" என்றார்.*

ஓகனர் ஐயம்.—சிறைக்கூடத்திலிருந்த ஓகனமுனிவரர் ஏசுவின் அருஞ்செயல்களைக் கேள்வியுற்று, தம்சீஷர் இருவரை அழைத்து, "நீவிர் ஏசுவிடம்போய், 'வருவன் என நாம் அனைவேமும் நம்பி எதிர்பார்க்கும் தேவராசன் நீயிர் தாமோ?' எனக்கேட்டுவாரும்" என அனுப்பினர். அவர் இருவருஞ்சென்று ஓகனரது கேள்வியை ஏசுவுக்குத் தெரிவித்தார். ஏசு, "நீவிர் ஓகனமுனிவரரிடம் திரும்பிப் போய், இங்கு கண்டவற்றையும் கேட்டவற்றையும் அவருக்குக் கூறுமின்" என்றார். †

ஓகனரும் ஏசுவும்.—ஓகனமுனிவரரது சீஷர் போன பின், ஏசு சனத்திரளைப்பார்த்து, முனிவரரைக்குறித்து இவ்வாறு பேசுவார்:

* அசிரியநாட்டுக்குத் தலைநகரியாகிய நினிவைப் பெரும்பதியின் குடிகளிடம் ஓனரிஷியென்னும் பெரியார் ஒருவர் போய்க் கடிந்துகழற; அதைக்கேட்டு, மறத்தை ஒழித்து, கடவுளருள் தேடி உய்ந்தார் அவர் என்பது ஒரு பழங்கதை.

† யூதர் எதிர்பார்த்திருந்த தேவராசன் ஏசுவேயென இதற்கு முன் ஓகனமுனிவரர் சிறிதும் எண்ணினரில்லை. தாமே தேவராசனென்று இதற்குமுன் ஏசுவும் நினைத்ததில்லை. இப்பொழுது ஓகனமுனிவரர் கேட்டனுப்பின வார்த்தை ஏசுவின் மனத்தில் கிரியைசெய்யத்தொடங்கியதுபோலும்.

தேவராசன் என்பது தேவனல் அபிஷேகம்பெற்ற இராசன் எனவிரியும். தேவர்களுக்கு இராசன் என்னும் பொருளாயினும் தேவனாகிய இராசன் என்னும் பொருளாயினும் இச்சந்தர்ப்பத்திற் கொள்ளல் பொருந்தாது.

"எதைப்பார்க்க நீங்கள் பாலைவனத்துக்குப் போனீர்கள்? காற்றிலசையும் நாணலைப்பார்க்கவோ? இல்லையெனின், வேறு எதைப்பார்க்கப்போனீர்கள்? வஸ்திர ஆபரண அலங்கிருதனை இடம்பனைப் பார்க்கவோ? அப்படிப்பட்ட இடம்பரைப் பார்க்குமிடம் பாலைவனமன்று; அவர்கள் இருப்பது இராச மாளிகைகளில். பின், யாரைப்பார்க்கப் போனீர்கள்? முனிவர் ஒருவரையோ? ஆம், முனிவரையே; அவரை முனிவரென்றுற் போதுமோ? அவர் சாமானியமுனிவர் அல்லர்; முனி புங்கவர், முனிசிரேஷ்டர், முனிவரர். தாய்க்குப்பிறந்த மக்களுள் ஓகனிற் பெரியார் எவருமிலர்.

"இத்தலைமுறையாருக்கு யாரை உவமை கூறுவேன்? சந்தைகளின் அருகில் விளையாடுஞ் சிறுவர் தம் தோழரைப்பார்த்து, 'நாங்கள் புல்லாங்குழல் ஊதினோம், நீங்கள் கூத்தாடவில்லை. நாங்கள் ஒப்பாரிசொல்லி அழுதோம், நீங்கள் மாரடிக்கவில்லை' என்பது போன்றது இவர் விஷயம். ஓகனர் உண்ணுவிரதம்பூண்டுவந்தார். அவரைப் 'பேய்பிடித்தவன்' என்றுர்! அன்னபானுதிகளை வெறுத்திலேன் யான். என்னைப் 'போசனப் பிரியன்,' 'குடியன்,' 'பாவிகள்சகவாசி' என்கின்றுர்!

## இருவதுமுறை திரிந்துசெய் திருப்பணி

**ஏசுவின் மாணுக்கியர்.**—சிலபகல் சென்றபின் கலிலை மாகாணத்திலுள்ள பேரூர் சிற்றூர் எங்கும் ஏசு சுற்றித் திரிந்து, 'கடவுளரசு கிட்டிற்று' என உபதேசித்தார். இவரோடு சென்றவர் பன்னிருவரும் சிலபெண்களும். இப்பெண்களிற் சிலர் முன்னே பேய்பிடித்தவர், சிலர் முன்னே பிணியர்; இவர்கள் தெளிந்த புத்தியும் ஆரோக்கியமும்பெற்று, ஏசுவிடங்

கற்கும்படி அவருக்கு மாணாக்கிகளானார்கள். மகதலேமரி*, ஒக்கனே, சூசனே என்னும் மூவரும் இவர்களில் முதன்மை பெற்றவர். இப்பெண்களிற் சிலர் கைப்பொருள் உள்ளார். தம்பொருளால் ஏசுவையும் பன்னிருவரையும் ஆதரித்து வந்தனர்.

கடவுளைவேண்டும் முறை.—ஒருநாள் ஓரிடத்தில் ஏசு கடவுளைவழிபட்டு மீண்டுவந்தவுடன், சீஷரிலொருவன், "குருவே, ஓகனமுனிவரர் தமது சீஷருக்குக் கடவுள்வழி பாடுமுறை கற்பித்தனர். அதுபோல அடிகளும், நாங்கள் கடவுளை வேண்டுவதெப்படியெனக் கற்பித்தருளல்வேண்டும்" என்றான். அதற்கு ஏசு இசைந்து, "நீவிர் கடவுளை வேண்டுகையில் இவ்வண்ணம் சொன்மின் :

'அப்பனே, உன்பெயர் [உள்ளத்திலும் நாவிலும்] தூய்மையுறுக; உன் ஆளுகை வருக; இன்றைக்கு எங்களுக்கு வேண்டிய உணவை ஈ; நாங்கள் செய்த பாவங்களை எங்களுக்கு மன்னி—பிறர் எங்களுக்குச்செய்யுந்தீமைகளை நாங்களுமல்லவோ மன்னிக்கிறோம்; எங்களுக்குவருஞ் சோதனைகளில் நாங்கள் நெறிதவறி வீழ்ந்துபோகாமல் எங்களைக் கா" எனப் போதித்தனர்.§

* மகதலையூராள், மரிஎன்றும் பெயரினள்.

§ இப்பிரார்த்தனம் ஏசு கற்பித்தபோது, இச்சொற்களையே நெட்டுருப்பண்ணி மந்திரம்போலச் சொல்லல்வேண்டும் என்பது அவர் கருத்தன்று; இதனை மாதிரியாகவைத்துக்கொண்டு விண்ணப்பஞ்செய்யலாம் என்பதே அவர்நோக்கம். அவரவர் தத்தம் நிலையில், தத்தமக்கு வேண்டியவற்றை, அவ்வக்காலத்துக்கேற்ப, தத்தம்பாஷைகளிலே, தத்தம்மொழிகளிலே, எடுத்துக்கூறுவதே விண்ணப்பம்.

"நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்து'நினை
என்றும் சிவன்றாள் இணை."

இப்பொருளைக்குறித்து ஏசு பின்னும் இவ்வாறு போதித்தினர் :

"உங்களில் ஒருவன் நள்ளிரவில் நண்பன் ஒருவனிடஞ்சென்று, 'நண்பனே, பெருந்தூரத்திலிருந்து என் அன்பனொருவன் திடீரென இப்பொழுது என்வீட்டில் வந்துளான். அவனை உபசரிக்க என்னிடம் ஒன்றுமில்லை. எனக்கு இப்பொழுது மூன்று அப்பம் கடன்கொடு' எனக் கேட்பின்; அவன்நண்பன், 'இந்தநேரத்தில் வந்து என்னை வருத்தாதே; என்பிள்ளைகள் என்னருகிற் படுத்து உறங்குகின்றனர்; கதவும் தாழிட்டு அடைத்திருக்கிறது; நான் எழுந்து நீ கேட்பதைத் தாஇயலாது; போ, போ' என்பானோ?

"உங்களில் ஒருவன்பிள்ளை, 'அப்பா, எனக்குப் பசிக்கிறது, அப்பம்வேண்டும்' எனக் கேட்பின், கல்லைக் கொடுப்பானோ? மீன்கேட்கிறபிள்ளைக்குப் பாம்பைக் கொடுப்பானோ? குற்றம்பலவுள்ள நீங்கள் உங்கள்பிள்ளைகளுக்கு நல்லவற்றைக் கொடுக்க அறிந்திருக்கிறீர்களே. நீங்கள் உங்கள் அப்பனிடம் விண்ணப்பஞ்செய்கையில், நல்லவற்றையே கொடுக்க அவனறியானோ?

"கேண்மின், பெறுவீர்; தேடுமின், காண்பீர்; தட்டுமின், கதவுதிறக்கும்."*

பெரியோர் பாடியுள்ள தோத்திரச்சொற்கள் நம் நிலைக்கும் நம் நாட்டத்துக்கும் பொருந்துமாயின், அவற்றை உபயோகிக்கலாகாது எனக் கூறுகின்றிலேன். சொல்லின் பொருளை அறிந்து, வாக்கும் மனமும் ஒன்றச்சொல்வதே மெய்ப்பிரார்த்தனம்.

* "சிந்தித்த எல்லாம்என் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே, பராபரமே."

—தாயுமானவர்.

ஏசுவும் பெயலசிபனும்.—ஒருநாள் கப்பணத்தில் ஊமைப்பேய்பிடித்த ஒருவனை ஏசுவிடம் சிலர் கொண்டுவந்தார். ஏசு பேய்யைத் துரத்தினவுடனே ஊமையன் பேசினான். அதைக்கண்ட சனத்திரள் ஆச்சரியமடைந்தது. அங்குநின்ற சாத்திரிமார் சிலர், "இவனுக்குப் பெயலசிபன் என்னும் பெரும்பேய் வசியமாதலால் அதன் உதவியாற் குட்டிப் பேய்களைத் துரத்துகிறான் இவன்" என்றார். ஏசு அவரைப் பார்த்து, "சாத்தனைச் சாத்தன் துரத்துவானோ? ஓர் இராச்சியத்திலுள்ளார் தம்முள் வேறுபடின் அவ்விராச்சியம் நில்லாது; ஒருகுடும்பத்திலுள்ளார் தம்முட் பிரிந்திருப்பரேல் அக்குடும்பம் நில்லாது. ஒருவீட்டில் நுழைந்து களவுசெய்யப்போவார் முதலில் வீட்டின் தலைவனைப்பிடித்துக் கையுங்காலுங் கட்டிவிட்டுப் பின்பே களவுசெய்வார். கடவுளுடைய திருவருளினால் நான் பேயோட்டுவதை நீவிர் அறிந்திருந்தும், பெயலசிபன் உதவியால் இப்படிச்செய்கிறேன் னென்பது அழகா? மனிதர் எவ்வகைப் பாவஞ்செய்யினும் மன்னிப்படைவர். கடவுள் திருவருளைத் திருவருளென அறிந்திருந்தும், அதைப் பேயின்செயல் என்பார்க்கு உய்யும் வழியுண்டோ?" என்றார்.

ஏசு பித்தரோ?—ஒருநாள் கப்பணத்தில் தாம்இருந்த வீட்டில் பலர் கூடிவந்திருந்ததால், போசனஞ்செய்யும்நேரம் கழிந்தும் உணவுசெய்ய நேரமில்லாது ஏசு உபதேசித்துக் கொண்டிருந்தார். இவ்வாறு இவர்செய்தது இன்றுமட்டுமன்று. நசரையிலிருந்த தாயாரும் உடன்பிறந்தாரும் இதனைக் கேள்வியுற்று, இவருக்குப் பித்தம்பிடித்ததுபோலும் என எண்ணி, இவரைப்பிடித்து எப்படியாயினும் நசரைக்குக் கொண்டு செல்லல்வேண்டும் என்னும் நோக்கத்தோடு அங்கிருந்து

வந்தும், சனத்திரட்பெருக்கத்தால் வீட்டுள் நுழையமுடியாது வெளியே நின்றனர். இதைக் கண்டசிலர் ஏசுவிடம், "நமது தாயாரும் உடன்பிறந்தாரும் நம்மைத்தேடிவந்து வெளியே நிற்கின்றார்" என; ஏசு வந்தவர்கருத்து இன்னதென்று அறிந்தவராதலால், இப்படிக்கூறுவார்: "எனக்குத் தாயார் யார்? உடன்பிறந்தார் யார்? என்னப்பன் சித்தத்தின்படி நடப்பவரே என் தாயார், என் சகோதரர்." *

ஏசு உபதேசித்த உள்ளுறை§ சில. — ஒருநாள் ஏரி கரைக்கு ஏசுசென்றபோது பெருஞ் சனத்திரள் கூடிற்று.

* "பெற்றாள், வளர்த்தாள், பெயரிட்டாள், பெற்றபிள்ளை
பித்தானால் என்செய்வாள் பின்?"

—பட்டினத்துப்பிள்ளை

"பேய ரேயெனக் கியாவரும்; யானுமோர்
பேய னேயெவர்க் கும்;இது பேசியென்?
ஆய னே,அரங் கா,என்ற ழைக்கின்றேன்;
பேய னாயொழிந் தேன்எம்பி ரானுக்கே!"

—குலசேகரப்பெருமாள்.

"உற்றாரை யான்வேண்டேன், ஊர்வேண்டேன்,
[பேர்வேண்டேன்"

—மாணிக்கவாசகர்.

§ ஏசு உபதேசித்த உபதேசங்கள் பலவற்றிற்குப் பொருள் வெளிய. சில உபதேசம் உவமைமுகம் உள்ளன. இப்படி ஏசு உபதேசித்ததின் காரணந் தெரியாமல் மயங்கினவர் சாதாரண அறிவுடையோர் மட்டுமல்லர், நிபுணரிற் சிலரும் தாம் போதித்த போதனையின் கருத்தைப் பலர் அறிந்துகொள்ள இயலாது விட்டுவிடவும் சிலர்மட்டும் அறிந்துகொள்ளவும் வேண்டும் என்பதே ஏசுவின்நோக்கம் என்பார் இவர். தம் உபதேசத்தின் பொருளைச் சிலரே அறிதல் வேண்டும் என்றும் பலர் அறியலாகாது என்றும் ஏசு சிறிதும்

சனம் கரையில் மணலிலிருக்க, ஏசு ஏரியில் ஒரு சிறுவள்ளத்தி லிருந்து உபதேசஞ்செய்தார். அப்பொழுது அவர் கூறிய உள்ளுறைற் சில :

**விதைப்பவன்.**—"விதைப்பவன் வயலில் விதைக்கிருன். வரம்பில் சிலவிதை விழுகின்றன ; இவை பறவைக்கு இரை யாகின்றன. மண்மூடியிருக்கும் கல்லின்மேல் சிலவிதை விழுகின்றன ; இவை உடனே முளையெடுப்பினும், மண்ணில் ஆழமின்மையால் வெய்யிலில் உலர்ந்து சாகின்றன. முள்ளில் சிலவிதை வீழ்கின்றன ; முளைத்துவளரும்விதையை உடன் வளரும் முள்படர்ந்து நெருக்குவதால் அவை விளையாது போகின்றன. நல்லநிலத்தில் சிலவிதை விழுகின்றன ; இவை வளர்ந்து, ஒன்று முப்பதுமடங்கு, ஒன்று அறுபதுமடங்கு, ஒரோவொன்று நூறுமடங்கு பலன்தருகின்றன.

காதுள்ளவன் இதைக் கேட்கக்கடவன்.*

கருதவில்லை. தாம் போதிப்பவையெல்லாம் எல்லாருமறிந்து ஞாபகத்தில் வைத்தல்வேண்டும் என்பதே அவர் நோக்கம். அப்படியாயின் ஏன் அவர் உள்ளுறைகளை எடுத்துச் சொன் ஞர் என வினவின், தாம் போதிக்கும் பரமதத்துவங்களை எவரும் எளிதில் அறிந்துகொள்ளும்பொருட்டு, யாவரும் அறிந்துள்ள விஷயங்களை உபமானங்களாகக் கூறின் எவ ருக்கும் தெள்ளிதில் விளங்கும் என எண்ணி அவ்வாறு உப தேசித்தார் என்க. உவமேயத்தை விளக்குவதே உவமானத்தின் நோக்கமாம்.

இவ்வகையை ஞானேபதேசஞ்செய்யுங் குரவர் எவரும் வழங்குவர்.

* இவ்வுள்ளுறைக்கு ஏசு பொருள் கூறவில்லை. ஆயினும் இதன் பொருள் வெளிது. புறக்காதுள்ளவரெல்லாம் உபதேசங் களைக் கேட்டுணர்வார் அல்லர். உபதேசத்தைக் கேட்பவரிற் சிலரே, கேட்டவற்றைச்சிந்தித்து, தெளிந்து, நிட்டைகூடுவார். ஏனையோர் கேட்டுங் கேட்டிலர். [ நிட்டை – உறுதி ]

படிப்படிவளரும் விதை.— ஒருவன் விதைக்கிறான். விதைத்து முடிந்தபின் அவன் இரவில் உறங்கி, பகலில் விழித்திருக்கிறான். [ இனி அவன்செயல் ஒன்றுமில்லை.] வயல் ஏற்ற காலத்தில் விளையும். முதலில், முளைவரும்; பின், கதிர்வரும்; அதன்பின், கதிரில் மணிதோன்றும்; மணிமுற்றினபின், அறுப்புக்காலம்வரும். அப்பொழுதுதான், விதைத்தவன் அறுப்பான். இதுபோன்றது கடவுளரசு.*

புதையல்.—ஒருவன் வேறொருவன்நிலத்தைக் கூலிக்குக் கொத்தும்போது அங்கு புதையல் ஒன்றிருக்கக் காண்கிறான். உடனே அதன்மேல் மண்ணைக்கொட்டி மறைத்துவிட்டுப் போய், புதையலைக்கண்ட ஆனந்தத்தினாலே தனக்குள்ள எல்லாவற்றையும் விற்று, வந்தபொருளால் அந்நிலத்தைக் கொள்கிறான்.†

ஆணிமுத்து.—முத்துவியாபாரிஒருவன் நன்முத்துக்களைத் தேடிச்செல்கையில், ஓரிடத்தில் உயர்ந்தவிலையுள்ள

* மனிதர் செய்வனவற்றைச் செய்தல்வேண்டும். செய்தபின், ஏற்றகாலத்திற் கடவுள் பலன்கொடுப்பார் என்று நம்பிப் பொறுமையோடு காத்திருப்பதைவிட வேறு என்செயலாம்? வீணே கலங்குவதாற் பயன்என்? காலமும் வேளையும் வரவேண்டாவோ? இப்படிக் காத்திருப்பது முதலில் தாங்கள் செய்யவேண்டிய கடமையெல்லாம் செய்தபின்பே.

† சிலர் முத்தியைத் தேடாதிருப்பினும், முத்தியும் அதனை அடையும் நெறியும் திடீரென அவருக்கு வெளிப்படும். ஆயினும் வெளிப்பட்ட முத்தி தமக்குக் கைகூடவேண்டுமாயின், அவர் பலவற்றைத் துறத்தல்வேண்டும், பலவற்றைச் செய்தல்வேண்டும். அப்படிச்செய்யப் பின்னிடார் அறிஞர்.

ஆணிமுத்துஒன்றைக் கண்டு, அதை வாங்கவேண்டுமென்ற ஆசையால் தன் செல்வமெல்லாவற்றையும்விற்று அதனைக் கொள்கிறான்.*

ஏசுவின் சீஷராதல் எளிதோ?—ஒருநாள் ஏசு வீதி வழியே சென்றபோது, ஒருவன், "அடிகள் எங்குசெல்லினும் நான் பின்வருவேன்" என்றான். ஏசு அவனைநோக்கி, "நரிக்குக் குழியுண்டு, பறவைக்குக் கூடு உண்டு, எனக்கோ தலைசாய்க்க இடமில்லை" என்றார்.§

வேறொருநாள் ஏசு ஒருவனைக்கண்டு, "எனக்குச் சீஷனாகு; நான் செல்லுமிடமெல்லாம் என்பின் வா" என அழைத்தார். அவனோ, "குருவே, என்தந்தை இறந்தபின் அவருக்குச்செய்யவேண்டிய சரமகிரியையெல்லாம் நான்செய்து முடித்துவிட்டு, அடிகளுக்குச் சீஷனாவேன்" என்றான். ஏசு,

* பலநாள் முத்தியைவருந்தித்தேடின சிலருக்கு அது வெளிப்படும். வெளிப்பட்டும், முத்தி தமக்குக் கைகூடவேண்டுமாயின், துறப்பன துறத்தலும் செய்வனசெய்தலும் அவசியம். அவ்வாறுசெய்யப் பின்னிடார் அறிஞர்.

"தேடிக் கண்டுகொண்டேன் – திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டுகொண்டேன்."

—திருநாவுக்கரசர்.

§ ஏசுவைப் பின்செல்லின், இம்மையிற் பல சுகமடையலாம் என எண்ணுவார் பலர். அவர் இம்மொழியைச் சிந்திக்கக் கடவர்.

"செத்தாருக்குக் கிரியைசெய்யச் சாகும்பிணங்கள்* உள. நீ என்பின்னேவா. கடவுளரசை எவருக்கும் எடுத்துரைப்பதே உன்கடமை" என்றார்.

சூறைக்காற்று.—ஒருநாள் ஏசு பன்னிருவரிடம், "நாம் ஏரிக்கு அக்கரைபோவோம்" என்றார். அப்படியே அவரும் பன்னிருவரும் ஒருதோணியிலேற, அது பாய்விரித்துக் கிழக்குநோக்கி ஓடினது. புறப்படுமுன்னே சனத்திரளுக்கு உபதேசஞ்செய்து களைத்திருந்தபடியால்,ஏசு தோணியின் பின்னணியத்தில், அங்கிருந்த சும்மாடு ஒன்றைத் தலையணையாகக் கொண்டு மெய்மறந்து நித்திரைசெய்தார். அப்பொழுது திடீரெனச் சூறைக்காற்று அடிக்கத்தொடங்கினது. அதனால் தோணி அக்கப்பாடுறுமென எண்ணினசீஷர் மிகஅஞ்சி, "அடிகாள், அடிகாள், நித்திரைசெய்ய இதுவா சமயம்! நாங்கள் மடிந்தால் அடிகளுக்குக் கவலையில்லையோ?" என்று அலறினர். ஏசு எழுந்து பன்னிருவரையும் பார்த்து, "உங்கள்நம்பிக்கை

* "சென்றே எறிப ஒருகால்; சிறுவரை
நின்றே எறிப பறையினை;—நன்றேகாண்!
முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து."

—நாலடியார்.

"பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்துபட் டாடைசுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடி ஆடி முடிந்தபின்பு,
செத்துக் கிடக்கும் பிணத்தரு கேயினிச் சாம்பிணங்கள்,
கத்துங் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே!"

—பட்டினத்துப்பிள்ளை.

யெல்லாம் எங்குபோயிற்று?" என்றார். சிறிதுநேரத்துட் சூறைக்காற்று அடங்கினது.*

இலகியன்பேய் பிடித்தவன்.—ஏசுவும் பன்னிருவரும் ஏரியின் கீழ்கரையிலுள்ள கேரசை என்னும் ஊருக்கருகே தோணியினின்று இறங்கினர். அப்பொழுது பேய்பிடித்தவன் ஒருவன் இடுகாட்டினின்று சுத்தநிருவாணியாய் ஓடி வந்தான். இவன் பலஆண்டு இடுகாடே உறைவிடமாகக் கொண்டவன்; இவனை ஊரார் பலமுறை கைத்தளை காற்தளை பூட்டியும், ஆவேசம்வரும்போது அவற்றையெல்லாம் அறுத்தெறிந்துவிடுவன்; இவனையடக்க எவராலும் முடியவில்லை; இவன் இரவும்பகலும் இடுகாட்டிலுங் குன்றுகளிலும் உறைந்து, கூரியகற்களாற் தன்னுடலைக் கீறிக்கொள்ளுவன்; இவன் கூக்குரலிடுஞ்சத்தம் நெடுந்தூரங் கேட்கும்; இவன் ஆடையுடுப்பதை முற்றும் மறந்துவிட்டான். இன்று இவன் ஏசுவைக் கண்டவுடனே அவரிடம் ஓடிவந்தான். அப்பொழுது ஏசு, இவனைப்பிடித்திருந்த பேயை அதட்டி, "இக்கணமே இவனைவிட்டு ஓடிப்போ" என்றார். இவன், "ஓ மாகேசு

* மும்முரத்தோடு மோதின சூறைக்காற்றை ஏசு அதட்டினர் என்றும், உடனே சூறவளி அஞ்சி அடங்கிற்று என்றும் மார்க்கனார் கூறுவர். இதனைச் சொல்லணியென அறியாது, சொற்படியே பொருள்கொண்டு, மெய்யென எண்ணுவார் பல்லாயிரவர். காற்றையுங் கடலையும் அதட்ட ஏசு பித்தரல்லர். கலிலைக் கடலிற் திடீரெனச் சூறை மோதுவதும் திடீரென அடங்குவதும் இக்காலத்துங் காணலாம். இஃது அற்புதமன்று. ஆயினும் இப்படிப்பட்ட சமயத்திலும், தம்முடன் இருந்தவர் அனைவரும் அஞ்சினும், அஞ்சாத் திடபத்தியுள்ளவர் ஏசு என்பது வெளிப்படை.

வரரே*, உமக்கும் எனக்கும் என்னஉறவு ? கடவுளாணை, நீர் என்னைத் தொந்தரைசெய்ய வேண்டா" எனக் கதறினன்.

ஏசு, "உன்பெயரென்ன ?" என்றார்.

அவன், "என்பெயர் இலகியன்,§ நாங்கள் பல்லாயிர வேம்"† என்றான்.

இவ்வேரியின் கீழ்கரையிலே குன்று பலவுள. அவற்றின் சாரலிலே பன்றி நிரைநிரையாய் மேய்ந்துகொண்டிருந்தன. பேய் இவனைவிட்டுப் புறப்படுகையில் இவன் பன்றிக்கூட்டத்தைநோக்கிக் கூச்சலிட்டுக்கொண்டு ஓடினன். பன்றிகள் இவனைக்கண்டு வெருண்டு, மலைச்சாரலிலே கீழேபாய்ந்து ஓடி, ஏரியில்விழுந்து மாண்டன. இதனைக்கண்ட மேய்ப்பர் ஓடிப் போய், ஊராருக்கு அறிவித்தனர். ஊரார் திரண்டு, நடந்ததைப்பார்க்க வந்தபொழுது, பேய்பிடித்திருந்த மனிதன் ஆடைதரித்து, தெளிந்தபுத்தியோடு ஏசுவின் அடியினருகே உட்காந்திருப்பதையும், மாண்ட பன்றிக்கூட்டம் ஏரியில்

* மகேசுவரன் அடியான் - மாகேசுவரன்.

§ 'இலகியன்' என்னுஞ்சொல், இலத்தின் பாஷையில், உரமைச் சேனையின் ஒருபகுதியைக் குறிக்கும்; காலாட்களும் பரியாட்களும் அடங்கிய இப்பகுதியில் மூவாயிரவருக்குக் குறையாமலும் ஆறுயிரவருக்கு மேற்படாமலும் இருப்பர்.

† இவன் தன்பெயரை இவ்வாறு கூறியதற்குக் காரணம் "நாங்கள் பல்லாயிரவேம்" என்னும் இவன் சொல் விளக்கும். தன்னைப்பிடித்திருக்கும் பேய், ஒன்றிரண்டல்ல, நூறு இருநூறல்ல, பல்லாயிரம் என்பது இவன் நம்பிக்கை. இப்படி இவன் நம்புவதற்குக் காரணம் யாது? இதற்குமுன் பேயோட்டவந்தவர் சிலர் இப்படிச் சொன்னார்போலும்.

மிதப்பதையுங்கண்டு, பலஆண்டு துயருழன்றவன் ஒருவன் புத்திதெளிந்திருப்பதற்காகச் சிறிதும் மகிழாமல், பன்றிகள் மாண்டனவே என வருந்தி, "ஐயா, நீர் எங்கள் கரையை விட்டு, தோணியேறி நுமது கரைக்குத் திரும்புக" என ஏசுவை வேண்டினர். ஏசுவும் பன்னிருவரும் தோணியிலேறி, மேல்கரைநாடிப் புறப்பட்டனர். அப்பொழுது, புத்திதெளிந்தவன், "அடிகாள், என்னையுங் கூட்டிக்கொண்டு செல்க. நான் அடிகளைவிட்டுப் பிரிந்திருத்தல் இயலாது" என இரங்கினன். ஏசு, "மகனே, நீ என்னோடு வருவது சரியன்று. உன் ஊருக்குப் போ; உன் வீட்டாருக்கும் உறவினருக்கும் அன்பருக்கும் ஏனையோருக்கும், கடவுள் உனக்கு அருளிய அருளை அனைவரும் அறியுமாறு எடுத்துக்கூறு" எனப் பணித்து, கப்பணத்தைநாடிச் சென்றனர். அருள்பெற்றமனிதன் ஊருக்குப்போய், வீட்டிலுள்ளவர் உறவினர் அன்பர் நொதுமலர் எவருக்கும் ஏசு தனக்குச்செய்த நன்மையை எடுத்துக்கூறினன்.* கேட்டவரெல்லாரும் ஆச்சரியமடைந்தனர்.

தருமகருத்தன்மகள்.—தோணியினின்று இறங்கி ஏசு கப்பணம் வந்தவுடனே, அங்கிருந்தபள்ளியின் தருமகருத்தர்களிலொருவன், இயவிரன் என்னும் பெயரினன், ஏசுவைக் கண்டு, அவர்அடியில் விழுந்து, "அடிகாள், என் சிறுமகள்

* ஏசு இவனுக்குப்பணித்தது, கடவுள் அருளிய அருளை எடுத்துக் கூறும்படி; இவன் எடுத்துக்கூறியதோ ஏசு தனக்குச்செய்த நன்மையை. இவனைப்போன்றார் பலகோடியர் மாந்தர்; நன்மைக்கெல்லாம் மூலகாரணர் கடவுள் என்பதைச் சிறிதும் உணராது, தமக்கு நன்மைசெய்யும் மக்களையே கடவுள்போல மதிப்பார்! கிறைஸ்தவசபைகள் பல ஏசுவைக் கடவுளென மதித்து வணங்கிவருவது வியப்பேயோ?

சாகுந்தறுவாயிலிருக்கிருள்; அடிகள் என்வீட்டுக்கு எழுந்தருளிவந்து, அவளது கையைத்தீண்டின், அவள் வியாதி தீர்ந்து உய்வள்" என்றான். அவன்வீட்டை நோக்கி அவனோடு ஏசு சென்றார். சனத்திரள் அவரைச்சூழ்ந்து நடந்தது.

பெரும்பாடு நோயினள்.—அப்பொழுது சனத்திரளிலே, பன்னிருயாண்டு பெரும்பாடுற்று வைத்தியர் பலருக்குத் தன் பொருளெல்லாம் வாரிஇறைத்தும் சிறிதும் பிணிதீரப்பெறுதவள் ஒருத்தி, "கடவுள் அடியார்இவர். இவரது அங்கியின் விளிம்பைத் தொட்டாலே என்நோய் தீர்ந்துவிடும்" என முழுநம்பிக்கைவைத்து, இவர்பின்னேவந்து அங்கியின் விளிம்பைத் தன்கையாற் பற்றினள். அவள் நம்பியபடியே அக்கணமே அவள் நோய்தீர்ந்தது. தமது சட்டையை யாரோ பற்றி இழுத்ததை ஏசு அறிந்து, "என் சட்டையைப்பற்றினவர் யார்?" என வினவ; சீஷர், "அடிகாள், இந்தச் சன நெருக்கத்தில் யார் திருமேனியில் வீழ்ந்தனரோ? நாங்கள் அறியேம்" என்றனர். ஏசு நாலுபக்கமும் உற்றுநோக்கினர். அப்பொழுது நோய்தீரப்பெற்றவள் அவர்முன்வந்து, வீழ்ந்து நமஸ்கரித்து, அச்சத்தால் மெய்நடுங்க, "அடிகள் சட்டையின் விளிம்பை அடியேனே தொட்டேன்" என்று தன்வரலாறெல்லாங் கூறினள். ஏசு, "மகளே, உன்நம்பிக்கை உன் நோய்தீர்த்தது. சமாதானத்தோடு போ. இந்நோய் இனி உன்னை வாதியாது" என அவளை ஆசீர்வதித்தனர்.*

* இப்பெண்ணைப் பீடித்தநோய் தீர்த்ததில் ஏசுவின் செயல் சிறிதுமில்லை. இவள் நம்பிக்கையே இவள் நோயைத் தீர்த்தது. ஆயினும், பன்னிருயாண்டு வேறொருவர்பாலும் இவள் வையாத நம்பிக்கை ஏசுவினிடம் வைத்தது எவ்வாறெனின், இதற்குமுன் ஏசுவால் நோய்தீர்ந்தார் பலர் என்னும் உண்மையை இவள் அறிந்ததனுல்என்க. இவள்நோய் தீர்ந்தபின்பே இவள் வரலாற்றை ஏசு அறிந்தார்.

தருமகருத்தன்மகள் (தொடர்ச்சி).—இப்போது கூறிய சம்பவம் தருமகருத்தன் வீட்டிற்கு ஏசு நடந்துபோகையில் வழியில் நிகழ்ந்தது. இதனாற் காலதாமதம் ஆகின்றது என எண்ணின தருமகருத்தன், "அடிகாள், விரைக, விரைக; தாமதம்ஆகுமேல் என்சிறுமகள் இறந்துவிடுவள்" என வேண்டினன். ஏசு, "அஞ்சாதே, உன்மகள் நோய்தீர்ந்து வாழ்வள்" எனத் தைரியங்கூறினர். இவன் வீட்டுக்கு ஏசு சென்றபோது அங்கு அவர்கண்டகாட்சி மிக இரங்கத்தக்கது: சிலர் வாய்பேசாது கண்ணீர்விட்டழுதனர்; வேறுசிலர் தேம்பித்தேம்பி அழுதனர்; வேறுசிலர் ஒப்பாரிசொல்லிப் புலம்பினர். ஏசு சிறுமிபடுத்திருந்த அறையுட்சென்று பார்த்துவிட்டு, வெளிவேவந்து, "ஏன் அழுகிறீர்கள்? பிள்ளை சாகவில்லை, உறங்குகின்றனள்" என்றார். இதைக்கேட்டவர், "இவன் ஒருபேதை; உண்மையறியாமற் பேசுகிறான்" என எண்ணி நகைசெய்தனர். ஏசு அவரை அவ்விடத்தினின்று போகும்படிசெய்து, சிறுமியின் தாய்தந்தையரோடு மீட்டும் உள்ளேசென்று, பிள்ளையின் கையைத் தம் கையாற்பற்றி, "தலிதா கூம்"* என்றார். உடனே சிறுமி கண்விழித்து, ஏசுவையும் பெற்றாரையும் கண்டு, படுக்கையினின்று எழுந்தாள். இதனைக்கண்டவர் பிரமித்தனர். இச் சிறுமிக்கு வயது பன்னிரண்டு. ஏசு, "இப்பொழுது இவள் உண்ண யாதாயினும் கொடுமின்" என்றார்.§

* "தலிதா, கூம்" என்டன் அரமயிகமொழி. "சிறுமீ, எழு" என்பது பொருள்.

§ செத்துப்போன சிறுமிக்கு மீட்டும் உயிர்வரும்படிசெய்தார் ஏசு என உலூகனர் கூறுவர். மார்க்கனர் அப்படிக் கூறவில்லை. "பிள்ளைசாகவில்லை, உறங்குகின்றனள்" என ஏசுவே சொன்னார். செத்தவர் எவரையும் ஏசு ஒருகாலும் எழுப்பவில்லை. செத்

காக்கைவலியன்.—ஒருநாள் ஏசு தனியேசென்று ஓரிரா முழுதும் கடவுள்வழிபாட்டிற் கழித்தனர். இரவுவிடிந்த பின் பன்னிருவர் இருந்த இடத்திற்குத் திரும்பிவருகையில், அங்கு சனத்திரள் பன்னிருவரைச் சூழ்ந்துநின்று அவரோடு வாதஞ்செய்துகெண்டிருந்ததை ஏசு கண்டார். ஏசு அப்பொழுது அங்குவருவாரென்று சனத்திரள் எதிர்பார்க்கவில்லை. அவர் வருவதைக் கண்டவர் அதிசயித்து, அவர்பால் விரைந்துசென்று நமஸ்கரித்தனர். அவர் வந்தவர்களை நோக்கி, "என்சீஷரிடம் நீங்கள் எதைக்குறித்து வாதஞ் செய்தீர்கள்?" என; அவர்களிலொருவன், "குருவே, எனக்கு ஒரு மகன். அவனைச் செவிடும் ஊமையும்உள்ள ஒரு பேய் பிடித்து உலைக்கிறது; ஆவேசம் வரும்போதெல்லாம் அவனைத் தரையிலே மோதுகிறது; அப்பொழுது அவனுக்குப் பல்லுக்கிட்டி, வாய் நுரைதள்ளுகிறது; நாளுக்குநாள் மெலிந்துபோகிறான். இன்று சூரியோதயத்தில் அவனை உம்மிடங்கொண்டு வந்தேன். நீர் இங்கில்லையென அறிந்து, உமது சீஷரிடம் அவனைப்பற்றிச் சொன்னேன். அப்பேயை ஓட்ட அவர்கள் முயன்றார்கள்; முயன்றும், அவர்களால் முடியாமற்போயிற்று" என்றான். ஏசு பன்னிருவரையும் பார்த்து, "கடவுளை நம்பாதவர்களே, இன்னும் எவ்வளவுகாலம் உங்களிடம் பொறுமைகாட்டுவேன்?" என்று; வந்த மனிதனைப்பார்த்து, "என்னிடங்கொண்டுவா உன்மகனை" என்றார். சிறுவனை அவனிடங்கொண்டுவந்தார்கள். அவன் ஏசுவைக் கண்டவுடனே அவனைப்பிடித்திருந்தபேய் அவன்

தவர் எவரையும் கடவுளும் எழுப்புவதில்லை. இச்சிறுமி மூச்சும் கைந்நாடியும் அற்றனள்போல இருந்ததைக் கண்டவர்பலர், "இவள் செத்துப்போனாள்" என எண்ணினர்.

கையையுங் காலையும் வலித்தது; அவன் தரையிலே விழுந்து புரண்டான்; வாய் நுரைதள்ளிற்று. ஏசு தகப்பனைநோக்கி, "எவ்வளவுகாலம் இவன் இப்படி வருந்துகிறான்?" என; அவன், "குழவிப்பருவம்முதல் இப்படி வருந்துகிறான்; இந்தப் பேய் இவனைப் பலமுறை தீயிலும் பலமுறை நீரிலும் விழுத்திக் கொல்லமுயன்றது. யாதாயினும் செய்ய உமக்கு இயலுமேல், எங்கள்மேலிரங்கியருளும்" என்றான். ஏசு, "'உமக்கு இயலுமேல்'! 'உ-மக்-கு-இ-ய-லு-மேல்'! கடவுளை நம்புகிறவனுக்கு எல்லாம் இயலும்" என்றார். உடனே அவன், "குருவே, நான் கடவுளை நம்புகிறேன்; ஆயினும் என் நம்பிக்கை குறைவுள்ளது; குறைநீங்கி நிறைவுறும்படி எனக்கு நீர் உதவிசெய்யும்" என வேண்டினான். சனக் கூட்டம் பெருகுவதைக்கண்ட ஏசு பேயைநோக்கி, "செவிடும் ஊமையும்உள்ள பேயே, வா வெளியே இவனைவிட்டு; இனி ஒருநாளும் இவனை நீ பிடியாதே; பத்திரம், நான்சொல்வது உன்மனத்தில் வை" எனக் கழறியுரைத்தார். உடனே பேய் சிறுவனைவலித்து, உரத்துக்கதறி, அவனைவிட்டுப் போயிற்று. சிறுவன் செத்தசவம்போல் விழுந்துகிடந்தான். பலர், "சிறுவன் செத்துப்போனான்" என்றார். ஏசு அவன் கையைப்பற்றித் தூக்க, அவன் எழுந்துநின்றான். தகப்பன் மகனை அழைத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினான்.

பன்னிருவரை அனுப்புதல்.—நாடுமுழுதும் எங்கு செல்லினும், இடையனில்லாத ஆடுபோலச் சனம் தொய்ந்து நொந்துபோயிருப்பதைக் கண்ட ஏசு மனம் மிக உருகி, ஊர்தோறும் உபதேசஞ்செய்யவும், நோய்களைத்தீர்க்கவும், பேய்களையோட்டவும், பன்னிருவரையும் இவ்விருவராக அனுப்பினார். அனுப்புகையில் அவருக்கு ஏசு சொல்லிய வார்த்தை:

"வழிப்பயணத்துக்கென்று உணவு, பணம் கொண்டு போகவேண்டா. உடுத்திருக்கிற உடையைத்தவிர வேறுடை வேண்டா. காலிற் செருப்பும் கையிற் கோலும் கொண்டு போகலாம். வழியிற்சந்திக்கிறவர்களோடு வீண்வார்த்தை யாடிக் காலதாமதஞ்செய்யவேண்டா. நீவிர் ஒருவீட்டில் நுழைகையில், 'இவ்வீட்டிலுள்ள யாவருக்கும் சமாதான முண்டாக' என வாழ்த்துமின். ஓரூரில் இருக்கையில், முதலில் உங்களை ஏற்றுக்கொள்ளுகிற வீட்டிலேயே தங்குமின். வீடுவிட்டு வீடுமாறவேண்டா. வருந்தி உழைப்பவன் உணவுக்கு அருகன். ஊரிலுள்ள பிணியாளிகள் நோய்களைத் தீர்மின். 'நீவிர் எல்லீரும் பாவத்தைவிட்டுக் கடவுளை அடையின், கடவுளரசு வரத்தாமதியாது' என எவருக்கும் எடுத்துக்கூறுமின். யாதோரிடத்தில் நும்மை ஏற்றுக்கொள்ளாவிடின், அவ்விடத்தைவிட்டு நீவிர் போகும் போது, நுமக்கும் அவர்களுக்கும் யாதொரு தொடர்புமில்லை என்பதற்கு அறிகுறியாக, நுமது அடியிலுள்ள பொடியையும் உதறிவிடுமின். ஆயினும் அவ்விடத்தை விட்டுப் பெயருமுன், 'கடவுளரசு கிட்டிற்று' என்பதை எடுத்துக்கூற மறக்கவேண்டா."

பன்னிருவரும்போய், "பாவத்தைவிட்டுக் கடவுளை அடையவேண்டும்" என ஊர்தோறும் உபதேசஞ்செய்தனர்; பலரைப்பிடித்திருந்த பேயையோட்டினர்; பலர்நோய் தீர்த்தனர்.

பன்னிருவரையும் ஏசு அனுப்பினபின்பு, தாமும் ஊர் தோறுஞ்சென்று, பிரசங்கஞ்செய்து, போதனைபண்ணித் திரும்பினர்.

ஏரதன் அந்திப்பன் ஏசுவைக் கொல்லத்தேடுதல்.—ஏசுவின்புகழ் நாடெங்கும் பரம்பினது. பேரூர் சிற்றூர், பட்டி

தொட்டி எங்கும் அவரைக்குறித்துப் பேசாதாரில்லை. ஏரதன் அந்திப்பன் அரமனையிலும் ஏசுவின் கீர்த்தி நிறைந்தது. இவரது செயலையும் உரையையுங் கேள்விப்பட்ட குறுநில மன்னன், "இவன் யார்? ஓகனனைக் கொன்றேன்; அவன் சாவோடு சனியன் தொலைந்ததென நினைத்தேன்; ஆயினும் அது தொலைந்தபாடில்லை; வெட்டவெட்டத் தழைக்கும் மரம் போல, இராசதுரோகிகள் தலையெடுக்கின்றனர். இத்துரோகிகளை முளையிற் களைதலே புத்தி. *ஓசுவனையும் ஒழிப்பதே தகுதி" என எண்ணினன். இதுமுதல் ஏசுவைக்கொல்ல நாடினன் ஏரதன்.

பெருஞ் சனத்திரள் பசிதீர்த்தல்.—ஊர்தோறுஞ்சென்று திருப்பணிசெய்த பன்னிருவரும், தம் வேலை முடிந்தபின் திரும்பிவந்து, ஆங்காங்கு தாம்தாம் செய்த செயலையும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் ஏசுவுக்குச் சொன்னர். "அடிகாள், பேயும் எமக்குக் கீழ்ப்படிந்தன" என்ற இவர்சொல்லைக் கேட்ட ஏசு, "வானத்தில் மின்னல் இழிவதுபோலச் சாத்தன் விழ நான்கண்டேன். பேய்கள் நுமக்குக் கீழ்ப்படிவதைக் கண்டு மகிழவேண்டா. நும் பெயரெல்லாம் பரலோகத்தில் எழுதியுள்ளன என அறிந்து, களிகூர்மின் †" என்றார்.

---

* ஓசுவன் என்னும்பெயரே ஏசு என மருவிற்று என்று முன்னமே கண்டோம்.

† "பரலோகத்தில் நும்பெயர் எழுதியுள்ளன" என்றசொல்லின் பொருள் யாது? பரலோகத்தில் நித்திய பேரின்ப வாழ்வை அனுபவிப்பவர் சிலரே என்பது ஏசுவின் கருத்தோ? அஃதே அவர்கருத்தென நாம் எண்ணவேண்டியதில்லை. அஃதே அவர்கருத்தாயின் நாம் அதனைக் கொள்ளவேண்டியதுமில்லை.

இப்படிச் சொல்லியபின் ஏசு பன்னிருவரையும் நோக்கி, "வேலைசெய்து களைத்துவந்திருக்கின்றீர்; சற்று இளைப் பாறும்பொருட்டு தனியிடத்துக்குப் போவோம், வம்மின்" என்றார். [இவர்களிருந்த இடத்தில் பலர் ஓயாமல் வருவதும் போவதுமாயிருந்தபடியால், போசனஞ்செய்யவும் இவர்களுக்கு நேரங்கிடைக்கவில்லை.] ஏசுவும் பன்னிருவரும் படகிலேறி தனியிடம்நாடிப் போயினர். இவர் படகிற் போவதைக்கண்ட சனத்திரள், இவரை இன்னாரென அறிந்து, இவர் போகுமிடம் இஃதென உத்தேசித்து, கரைவழியே ஓடி, இவருக்கு முந்திப்போய், இவர் போகுந்துறையில் காத்திருந்தது. இவர் வேற்சதைஎன்னும் இடத்தில் படகை விட்டிறங்கினார். காத்திருந்த சனத்திரளைக்கண்ட ஏசு உடனே உபதேசஞ்செய்யத்தொடங்கினார். ஏசுவின் உபதேசத்தைக் கேட்டவர் எவரும்நேரங்கடந்துபோனதைக் கவனிக்கவில்லை. அப்பொழுது பன்னிருவரி லொருவன், "அடிகாள், பொழுது பட இன்னும் இரண்டொருநாழிகைதானுண்டு; அருகில் ஊ ரொன்றுமில்லை; இது வெட்டைவெளி; இவர்போய், எங்கேனும் உணவுதேடவேண்டும்; இன்றைக்கு இவ்வளவோடு உப தேசத்தை நிறுத்துவது நலம்" என்றான். ஏசு, "இவர் போகவேண்டியதில்லை; எல்லாரும் இங்கு சாப்பிடலாம். இவர் எல்லாரையும் சிறுசிறு கூட்டமாக, நிரைநிரையாக, பிரித்து இருத்துமின்" என்றார். அப்படியே வந்தவரெல்லாம் பசும் புற்தரை*யிலே இருந்தனர். ஏசு சீஷரைப்பார்த்து, "நம்

* பலஸ்தினநாட்டில் புல் பசுமையுற்றிருப்பது வசந்தகாலத்திற் தான்; ஆகவே இது நடந்தகாலம் பங்குனி—சித்திரையிற் போலும்.

மிடத்திலுள்ள உணவைக் கொண்டுவாரும்" என்றார். ஐந்து அப்பமும் இரண்டுமீனும் கொண்டுவந்து ஏசுமுன் வைத்தார் சீஷர். இதைக்கண்ட சனத்திரளிற் பலர் தாம்தாம் வைத்திருந்த உணவையும் கொண்டுவந்து ஏசுவுக்குமுன் குவித்தனர். குவித்திருந்த உணவை ஏசு எடுத்து, கடவுளைத் துதித்து, பங்கிட்டுக்கொடுக்க, சீஷர் அதை இருந்தவரெல்லாருக்கும் பரிமாறினர். வந்தவரெல்லாம் பசிதீரப்புசித்தபின்னும் ஊண் மிக மிஞ்சியது.*

**ஏசுவுக்குவந்த சோதனை.**—இத்தருணத்திலே ஏசுவின் உள்ளத்தில் ஒரு பெருஞ்சோதனை எழுந்து அவரைக் கலக்கியது. அஃது ஓகன முனிவரர் [தாம் சாவதற்குமுன்] ஏசுவைக் கேட்டனுப்பின வார்த்தையே.

"தேவராசன் நானேயோ?.... இதனை இப்பொழுது இச்சனத்திரளுக்குச் சொல்லவொண்ணாதோ?.... சொன்னால் இப்பொழுதே இவர் என்னை முடிசூட்டுவாரோ?...."

இப்படிப்பட்ட எண்ணங்கள் மனத்திலெழுந்து சூறுவளி மரத்தை அசைப்பதுபோல ஏசுவை அசைத்தன. உடனே ஏசு அங்கிருந்த படகில் பன்னிருவரையும் ஏற்றி, "நீவிர் கப்பணஞ்சென்மின்; நான்நாளைக்கு வருவேன்" என்று, தம்மைவிட்டுப் பிரியமனமில்லாத பன்னிருவரையும் போகும்படி வற்புறுத்தி அனுப்பிவிட்டார். பன்னிருவரும் போனபின், அவர் சனத்திரளைநோக்கி, "இனிநான் கலிலேயிற்

* பெருஞ் சனத்திரளொன்றுக்கு ஒருநாள் ஏசு உணவளித்துப் பசிதீர்த்தது மெய். இது முற்றும் நம்பத்தக்கதே. ஆயினும், ஐந்து அப்பமும் இரண்டுமீனும் இயற்கையை மிஞ்சிப் பெருகி, எல்லார்பசியையுந் தீர்த்தது என்பது சிறிதும் நம்பத்தக்கதன்று.

திருப்பணிசெய்வது இயலாது; கலிலேயைவிட்டு நான் போதல் வேண்டும்; இப்பொழுதே உங்களிடம் விடைபெற்றுக்கொள்கிறேன்" என்று, சனத்திரளை அனுப்பிவிட்டு; அங்கிருந்த ஒரு குன்றின் உச்சியிலேறி, இரவெல்லாம் கடவுளைவேண்ட, அவரது மனக்கலக்கந்தீர்ந்து, உள்ளம் அமைதியுற்றது.

வைகறையில் அவர் அவ்விடம்விட்டுக் கரைவழியே கப்பணம்நோக்கி நடந்து, பன்னிருவரையுமடைந்தார்.

**கேன்னசரை.**—கலிலேயேரிக்குத்தென்மேற்கேயுள்ளது கென்னசரைப் பெருவெளி. இங்கு பன்னிருவரோடும் ஏசு படகிற்சென்று, அவ்வெளியிலுள்ள பல ஊர்களுக்குப் போனார். போனவிடமெல்லாம் ஊரார் நோயரை ஏசுவிடங் கொண்டுவந்து நோய்தீர்க்கும்படி வேண்டினர். பலர் ஏசு தரித்திருந்த சட்டையின்விளிம்பைந் தொடுதற்குஅனுமதி தரும்படி வேண்டினர். ஏசுவைத்தொட்ட பிணியர் பலர் ஆரோக்கியமடைந்தனர்.

அப்பொழுது சாத்திரிமார் சிலர் ஏசுவிடம்வந்து, "இவ்விடத்தைவிட்டு உடனே போய்விடுக. ஏரதன் உம்மைக் கொல்ல நாடுகிறான்" என்றனர். இவர் அவர்களைநோக்கி, "இன்றைக்கும் நாளைக்கும் நான் இங்குதங்கி, நோயினர் பலருக்கு ஆரோக்கியந்தருதல்வேண்டும் என்றும், மூவதுநாள் என்வேலை நிறைவுறும் என்றும் நீவிர் அந்த நரிக்குப்போய்ச் சொன்மின்" என்றார்.

## நால்வது படலம்

### பலத்தினைவிடுதல்; பரதேசசஞ்சாரம்

கொடுங்கோல் வேந்தனை யஞ்சி, நாட்டினை
விடுத்துத் திரிந்ததை விளம்பும்இப் படலம்.

தீரம் சார்நிலம்.—பலத்தினைநாட்டுக்குப் புறம்பே, வடபால் உள்ளது பினிகம் என்னும் நாடு. அதிலுள்ள நகரங்களில் தீரம், சீதனம் என்னுமிரண்டும் பேர்பெற்றவை. இவ்விரண்டும் பெருங்கடற்கரையில் உள்ளவை. தீரம் தெற்கிலும் சீதனம் வடக்கிலும் இருப்பன.

தம்மைக்கொல்ல ஏரதன் தேடுவதை அறிந்த ஏசு, தாம் அவன்நாட்டில் வாழ்வது கூடாது என எண்ணி, பலத்தினைக்குப் புறம்பே, பினிகநாட்டிலே, தீரம் என்னும் நகரையடுத்த ஊர்களிலே, பிறர் அறியாமல் உறையக்கருதி, கலிலேயைநீங்கி அங்கு பன்னிருவரோடும் சென்றார்.*

சீரியபினிகிய ஸ்திரீ.—குலத்திலும் சமயத்திலும் யூதவகுப்பைச்சேராத ஒருபெண், யூத குருமணி ஏசுவின் புகழை

* கொடுங்கோல்வேந்தனை அஞ்சி, தம் நாட்டைவிட்டு ஏசு ஓடியது வீரமோ எனின்,

> "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை; அஞ்சுவ
> தஞ்சல் அறிவார் தொழில்"

என்னுந் திருவள்ளுவர் கூற்றினைச் சிந்திக்க.

வைணவாசாரியராகிய தமக்கு, சைவனாகிய குலோத்துங்க சோழன் தீங்கிழைக்கத் தேடுகின்றான் என அறிந்த இராமானுசர், சோழமண்டலத்தைவிடுத்து, மைசூர் சமஸ்தானத்தை அடுத்து, அங்கு பலவருஷம் வாழ்ந்தாரென அறிக.

முன்னமே கேள்விப்பட்டவள், இப்பொழுது தன் ஊருக்கருகில் ஏசு வந்து மறைந்துறைகின்றனர் என அறிந்து, பேய்பிடித்த தன் மகளுக்கு அவர் அருள்புரியவேண்டுமென்று நாடி, ஒருநாள் ஏசுவிடம்வந்து, “அடிகாள், என் மகளைப் பேய்பிடித்தாட்ட அவள் மிக வருந்துகின்றாள்; ஏழையேம்பால் இரங்குக” என வேண்டினள். வேண்டவும், ஏசு பேசாது வாளாவிருந்தனர். இவள் மீட்டும்மீட்டும் இவ்வாறே விண்ணப்பஞ்செய்ய; பன்னிருவரும், “அடிகாள், இவள் இரப்பது கேட்கவில்லையோ? இவள்மேல் இரங்குக” என்றனர். அதற்கு ஏசு, “பிள்ளைகள்உணவை எடுத்து நாய்களுக்கிடலாமோ?” என்றார்.

உடனே அப்பெண், “அடிகாள், பிள்ளைகள்உணவை நாய்க்கு இடுதல் சரியன்றாயினும், பிள்ளைகள் உண்கையில் கீழேவிழும் பருக்கையை நாய்தின்னலாகாதோ?” என்றனள். இவள் சாதுரியத்தை ஏசு வியந்து, “உன்மகளைப் பிடித்த பேய் அவளைவிட்டுப்போயிற்று. நீ போகலாம்” என்றார்.*

* தாங்களே கடவுளுக்குப் பிள்ளைகளென்றும், கடவுள் தங்களுக்குமட்டுமே தந்தை என்றும், புறச்சாதியாரனைவரும் நாய்களென்றும் யூதருட் பெரும்பான்மையோர் எண்ணிவந்தனர். ஏசு இங்கு சொல்லிய சொல்லை ஆராயின், இவருக்கும் இக்குறுகியசிந்தை இருந்ததென்பது வெளிப்படை. ஆயினும், புறச்சாதியாள் இவளோடுசெய்த சம்பாஷணையால், ஏசு இம்மருள்நீங்கித் தெருளுற்றார். யூதர் மட்டுமல்ல, மனிதரெல்லாரும் கடவுளுக்கு மக்களே என்றும், கடவுள் யூதருக்கு மட்டுமல்ல, மனிதரெல்லாருக்குந் தந்தையே என்றும் ஏசு அறிந்தார். அறியவே, முன்னிருந்த குறுகியசிந்தை போய், அவர் மனமும் விசாலித்தது.

இதனை ஓராது வேறுவேறு கூறுவார் பலர். அவற்றுள் ஒன்றும் பொருந்தாது.

பத்தூரில் நிகழ்ந்தது.—ஏசு தீரமாகாணத்தைவிட்டு, சீதனமாகாணத்தினூடேசென்று, பத்தூர்மாகாணத்தை ஊடறுத்து, கலிலேக்கடலின் கீழ்கரைசேர்ந்தனர்*: அங்கு, செவிடும்கொன்னைவாயுமுள்ள ஒருவனை அவரிடம் சிலர் கொண்டுவந்து, அவனைச் செவிடும் கொன்னையுந் தீர்க்கும்படி வேண்டினர். அவர் அவனைத் தனியிடத்துக்குக் கொண்டு போய், அவனது இரண்டுசெவியிலும் தமது கைவிரல்களை வைத்து, அவன்நாவிற் தம் உமிழ்நீராற் தொட்டு, வானத்தை அண்ணாந்துபார்த்துப் பெருமூச்சுவிட்டு, அரமைகபாஷையில், "எப்-ப்-ப்-பத்தா"† என அளபெடுத்துக்கூறினார். உடனே அவன் செவிடுங்கொன்னையுந் தீர்ந்து, காதுகேட்கவும் வாய் திக்காமற் பேசவுந்தொடங்கினான்.

கவலையைக் கண்டித்தல்.—பத்தூரைவிட்டு பன்னிருவரோடும் படகேறி வேற்சதைக்கு ஏசு போகையில், சீஷர் "உணவுகொண்டுவர யாம் மறந்துபோனேம். இப்பொழுது உணவுக்கு என்செய்வேம்?" என்று கவலையுற்றதைக்கண்ட ஏசு, "உணவில்லையென்று நீவிர் கவல்வது ஏன்? இன்னும் நுமக்குக் கடவுளில் நம்பிக்கையில்லையா?" என அவரைக் கண்டித்தனர்.

வேற்சதைக் குருடன்.—வேற்சதைக்கு ஏசுவந்துசேர்ந்தவுடன், §பார்வை கெட்டுப்போன ஒருவனைச் சிலர் கொண்டுவந்து, அவன் கண்ணை ஏசு தொடும்படி வேண்டினர்.

* நேர்வழியைவிட்டு இப்படி ஏசு சுற்றித்திரிந்ததும் பிறர் தம்மை அறியாதிருக்கும்பொருட்டே போலும்.

† "எப்பத்தா" என்பதற்குத் "திற" என்பது பொருள்.

§ பார்வை கெட்டுப்போன ஒருவன் பிறவிக்குருடன் அல்லன். முன்பு பார்வையுடையன், பின்பு பார்வையிழந்தவன்.

ஏசு அவனை ஊருக்கு வெளியே கொண்டுவந்துநிறுத்தி, தம் விரல்களைத் தமது உமிழ்நீரால் நனைத்து, அவற்றால் அவன் கண்ணிரண்டையுந்தொட்டு, "பார்வையடைந்தாயோ?" என்றார். அதற்கு அவன், "கண் தெரிகின்றன; ஆனால் நடக்கும் மரம்போல மனிதர் தோன்றுகின்றனர்" என்றான். ஏசு பின்னும்ஒருமுறை அவன்கண்ணைத் தொட, அவன் சிறிது நேரம் உற்றுப்பார்த்தான்; அப்பொழுது பார்வை தெளிய, எவற்றையும் உள்ளபடியே பார்த்தான்.

"ஊரிலே எவருக்கும் இதைச் சொல்லாதே; உன் வீட்டுக்குப் போ" என்று ஏசு அவனை அனுப்பிவிட்டார்.

ஏசுவே மேசியர்.—பின்பு ஏசுவும் பன்னிருவரும் பிலிப்பி கேசரி நகருக்கருகேயுள்ள ஊர்களை நோக்கிச்சென்றனர். வழியிலே அவர் பன்னிருவரையும்பார்த்து, "நமது சீமையிலே, நான் யாரெனப் பேசிக்கொள்கிறார்கள்?" என; அவர்கள், "சிலர், ஓகனமுனிவரரென்றும்; வேறுசிலர், எலிய முனிவரென்றும்; வேறுசிலர், பூர்வகாலத்து இருடிகள்போன்ற ஓர் இருடியென்றும், பலர் பலவாறு பேசுகின்றனர்" என்றார்கள். அப்பொழுது ஏசு அவர்களைநோக்கி, "நீவிர் என்னை யாரென்று எண்ணுகின்றீர்?" என வினவ; சீமன், "அடிகளே மேசியர்*" என்றான்.

இதனைக்கேட்ட ஏசு தாம் மேசியரென்பதை ஒருவருக்கும் சீஷர் அறிவிக்கலாகாது, எனத் திட்டமுள்ள கட்டளையிட்டனர்.

* 'மேசியன்' என்பது எபிரயமொழி. கடவுள் அபிஷேகம்பண்ணின மன்னவன் என்பது இதற்குப்பொருள். 'கிறிஸ்து' என்னும் கிரிகமொழிக்கும் இதுவே பொருள். ஊதர் தாம் எதிர்பார்த்த தேவராசனை மேசியர் எனக் கூறுவர்.

பிள்ளைமைப்பான்மையுடையாரே அப்பனை அறிவர்.— அப்பொழுது ஏசு, வானத்துக்குக் கண்களை ஏறெடுத்து, "அப்பனே, விண்ணுக்கும் மண்ணுக்கும் உடையானே, போற்றி, போற்றி. அறிஞரும் கலைஞரும் அறிவாலுங் கலையாலும் காணக்கூடாததை நீ பாலருக்குக் காட்டினாய்! அப்பனே, திருவுளக்கருத்து இருந்தவாறென்னே!" எனக் கடவுளைத் துதித்தபின்பு; பன்னிருவரையும் நோக்கி, "நீவிர் பார்ப்பனவற்றைப் பார்க்குங்கண்ணே பாக்கியம்பெற்றவை! இருடிகள் பலரும் தீர்த்தர் பலரும் வாஞ்சையோடு தேடியும் காணாதனவற்றை நுங்கண் கண்டன; அவர் கேளாதனவற்றை நும்செவி கேட்டன"* என்றார்.

இவ்வாறு "அடிகளே மேசியர்" எனச் சீமன் கூறியதன் பின், முன்னொருபோதும் சொல்லாததொன்றை இப்பொழுது ஏசு சொல்லத்தொடங்கினார்: "நான் பலராற் பலஇடர் அடைய நேரிடும்; என்னைக்கொல்லினும் கொல்லுவர்." இவ்வாறு ஒன்றையும் மறையாமல் ஏசு பேசினதைக் கேட்ட சீமன், அவரைத் தனியிடம் அழைத்துச்சென்று, "அடிகாள், இவ்வாறு பேசற்க; அடிகளுக்கு யாதொருதீமையும் வாராது. அடிகளை இடர்செய்ய வல்லார் யார்?" என்றான். ஏசு அவனைக்கடிந்து, "சாத்தனே, அகல் என்னை விட்டு! கடவுள்

* "காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே?
காண்பார்ஆர், கண்ணுதலாய், காட்டாக் காலே?"
—திருநாவுக்கரசர்.

"காட்டா தனவெல்லாங் காட்டி, பின்னும்
கேளா தனவெல்லாங் கேட்பித்'தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்!
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே!"
—மாணிக்கவாசகர்.

எண்ணுவதுபோல் எண்ணுகிறாயில்லை; மனுஷர் எண்ணுவது போலவே நீயும் எண்ணுகிறாய்" என்றார்.

இதன்பின் பன்னிருவரையும் ஏசு அழைத்து, இவ் வண்ணங் கூறுவார்:

"எவனேனும் என்பின் வரநாடுவனேல், அவன் தன்னைவெறுத்தல்வேண்டும். தன்னுயிரைக் காக்க நாடுபவன் அதனை இழப்பான்; தன்னுயிரைக் கடவுளரசின் பொருட்டு இழப்பவன் அதனைக் காப்பான். உலகம் முழுவதையும் ஒருவன் பெற்றானேனும், இனிவரும் வாழ்வை இழப்பனேல், அவனுக்கு இலாபமென்ன?"

# ஐவது படலம்

## சீஷர்தம்முட்செய்த திருப்பணி

புறநாடு விடுத்துக் கலிலேயூ டறுத்தே
ஊதையை அடுத்ததை உரைக்கும்இப் படலம்.

புறநாடு **விடுத்தது.**—ஏசுவும் பன்னிருவரும் புறநாட்டிற் சஞ்சரித்த காலத்தினளவு இரண்டொருமாதமோ, ஏழெட்டுத் திங்களோ, நாம் அறியேம். இவ்வளவுகாலம் ஏரதனை அஞ்சி, எவருமறியாமல் ஒளிந்து திரிந்த ஏசுவுக்குத் திடீரென ஊதைக்குப்போகும் எண்ணம் உதித்ததுபோலும். உடனே தாமிருந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டார் ஏசு. ஆயினும் ஊதையைச் சேருமுன் கலிலேயைக்கடத்தல் அவசியமென அவர் கண்டனர். கலிலே ஏரதனது இராச்சியத்தைச் சேர்ந்தது. ஆகவே அதனூடுசெல்லும்போது தம்மை ஒரு வரும் அறியாதிருக்கும்பொருட்டு மறைந்துசெல்ல ஏசு தீர்மானித்தார். தாம் தனித்துச்செல்லவும், பன்னிருவரும் தம்முட்பிரிந்து, தனித்தனி மூவர் நால்வர் அடங்கிய கூட்டம் கூட்டமாய்ச் செல்லவும் ஏசு துணிந்தார். அவ்வாறே சென்று அனைவரும் கப்பணஞ்சேர்ந்தனர்.

"வருகிறவழியில் நீவிர் ஒருவரோடொருவர் எதைக் குறித்து வாதஞ்செய்தீர்?" என்று ஏசு பன்னிருவரிற் சிலரைக் கேட்டார்*. அவர்கள் ஒன்றும்பேசவில்லை.

* சீஷர் தம்முள் வாதஞ்செய்ததை ஏசு அறிந்ததெப்படி? இராக் காலத்தில் ஏசுவுக்குமுன்னே சிறிதுதூரத்தில் நடந்துசென்ற சீஷரிற் சிலரது மனம் வாதத்திலீடுபடவே, பின்னே நடந்து வந்த ஏசு தம்மைக்கடந்து முன்னேசென்றதை அவர் கவனிக்க வில்லை. தாம் பேசியதெல்லாம் ஏசு கேட்டதும் அவர் அறியவில்லை.

அவர் வாதித்தவிஷயம் தம்முட் பெரியார் யாவர் என்பதே. ஏசு ஒரு சிறுகுழந்தையை எடுத்து, தம்மடியில் இருத்தி, "இச்சிறு குழந்தையைப்போல் மனத்தாழ்மையுள்ளவனே கடவுளரசிற் பெரியவனுவான்" என்றார்.

அவ்விடம்விட்டு ஊதையைநோக்கி ஏசு பன்னிருவரோடும் புறப்பட்டனர்.

ஏசு கடைசிமுறை கலிலேயை விடுதல்.—ஏசுவும் பன்னிருவரும் கலிலேயைவிட்டுச் சமரிமாகாணத்துக்குட் பிரவேசித்தனர்*. அங்கு சனம் திரள்திரளாக அவர் உபதேசத்தைக்கேட்க வந்தது. அவர் தமது வழக்கத்தின்படி உபதேசஞ்செய்தார்.

அழிக்கவன்று, காக்கவே வந்தவர்.—தாம் வருவதை முன்னமே அறிவிக்கும்படி தூதர்சிலரை ஏசு அனுப்பினர். அவர்கள் அவர் வரவுக்கு ஆயத்தஞ்செய்யும்படி சமரிமாகாணத்தில் ஓர் ஊருக்குப்போனார்கள். ஏசு ஊதைக்குப் போவதை அறிந்த அவ்வூரார் அவரை ஏற்று உபசரிக்க விரும்பவில்லை. இதனைக்கண்ட ஓகனயாகவர், "இவ்வூரில் இடிவிழுந்து ஊராரெல்லாரும் அழிக" எனச் சபித்தனர். ஏசு

* சமரிமாகாணத்தாரைச் சமரியர் என்பர். இவர்சமயம் ஊதசமயமேயாயினும், இவர் குலத்திற் சங்கரசாதியார். எழுநூறு வருஷத்துக்குமுன்னே சமரியைச் சீரியர் வென்றபின், சீரியர்பலர் இங்கு வந்துவசிக்கவே, ஊதரும் சீரியரும் கலந்ததால் உண்டான குலம் சமரியர்குலம். சமரியர் ஊதத்திருமுறைகளிலே "பஞ்சாகமம்" என்னும் நூலைமட்டும் அங்கிகரித்தனர். ஊதரிற் பெரும்பான்மையோர் சமரியர் வீட்டில் உண்ணார். அவரோடு கொள்வினைகொடுவினை செய்யார். ஊதர் சமரியரையும் சமரியர் ஊதரையும் பரஸ்பரம் வெறுத்தனர்.

இதைக்கேட்டு அவர் இருவரையுங் கண்டித்தார். அதன்பின் ஏசு வேறோர் ஊருக்குச் சென்றார்.

**யார் என் அயலவன்?**—ஏசு சமரிமாகாணத்தைவிட்டு, ஊதைமாகாணத்துட் புகுந்து சிலதிங்கள் அங்கு கைங்கரியஞ்செய்துவந்தார். ஒருநாள் ஒருவன் ஏசுவைநோக்கி, "குருவே, 'உன்னைப்போல் உன் அயலவனையும் நேசி' என்பது தேவவாக்கு. இதில் அயலவன் என்றது யாரை?" என வினவினான். அவ்வினாவுக்கு ஏசு கொடுத்தவிடை:

"ஊதனொருவன் எருசலைநகரத்தைவிட்டு, எரிகம் என்னும் ஊருக்குப் பயணஞ்செய்கையில், வழியில் *ஆறலைப்பார் கையில் அகப்பட்டான். அவர் அவனை நையப்புடைத்து, அவன் பொருளெல்லாவற்றையும்பறித்து, அவன் உடுத்திருந்த ஆடையையும் அபகரித்துக்கொண்டு, அவன் உயிர் குற்றுயிரென்ன விட்டுவிட்டுப்போயினர். அதன்பின் எருசலை நகரத்திருந்து அவ்வழியேசென்ற அருச்சகனொருவன், விழுந்துகிடந்த மனிதனைத் தூரத்தே கண்டு, அவனை அணுகவும் மனமின்றி, வீதியின் மற்றப்பக்கம் நடந்து போய்விட்டான். பின்பு §இலேவியன் ஒருவன் அவ்வழியே சென்றான். அவனும் அருச்சகனைப்போலவே, குற்றுயிரோடு கிடந்தவனைக் கண்டும், அவனுக்கு யாதோர் உதவியும் செய்யும் எண்ணமின்றிப் போய்விட்டான். பின்பு அவ்வழியே வந்தான் சமரியன் ஒருவன். இவன் அவனைக்கண்டு, மனமுருகி, அவனிடஞ்சென்று, அவன் காயங்களில் எண்

* ஆறலைப்பார் - வழியில்நின்று பிரயாணிகளிடம் பொருள் பறிப்பவர்

§ இலேவியன் - இலவியகோத்திரத்தான்.
இலேவியர் எருசலை நகரத்துத் திருக்கோயிற் பரிசாரகர்.

ணெய்யும் திராட்சைரசமும் ஊற்றி, வஸ்திரத்தாற் சுற்றிக்கட்டி, தான் ஏறிவந்த கழுதையில் அவனையேற்றி, அவன்பக்கத்தே நடந்துசென்று, அருகிலிருந்த சத்திரம் ஒன்றுக்குக் கொண்டு போய், நோய்தீருமட்டும் அவனை ஆதரித்தான்.

"ஆறலைப்பார் கையில் அகப்பட்டவனுக்கு, இம்மூவருள் எவன் அயலவன்?"

இவ்வாறு ஏசுகூறக் கேட்டவன், "அவன்மேல் இரக்கம் பாராட்டினவனே" என்றான். ஏசு அவனைநோக்கி, "அவன் செய்ததுபோல நீயுஞ்செய்" என்றார்.*

மாதையும் மரியும்.—வழிநடந்து போகையில் ஏசு ஓர் ஊருக்குட்§ சென்றார். அங்கு ஒருபெண் அவரைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் உபசரித்தாள். அவள் பெயர் மாதை. மாதைக்கு உடன்பிறந்தாள் ஒருத்தி. அவள் பெயர் மரி. ஏசு ஓர் உயர்ந்த ஆசனத்திலிருக்க, அவர்பாதத் தருகே மரி இருந்து, அவர் உபதேசித்ததெல்லாம் கேட்டாள். மாதை பலவகைக்கறி சமைத்துக்கொண்டிருந்தாள். தான்

* கள்வர்கையில் அகப்பட்டவன் ஊதன். அருச்சகனும் இலேவிய னும் ஊதர். இவர் தாம் ஊதராயினும் தம் உடன் ஊதன் ஒருவ னுக்கு உதவிசெய்ய மனமின்றிப் போய்விட்டார். சமரியன் அயலவனல்லன், அன்னியன்; ஆயினும் விழுந்துகிடந் தவனை நொதுமலனென எண்ணாமல் அயலவனென எண்ணி இரக்கம்பாராட்டினான்.

இக்கதையால் ஏசு உபதேசிப்பது? மாற்றான் அயலவன் நொதுமலன் எனப்பாராது, எவனாயினுமாக, வருந்துபவனுக்கு உதவிசெய்க என்பதே. இப்படிப்பட்ட சமயங்களிலே தமர் என்றும் பிறர் என்றும் வேற்றுமைபண்ணுதல் தவறு.

§ இச்சம்பவத்தைக்கூறும் உலுகனார் இவ்வூரின் பெயர் சொன்ன ரில்லை. இது வேதனி என்பதற்கு ஆதாரம் இல்லை.

இப்படிவேலைசெய்ய, தன்னைத் தனியேவிட்டு மரி ஏசுவின் உபதேசத்தைக் கேட்டுக்கொண்டிருந்ததைப் பார்த்த மாதை, "குருவே, என் உடன்பிறந்தாள் என்னைத் தனியே வேலை செய்ய விட்டுவிட்டிருப்பது சரியோ? எனக்கு உதவிசெய்யும்படி அவளுக்குச் சொல்லுக" என்றாள். ஏசு, "மாதாய், மாதாய், உசித போசனம் தெரிந்துகொண்டாள் மரி; அவள் அருந்துவதைத் தடுத்தல் ஆகாது" என்றார்.*

ஏசு சீஷருக்குபதேசித்தல்.— "சாத்திரிமாரின் புளித்தமா† நமக்குத் தீமைசெய்யாதபடி நம்மைக் காத்துக் கொண்மின்.

"ஒளித்தவற்றுள் ஒன்றும் வெளிப்படாமற்போகாது; மறைத்தவற்றுள் ஒன்றும் தெரியாமற்போகாது.§

"உடலுக்குத்தான் மனிதர் தீங்குசெய்யலாம்; அவரை அஞ்சவேண்டா. உடல் அழிந்தபின் உயிரை நரகத்தில் இடவல்லவர் ஒருவர்; அவரையே அஞ்சுங்கள்.

"ஐந்து ஊர்க்குருவிக்கு விலை இரண்டு காசு; இவை இவ்வளவு அற்பபிராணியாயினும் இவற்றையுங் கடவுள் மறப்பதில்லை. குருவியை மறவாதவர் நம்மை மறப்பாரோ?"

* செவிக்குண வில்லாத போழ்து, சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்."

— திருவள்ளுவர்.

† இங்கு புளித்தமா என்றது போலியுபதேசத்தை.

§ பிறர் அறியாமல் மாய்மாலிகள் பூணும் வேஷமெல்லாம் சில நாளைக்குத்தான். பின்பு அவைவெளிப்படும் என்பது இதன் பொருள்.

நியாயவிசாரணைசெய்ய ஏசு வரவில்லை.— ஒருநாள் ஏசு ஊர்வெளியிலே உபதேசஞ்செய்கையில், பலர் கூடிவந்து அவர் உபதேசத்தைக் கேட்டார். அப்பொழுது ஒருவன், "குருவே, எந்தைபொருளில் எனக்குவரவேண்டிய பங்கை என் உடன்பிறந்தான் எனக்குத் தருகிறானில்லை. தாம் தயை செய்து அவனோடு பேசி, என்பங்கை எனக்குத் தரும்படி சொல்லல்வேண்டும்" என்றான். அவனுக்கு அவர், "நம் அலுவல்களில் நியாயந்தீர்க்க என்னை நீதிபதியாக்கினவர் யார்?" என்றார்.

பொருளாசையை இகழ்தல்.— அவனுக்கு இவ்வாறு விடைகூறினபின்; ஏசு கூடியிருந்தவரைப் பார்த்து, "பொருளாசையென்னும் விஷம் தீண்டாதபடி நம்மைக் காத்துக் கொண்மின். பலபொருள் உடைமையால் வாழ்வுண்டாகுமோ?" என்று, மேல்வரும் கதைசொன்னார்:

"செல்வன் ஒருவனது நிலம் மிகவிளைந்தது. அப்பொழுது அவன், 'நான் என்ன செய்வேன்? இந்த விளைவையெல்லாங் கொள்ளா என்களஞ்சியம்' என்று சிறிது நேரம் யோசித்தபின், 'நான்செய்வது இது: என்களஞ்சியங்களை இடித்துவிட்டு, இவற்றினும் பெரியவை கட்டுவேன்; அவற்றுள் என் விளைவெல்லாங் குவித்துவைப்பேன். அதன் பின், நெஞ்சே, இவ்வாண்டுவிளைந்த விளைவு பலவருஷத்துக்குக் காணும்; இனிக் கவலையில்லை; உண்டு குடித்துக் களி என்பேன்' என்றான். கடவுளோ, 'மூடனே, இவ்விரவு உன் உயிர்நீங்கும்; நீ ஈட்டின விளைவெல்லாம் யாரைச் சேரும்?' என்றார்.

"பொருள் இருக்கையில் கடவுளை நினையாமலும் பிறருக்குதவிசெய்யாமலும் தன்வாழ்வைச் சதமென்று நினைப்பவன் மூடன்."

" உணவைக்குறித்தேனும் உடையைக்குறித்தேனும் நீவிர் கவல வேண்டா; உணவினும் உடையினும் பெரிது வாழ்வு. காக்கையைப் பார்மின்: அவை விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை, குதிரிலாயினும் களஞ்சியத்திலாயினும் இரைதேடி வைப்பதுமில்லை. ஆயினும் கடவுள் அவற்றிற்கும் இரையளிக்கிறுர்*. காக்கையினும் நீவிர் எவ்வளவு உயர்ந்தவர்!

"நம்மில் எவனுயினும் கவல்வதால், தன் ஆயுளுக்கு ஒருநாழிகை கூட்ட வல்லனே? சிறுவிஷயங்களைச்செய்ய இயலாத நீவிர் மறுவிஷயங்களைக்குறித்துக் கவல்வது ஏன்?

"அல்லியைப் பார்மின்: அவை நூற்பதுமில்லை, நெய்வதுமில்லை. ஆயினும் அலங்காரப்பிரியனுகிய சாலமன் வேந்தனும் அவற்றைப்போல் அழகியஆடை தரித்தானில்லை. இன்று மலர்ந்து நாளை அடுப்பில் எறியும் காட்டுப்பூவை இவ்வாறு கடவுள் அலங்கரிப்பாராயின், நம்பாதாரே, நமக்கு ஆடையளிப்பது அதிலும் நிச்சயமன்றே? எதை உண்போம், எதை உடுப்போம் என்று கவலவேண்டா. இவையெல்லாம் நமக்கு அவசியமென்பது கடவுளுக்குத் தெரியும். கடவுளரசை நாடுமின்; அதனேடு இவையும் நமக்கு அளிக்கப்படும்§.

* "கருப்பைக்குள் முட்டைக்கும், கல்லினுட்தேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கும் மெய்யன்"

§ " இம்மை யேதரும் சோறும் கூறையும்;
ஏத்த லாம்;இடர் கெடலுமாம்;
அம்மை யேசிவ லோக மாள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே."

—சுந்தரர்.

"செல்வத்தை ஈட்டிப் பண்டாரத்தில் வையன்மின். பூச்சி அதை அழிக்கும், அதைத் துருப்பிடிக்கும், கள்வர் கன்னம்வைத்துத் திருடுவார். பரலோகசெல்வத்தை ஈட்டுமின். அதைப் பூச்சி அழிப்பதுமில்லை, துருப்பிடிப்பதுமில்லை, கள்வர் கன்னம்வைத்துத் திருடுவதுமில்லை. எங்கு நம்செல்வம், அங்கு நம்உள்ளம்."

துன்பமெல்லாம் தீவினைப்பயனே?—ஒருநாள் சிலர் ஏசுவிடம் வந்து, "எருசலைநகரிலே, திருக்கோயிலிலே, பலிபீடத்தின்மேல் நிவேதனஞ் செய்துகொண்டிருந்த கலிலேயர்சிலரைப் பிலத்தன்* ஏவலாளரைஅனுப்பி, கொல்வித்தான்" என்றார். இதைக்கேட்ட ஏசு, "கொலையுண்ட கலிலேயர் இவ்வாறு செத்ததேன்? இவர் ஏனைய கலிலேயரினும் கொடியபாவிகளோ? இல்லை, இல்லை. அன்றியும், சிலநாளைக்குமுன்னே சிலவம் என்னுமிடத்திலே கோபுரம்விழுந்து பதினெண்மர் செத்தாரே, அவர் எருசலையில்வாழ்ந்த ஏனையோரினும் கொடிய பாவிகளோ? இல்லை, இல்லை" என்றார்.§

* பலத்தினைநாட்டைச் சிலவருஷம்ஆள உரமைச்சக்கரவர்த்தி அனுப்பிய தேசாதிபதி பிலத்தன்.

§ ஒருவனுக்கு வரும் துன்பமெல்லாம் அவன் செய்த தீவினைப் பயனே எனஎண்ணுவார், ஏசு இங்கு கூறுங்கூற்றைக்கவனிக்க. ஒருவனுக்குவரும் துன்பத்துட் பல அவன்செய்த தீவினைப் பயன் எனல் சரியேயாயினும், துன்பமெல்லாம் அவன்செய்த தீவினைப்பயன் எனல் உத்திக்கும் அனுபவத்துக்கும் பொருந்தாது. "எள் ஏன் காய்கிறது? எண்ணெய்க்குக் காய்கிறது; எலிப்பிழுக்கை ஏன் காய்கிறது? கூடவிருந்த குற்றத்திற்காக" என்னும் பழமொழியையும், "அரசமரத்தைப்பிடித்த சனி கீழேயிருந்த பிள்ளையாரையும் பிடித்தது" என்னும் மூதுரையையும் கவனிப்போர், சகவாச தோஷத்தினாலும் உறவினாலும் பலர் வருந்துவதேயன்றித் தாம்செய்த தீவினையால்

கிரியா அத்தி.—ஒருநாள் ஏசு உபதேசஞ்செய்கையில் பின்வரும் கதையைக் கூறினர் :

"ஒருவன் தன் தோட்டத்தில் ஓர் அத்தியை நட்டு வளர்த்துவந்தான். அது மரமானபின் பழக்காலத்திலே அதிலே பழமுண்டோ எனத் தேடிவந்தான். இப்படி மூன்றுவருஷம் கழிந்தன். மரத்திலோ ஒருபிஞ்சுமில்லை. ஒருநாள் அவன் தோட்டக்காரனைப்பார்த்து, 'மூன்றுவருஷம் பழம் தரும் தருமென நம்பிநம்பி ஏமாந்தேன். இந்தமரத்தை வெட்டு; ஏன் இது வீணே நிலத்தின் சாரத்தையும் அழிக்கவேண்டும்?' என்றான். தோட்டக்காரனே அதைவெட்ட மனமின்றி, 'நாயனுர் இன்னும் ஒருவருஷம் பொறுக்க; நான் நிலத்தைக் கொத்தி எருப்போடுவேன்; அடுத்தவருஷம் பழங்கொடுத்தால் சரி; இல்லாவிட்டால், வெட்டிப்போடலாம்' என்றான்."*

ஒய்வுநாளில் நோய்தீர்த்தல்.—சனிக்கிழமைஒன்றில் ஒரு பள்ளியில் ஏசு உபதேசஞ்செய்தார். பதினெட்டுவருஷம் நோயால்வருந்தின பெண்ணொருத்தி அங்குவந்திருந்தாள். அவள் முதுகுவளைந்து சிறிதும் நிமிரக்கூடாத கூனி. அவளை ஏசு கண்டு, தம்மிடம் அழைத்து, தமதுகையால் அவள் முதுகைத் தடவி, "மகளே, உன்நோய் தீர்ந்தது" என்றார்.

அன்று என உணர்வர். விசுவாமித்திரருக்கு வசிஷ்டர்மே விருந்த வன்மத்தாலன்றோ அரிச்சந்திரனும் குடும்பமும் துய ருழந்தது? இவையெல்லாம் வெளிப்படையாக, துன்பமெல் லாம் பிராரத்தபலன் என்பது சரியோ?

* புண்ணியஞ்செய்யாதவர் பூமிக்குப் பாரம். அவரை அழித் தலே நீதி. ஆயினும் தாயிற்சிறந்த தயாவானதத்துவன் அவரை அழிக்க மனமின்றி, "இவர் இனியாயினும் புண்ணியஞ் செய்வர்" எனப்பொறுத்திருக்கின்றான். இஃதே இதன் பொருள்.

உடனே அவள் நிமிர்ந்துநின்று, கடவுளைத் துதித்தாள். இதைக்கண்ட பள்ளியதிகாரி மிகச் சிறிச்சினந்து, கூடி யிருந்த சனத்திரளைநோக்கி, "வேலைசெய்ய ஆறுநாள், ஓய்ந்திருக்க ஒருநாள். நம் நோய்களை ஆறுநாளில் எந்த நாளிலும் தீர்த்துக்கொள்ளலாம். ஓய்வுநாள் திருநாள்; இதிலே நோய்தீர்த்துக்கொள்ளுதல் தவறு. இனிமேல் இப் படிச் செய்யவேண்டா" என்றான். ஏசு அவனைநோக்கி, "கபடியே, ஓய்வுநாளில் உன் மாட்டையேனும் கழுதையை யேனும் கொட்டிலிலிருந்து அவிழ்த்து, தண்ணீரூட்ட நீ கொண்டுபோவதில்லையோ? பின்னை ஏன் இந்தக் கபடநாடகம்? பதினெட்டுவருஷம் நோயால்வருந்தின இப்பெண்ணின் நோயை ஓய்வுநாளில் நான் தீர்த்தது குற்றமோ?" என்றார். ஏசுசெய்த மகிமையுள்ள வைபவங்களைக்கண்ட சனத்திரள் மகிழ்ந்தது.

ஓய்வுநாளில் நோய்தீர்த்தல் (தொடர்ச்சி).—சாத்திரி மாரில் ஒருவன் ஏசுவை விருந்துக்கழைத்தான்; அவன் வீட் டிற்கு ஏசு போனார். அன்று சனிக்கிழமை. அந்தவீட்டில் நீர்க்கோவை வியாதியுள்ளவன் ஒருவன் ஏசுவுக்கு முன்னே வந்து நின்றான். அன்று அவன்நோயைத் தீர்ப்பாரோ ஏசு எனப் பலர் குறித்து நோக்கினர். நோயன் நிலையைக் கண்ட ஏசு சாத்திரிமாரைப்பார்த்து, "நோயர் பிணியை ஓய்வு நாளிற் தீர்ப்பது சரியோ?" என்றார். ஒருவரும் பேசின ரில்லை. ஏசு தமக்கு முன்னேநின்றவனைக் கையாற் தொடவே, அவன்நோய் தீர்ந்தது. அவன் அவ்விடம்விட்டுப் போனான். அங்கிருந்தவரை ஏசு நோக்கி, "கழுதையாயினும் மாடா யினும் ஓய்வுநாளில் கிணற்றிலே தவறி விழுந்துவிடின், அதைத் தூக்கியெடுத்துத் தப்புவிக்க மனமில்லாதவன் உங் களில் உண்டோ?" என்றார்.

**விருந்தினருக்குக்கூறிய புத்திமதி.**—அன்று ஏசு மட்டு மல்லர், வேறு பலர் விருந்தினர் வந்திருந்தார். சிலர் பந்தி யிலே முக்கிய ஆசனங்களிலிருக்கத் தேடினதைக் கண்ட ஏசு அவரைநோக்கிப் பின்வருமாறு கூறினர் :

"யாரேனும் நும்மை விருந்துக்கழைப்பின் நீவிரே போய் முக்கிய ஆசனங்களில் இருக்கவேண்டா. நும்மிற் பெரியவனொருவனை விருந்துக்கு அழைத்திருக்கலாமே. வீட் டுக்குடையவன் அவனை அழைத்துவரும்போது நும்மைப் பார்த்து, 'இந்த ஆசனத்தை இவருக்கு விட்டுவிட்டு, நீர் போய் வேறோர் ஆசனத்திலிரும்' என்னில், நீவிர் அடுத்த ஆசனங்களிலெல்லாம் வேறுபலர் இருக்கக்கண்டு, தூரத்திலே பின்னேயுள்ள ஆசனமொன்றில் இருக்கநேரிடும். அப் பொழுது நீவிர் வெட்கமடைவீர். நீவிர் முதலில் தூரத்தி லுள்ள ஆசனத்திலிருந்தால், வீட்டுக்குடையவன் வந்து நும்மைக்கண்டு, 'ஐயா, நீர் எழுந்து முன்னேயுள்ள ஆச னத்திலிரும்' என்பான். அப்பொழுது நுமக்குச் சிறப் புண்டு."*

**தாதாவுக்குரைத்த மொழி.**—தம்மையும் பிறரையும் விருந்துக்கழைத்த தாதாவைநோக்கி ஏசு இவ்வாறு கூறுவர் :

"நீர் விருந்துசெய்யும்போது நண்பரையாயினும் உறவி னரையாயினும் செல்வரையாயினும் அழைப்பின், அவரும் விருந்துசெய்ய நும்மை அழைப்பார். வறிஞர், குருடர், முடவர், சொத்திக்கையர் முதலியவரை அழைப்பின், அவர் நுமக்கு மறுவிருந்து செய்யமாட்டார். கடவுள் நும்மை ஆசீர்வதிப்பார்.

* தனக்குச் சிறப்புண்டாகவேண்டும் என்றநோக்கத்தோடு ஒரு வன் கடையாசனத்திலிருக்கும்படி ஏசு சொல்லவில்லை.

நீதிமான்கள் உயிர்த்தெழும்நாளிலே* நமக்குப் பலன் கிடைக்கும்.''

**விருந்து உள்ளுறை.**—இவ்வாறு ஏசுகூறியதைக்கேட்ட உடன்விருந்தினன்ஒருவன், "கடவுளரசில் நடக்கும் விருந்திற் பங்குபெறுபவன் பாக்கியசாலி" என்றான். அப்பொழுது ஏசு கூறுவார்:

"ஒருவன் ஒருபெருவிருந்துசெய்ய எண்ணிப் பலரை அழைத்தான். குறித்தநாளில் குறித்த நேரத்துக்குச் சிறிது முன்பு அவன் தன் அடியானொருவனை அவரிடம் அனுப்பி, 'விருந்து ஆயத்தம், வம்மின்' என்ன ஏவினான். ஒவ்வொரு வரும் போக்குச்சொல்லத்தொடங்கினர். ஒருவன், 'நான் ஒரு வயல்கொண்டேன்; அதைப் போய்ப்பார்க்கவேண்டும். என்னை மன்னிக்கவேண்டும்' என்றான். வேறொருவன், 'நான் ஐந்து ஏர் மாடுகொண்டேன்; அவற்றைப்போய்ச் சோதிக்க வேண்டும். என்னை மன்னிக்கவேண்டும்' என்றான். பின் னொருவன், 'நான் இன்றுதான் விவாகஞ்செய்தேன். நான் வரல்முடியாது' என்றான். அடியான் திரும்பிவந்து எசமான னுக்கு இவற்றை அறிவித்தான். அவன் கோபங்கொண்டு, அடியானைப்பார்த்து, 'தெருக்களிலும் சந்துகளிலும்போய், வறியவர், குருடர், முடவர், சொத்திக்கையர் முதலியோரை அழைத்துவா' என்றான். அவ்வாறே அடியான் செய்தான். அதன்பின்பு அடியான் எசமானனைப்பார்த்து, 'சாமிசொன்ன படியே செய்தேன். இன்னும் பலருக்கு இடமுண்டு' என் றான். உடையவன் அவனைப்பார்த்து, 'வீதிகளிலும் மூலே

* நல்லார்தீயார் ஆகிய எல்லாரும் உயிர்த்தெழுவார் என் பதோ, நல்லார்மட்டும் உயிர்த்தெழுவார் என்பதோ, ஏசுவின்கொள்கை? நாம் அறியேம்.

முடுக்கிலும்போய், காண்பவரெவரையும் அழைத்துவா; என் வீடு விருந்தினரால் நிரம்பவேண்டும்' என்றான்."*

சீஷராதற்கு நிபந்தனை.—ஒருநாள் திரள்திரளாகச் சனம் கூடி, ஏசுவுக்குப் பின்னே நடந்து வந்தது. அப்பொழுது ஏசு திரும்பிச் சனத்திரளைநோக்கிக் கூறுவார்:

"ஒருவன் எனக்குச் சீஷனாக நாடுவானேல், அவன் தாய் தந்தையரையும் மனைவிமக்களையும் உடன்பிறந்தாரையும் துறத்தல்வேண்டும்; அம்மட்டோ? தன்வாழ்வையே துறத்தல் வேண்டும்†. அப்படிச்செய்யாதவன் எனக்குச் சீஷனாதல் முடியாது.

"நம்மிலொருவன் கோபுரமொன்றைக்கட்ட விரும்பினால், அதைக் கட்டத்தொடங்குமுன், தான் நினைத்ததை முடிக்கப் பொருளும் ஆற்றலும் உண்டோவென்று ஆலோசியாமற் கட்டத்தொடங்குவானோ? பாதி கட்டிமுடிந்தபின் மற்றப்பாதியைமுடிக்கப் பொருளும் ஆற்றலும் இன்றி நிறுத்துவானாயின், 'இவன் இதைக் கட்டத்தொடங்கினான்; முடிக்க ஆற்றலின்றி விட்டுவிட்டான்' என்று, கண்டவர் சிரியாரோ?

* தக்கபருவத்திலே கடவுளருளைப்பெறவிரும்பாமல், சாக்குப்போக்குச்சொல்வார் பலர்என்பது இவ்வுள்ளுறையின் கருத்து.

† ஏசு போதித்தது சன்னியாசமார்க்கமன்று; சன்னியாசிகளே எவற்றையுந் துறத்தல்வேண்டும் என்பது பிழை. இல்லறநோன்பியும் தன்தெறல்வாழ்க்கைசெய்யக் கடமைப்பட்டவன் என்பது ஏசுவின் கொள்கை. சண்டேசுவரர், பிரகலாதர் கதைகளையும் ஆராய்க.

தாய்தந்தையர் மனைவிமக்கள் முதலியோரை ஆதரித்தல் சாதாரணதருமமேனும் இவர் ஒருவரும் கடவுளாகார்.

இங்கே சொல்வது ஆடவருக்கு மட்டுமன்று, பெண்களுக்குமுரியதே.

“ தன்மீது பதினுயிரவர் காலாட்களோடு, படையெடுத்து வீரும் பகையரசன் ஒருவனைத் தான் ஆயிரவர் காலாட்களோடு எதிர்த்துநிற்க வல்லனோ என ஓரரசன் முன்னமே ஆலோசியாமல், அவனை எதிர்த்துநிற்பனோ? தனக்கு வலியில்லை யெனக்கண்டால் பகையரசன் தூரத்திலிருக்கும்பொழுதே அவனுக்குத் தூதனுப்பி அவனோடு இணங்கிப்போகானோ?

“ ஒருவன் தன் பொருளெல்லாவற்றையுந் துறவாவிடில் எனக்குச் சீஷனாதல் முடியாது.”*

கடவுள் பாவிகள்மேலும் அருளுடையர்.—ஏசு பாவிகளோடு உறவாடி, அவர்களோடு சமபந்தியிலிருந்து உண்டதைக் கண்ட சாத்திரிமார் பலர், அவர்செய்கை விபரீதமுள்ளது என்று குற்றஞ்சாற்றினர். இதைக்கேட்ட ஏசு, சீவான்மா பாவஞ்செய்யினும் அதனைத்திருத்தி ஆட்கொள்வதே கடவுளது அருள் என்றும், கடவுள் ஒருவரையுந் தள்ளிவிடுவதில்லை யென்றும் காட்ட, பின்வரும் மூன்று உள்ளுறைகளைச் சொன்னார் :

“ஒரு பெண் கையிலிருந்த பத்துரூபாவில்† ஒன்று தவறி விழுந்து காணமற்போயிற்று. அவள் விளக்கைக்கொளுத்தி ஒருகையிற்பிடித்துக்கொண்டு, மற்றக்கையில் விளக்குமாறு எடுத்து வீடுமுழுதுங்கூட்டி, கண்டு எடுக்கும்வரையும் தான் இழந்த ரூபாவைத் தேடினாள். அதைக் கண்டெடுத்தபோது

* கடவுள் ஒருவரே இப்படி நிபந்தனை விதிக்க அதிகாரமுடையவர், இவ்வாறுபேச ஏசுவுக்கு அதிகாரமுண்டோ எனின்; ஏசு, தாம் அனுட்டிக்கும் நிபந்தனைகளைக் கொள்ள இயலாதவன் தமக்குச் சீஷனாதல் முடியாது என்பது பிழையோ? கடவுளருளைத்தேடும் எல்லாருக்கு முள்ள நிபந்தனைகளை எடுத்து ஏசு கூறினாரேயன்றி, வேறொன்றும் கனவிலும் நினைத்திலர்.

† இங்கு ரூபா என்றது, எட்டணா அல்லது ஐம்பதுசதம்பெறும் ஒரு வெள்ளி நாணகம்.

அயலகத்தாரை அழைத்து, 'காணமற்போனரூபாவைக் கண்டேன், கண்டேன்' என்றுசொல்லிக் களித்தாள். அயலகத்தாரும் அவளோடு களித்தார்.

"ஒருவனுக்கு ஆடு நூறு. ஒருநாள் அவற்றுள் ஒன்று திசைகெட்டுத் தவறிக் காணமற்போயிற்று. உடையவன் தொண்பத்துத்தொண்டு ஆட்டையும் பட்டியில் அடைத்துவிட்டு, காணமற்போனஆட்டை, கண்டுபிடிக்குமளவும், தேடித்திரிந்தான்; அதைக் கண்டபோது, தூக்கித் தோளின்மேற் சுமந்துகொண்டு வீடுவந்துசேர்ந்தான்; அயலகத்தாரை அழைத்து, 'தவறிப்போனஆட்டைக் கண்டேன், கண்டேன்' என்றுசொல்லிக் களித்தான். அயலகத்தாரும் அவனோடு களித்தார்.

"ஒருவனுக்கு மகன்மார் இருவர். அவரில் இளையவன் ஒருநாள் அப்பனைநோக்கி, 'அப்பா, உங்கள் பொருளில் எனக்கு நீங்கள் தரும்பங்கை இப்பொழுதே தாருங்கள்' என்றுகேட்க; தந்தை மகன்கேட்டபடியே செய்தான். இவன் சிலநாட்சென்றபின் தன் பொருளெல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு தூரதேசத்துக்குப்போனான்; அங்கே தீநெறியில் ஒழுகி, தான்கொண்டுபோன பொருளெல்லாம் படிப்படி அழித்து, வறிஞனானான். அதன்பின் அந்நாட்டில் ஒரு கடும்பஞ்சம் வந்தது. அப்பொழுது இவன் அந்நாட்டு நகரத்தாருள் ஒருவனிடஞ்சென்று வேலைகேட்க, அவன் இவனைத் தன் பன்றிகளை* மேய்க்க நியமித்தான். தான் மேய்க்கும் பன்றிகளுக்கு இட்ட தவிடும் தனக்குக்கிடையாததைக்கண்டு; இவன், 'ஐயோ! எந்தைவீட்டில் வேலைக்

* யூதர் பன்றியை அருவருத்தனர். பன்றிமேய்ப்பதினும் இழிந்தவேலை இல்லையென யூதர் நினைத்தனர்.

காரர் எத்தனைபேர்! அவர்களில் ஒருவனுக்குக்கிடைக்கும் உணவும் அவர் மகன் எனக்கு இங்கே கிடைக்கவில்லையே!' என்று வருந்தி, பின் இவ்வாறு யோசிப்பான்:

'நான் எழுந்து எந்தைவீட்டுக்குப் போவேன். அவர் என்னை ஏற்றுக்கொள்ள மனமில்லாமல், போ என்று துரத்தினால், ஐயா, உங்கள்மகனென நான் அருகனல்லேன்; ஆயினும் உங்கள் கூலியாட்களில் ஒருவனாகவேனும் என்னை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றுஅவரைக் கெஞ்சுவேன்.'

இவ்வாறு இவன் துணிந்து, தந்தைவீட்டைநோக்கி, ஐயத்தோடும் அச்சத்தோடும் மெல்லமெல்ல நடந்துபோனான். 'எப்போது என்மகன் திரும்பிவருவானோ?' என ஏங்கி, தன் மகன் போனதிசையைநோக்கி எதிர்பார்த்துக்கொண்டிருந்த தந்தை, மகன் தூரத்தில்வரும்பொழுதே அவனைக்கண்டு, ஓடிப்போய், அவனை இருகையாலும் மார்புறத்தழுவி, பல முறை முத்தஞ்செய்து, 'மகனே, வந்துவிட்டாயா?' என்றான். உடனே மகன் அடியற்றமரம்போலத் தந்தை காலில்விழுந்து, 'உங்கள் மகனென நான் அருகனல்லேன்'* என்றான். தகப்பன் மகனைக் கையிலேபிடித்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், அடிமைகளையழைத்து, 'பீதாம் பரங்கொண்டுவந்து என்மகனுக்கு உடுத்துமின்; விரலிலே மோதிரமிடுமின்; காலுக்குப் பாதரட்சை தொடுமின்; கொழுத்தகன்றை யடித்து உணவுசமைமின். செத்துப்

* தன்மேற் தகப்பனுக்கிருந்த அன்பைக் கண்டவன், 'என்னை உங்கள் கூலியாட்களிலொருவனாகவேனும் ஏற்றுக்கொள்ளல் வேண்டும்' என்றுசொல்ல நாவெழாது நின்றான்.

போன மகன் உயிர்த்தெழுந்தான்! நான்இழந்த மைந்தனைக் கண்டேன், கண்டேன்!' என்றான். இவ்வாறு தந்தையும் மைந்தனும் ஆனந்தத்தில் முழுகியிருக்குஞ்சமயத்தில் மூத்தமகன் வயலிலிருந்து திரும்பிவந்தான். வீட்டுக்கருகே வருனுகையில், வீட்டில் ஆடல்பாடல் ஒலியைக்கேட்டு, அடிமை யொருவனை அழைத்து, 'என்னவிசேடம்?' என அவன் கேட்டான். 'உங்கள் தம்பியார் சுகத்துடன் திரும்பிவந் தார். பெரிய எசமானனார் கொழுத்தகன்றடித்து விருந்தருத் தினார்' என்றான் அடிமை. இதைக்கேட்ட மூத்தமகன் மிகச் சினந்து, 'அப்படியானால் நான் வீட்டுக்குள் அடி யெடுத்து வையேன்' என்றான். இதைத் தகப்பன் கேள்விப் பட்டு, இவன் இருக்குமிடம்வந்து, உள்ளேவரும்படி வேண்டி னான். இவனோ, 'எத்தனைவருஷம் உங்களுக்கு உழைத்தேன்! உங்கள் கட்டளையில் ஒன்றையாயினும் நான் எப்பொழு தாயினும் மீறினதுண்டோ? அப்படியிருந்தும், நான் என் நண்பருக்கு விருந்துசெய்ய நீங்கள் எனக்கு ஓர் ஆட்டுக்குட்டி யாயினும் தந்ததுண்டோ? உங்கள்பொருளெல்லாம் வேசை யருக்குக் கொடுத்து அழித்துவிட்ட உங்கள் மகனார்* வந்த வுடனே கொழுத்தகன்று அடித்தீர்கள்!' என்றான். தகப்பன், 'மகனே, செத்துப்போன தம்பி இன்று உயிரோடு வந் தான்; அவனை இனியொருநாளும் காணேனென்றிருந் தேன்! இன்றுகண்டேன்! ஆகையால் நாம் சந்தோஷப்படு வது தக்கதே. உனக்கென்னகுறை? நீ எப்போதும் என்

* 'என் தம்பி' என்ன இவனுக்கு வாய்வரவில்லை. 'அந்த வேசைக் கள்வன் உங்களுக்கு மகனாயிருக்கலாம். ஆனால், என் தம்பி யென்றசொல் என்வாயில் தடுமாறியும் வாராது.'

னேடிருக்கின்றனை, என்பொருளெல்லாம் உன்னுடையவை யல்லவோ ?' என்றான்."*

**விவேகமுள்ள உக்கிராணி.**—ஒருநாள் ஏசு உபதேசஞ் செய்கையில் பின்வரும் உள்ளுறையைச் சொன்னார் :

"செல்வன் ஒருவன் தன் உக்கிராணத்தையெல்லாம் மேற்பார்வையிட ஒருவனை நியமித்தான். இவன் தன் கடமை செய்வதில் பலவகையிற் பிழைப்பட்டான். இதனை இவன் எசமானனுக்குப் பலர் அறிவித்தார். எசமானன் இவனை அழைத்து, 'உன்னைப்பற்றி நான் கேள்விப்படுவதென்ன? இனி நீ உக்கிராணிவேலை செய்வதில்லை. உன் கணக்கெல் லாம் ஒப்புவி' என்றான். அப்பொழுது இவன், 'ஐயோ! இதற்கு நான் என்செய்வேன்? நிலத்தைக்கொத்திப் பயிர்

* இங்குசொல்லிய காணமற்போனரூபா, காணமற்போன ஆடு, தகப்பன்வீட்டைவிட்டுப் போனமகன் என்னும் மூன்று உள் ளுறையும் ஏசுவே சொன்னவையாயினும், முறையே ஒன்றி னொன்று திருத்தமுங் கருத்தும் நிறைந்திருப்பதால் இம் மூன்றும்சமம் எனக்கொள்வது தவறு. இம்மூன்று உள் ளுறையும், கடவுளைவிட்டு ஆன்மா பிரிதலே பாவமென்றும், பிரிந்துபோன ஆன்மா கடவுளையடைவதே முத்திஎன்றும் காட்டும். பிரிந்துபோன ஆன்மாவைக் கடவுள்தேடும் அருள் முன்னைய இரண்டும் காட்டும். ஆன்மா கடவுளைத் தேடுவதும், தேடிவந்த ஆன்மாவுக்குக் கடவுள் அருள்வதும், ஈற்றிற் கூறிய உள்ளுறை காட்டும். கடவுளும் ஆன்மாவும் அப்பனும் பிள் ளையும் என்பது மிகத் தெளிவுற ஏசு இதில் எடுத்துக்காட்டி யுள்ளார்.

அடியில்வரும் சிவஞானசித்தியார் கூற்றையும் நோக்குக:

"மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்த்'அவனை அறியாது மயங்கி நிற்ப,
பின்அவனும் 'என்மகன்நீ' என்ற்'அவரிற் பிரித்து"

செய்ய எனக்குப் பலமில்லை ; பிச்சையெடுப்பதோ வெட்கம் ; ஆகையால் என் வேலையை நான் இழந்தபின், என்னைச் சிலராயினும் ஏற்றுக்கொள்ளும்பொருட்டு, இவ்வாறு செய்வேன்' எனத் தனக்குள் எண்ணி ; எசமானனிடம் கடன்பட்டவரை யழைத்து, அவருள் ஒருவனைநோக்கி, 'நீ என் ஆண்டவனுக்குக் கொடுக்கவேண்டியது என்ன ?' என ; அவன், 'நூறுநாழி எண்ணெய்' என்றான். உடனே உக்கிராணி, 'உன் சீட்டைஎடுத்து, ஐம்பதுநாழியென்று எழுது' என்றான். வேறொருவனைநோக்கி இவன், 'நீ என்ன கடன்பட்டாய் ?' என ; அவன், 'நூறுகுறுணி கோதுமை' என்றான். இவன், 'எண்பதுகுறுணி என்று எழுது' என்றான். இதன்பின் எசமானன் உக்கிராணியைக் கணக்குவிசாரித்தபொழுது, இவன்செய்த தந்திரங்கள் எல்லாவற்றையும் அறிந்து, இவன் விவேகத்தை மெச்சினான்.*

"உலகவிஷயங்களில் இலௌகிகஞானிகளது ஞானம், கடவுளடியாருக்குப் பத்திவிஷயங்களில் உள்ள அறிவினும் பெரிது."

**செல்வனும் இலசரனும்.**—ஒருநாள் ஏசு உபதேசஞ் செய்கையில், பின்வரும் உள்ளுறை கூறினார் :

"செல்வன் ஒருவன் இருந்தான். அவன் உடையிற் பிரியன் ; அவன் ஆடை நாயாம்பூ நிறத்தன ; அவன் உள்ளுடை மெல்லியநூலால் நெய்தவை. அவன் உண்டிப்பிரியன் ; நாள்தோறும் அறுசுவையுண்டி அருந்திக் களிப்பான்.

* எசமானன் மெச்சியது இவனது அயோக்கியத்தையன்று ; அயோக்கியனாயினும் பிற்காலத்துக்குப் பிழைப்புண்டாக நடந்துகொண்ட விவேகத்தையே.

அவன் தெருவாயிலில் ஓர் இரவலன், இலசரன் என்பான், கிடந்தான். இவன் உடம்புமுழுதும் புண்ணன். செல்வன் உண்டபின் கழிக்கும் மிச்சில்* உணவுக்குக் காத்திருப்பான். ஒருநாள் இரவலன் செத்தான். பரலோகத்திலுள்ள கணங்கள் வந்து, இவன் உயிரைக் கொண்டுபோய், ஆபிரகமுனிவர்§ பக்கத்தில் இருத்தின. செல்வனும் செத்தான். அவன் உயிரைக் காலதூதர் பாதலத்தில் விடுத்தனர். அவன் அண்ணாந்து மேலேபார்த்தபொழுது, மிக்கதூரத்தில் ஆபிரகமுனிவரும் அவரருகில் இலசரனும் இருக்கக் கண்டான். அப்பொழுது அவன் ஆபிரகமுனிவரை விளித்து, 'எந்தாய், நான் இங்கு மிக வருந்துகிறேன்; எனது நா வறந்து போயிற்று. என்மேலிரங்கி இலசரனை இங்கு அனுப்புக. அவன் தன் விரலாற் தண்ணீர்தொட்டு என் நாவுலர்ச்சியைத் தணிப்பின், நான் சிறிது வருத்தந்தீர்வேன். இத்தீப்பிழம்பினுள் நான்படும்பாடு சிறிதன்று' என்றான். அதற்கு ஆபிரகமுனிவர், 'மகனே, நீ பூலோகத்திலிருந்தபொழுது பலவகை இன்பந் துய்த்தாய். இலசரன் பூலோகத்திற் துய்த்ததெல்லாம் துன்பமே! இன்பமொன்றும் அவன் அறிந்திலன். இப்

* மிச்சில்உணவு – சாப்பிட்டு மிஞ்சியஉணவு.

§ ஆபிரகமுனிவர் யாகவமுனிவருக்கு மூதாதையார். யாகவமுனிவர் இசிரவல் என்னும் பெயருமுடையர். இசிரவல் வம்மிசத்தாரை இசரல் என்பர். ஊதரெல்லாரும் இசரல் கோத்திரத்தாரே. தங்கள் குலமுதலாகிய ஆபிரகமுனிவர் முன்பு பலதெய்வங்களையும் விக்கிரகங்களையும் வணங்கிவந்தவரென்பதும், பின்பு கடவுளருள்பெற்று முன்னைய வழிபாடுகள் எல்லாவற்றையும்விட்டு, ஏகேசுவரபத்தர் ஆனரென்பதும் ஊதாத ஐதிகம்.

பொழுதோ நீ துன்பந்துய்க்க, அவன் இன்பந்துய்க்கின்றான்,' என்றார்."*

பிறர்குற்றம் மன்னித்தல்.—வேறொருநாள் ஏசு உபதேசஞ்செய்கையில், பிறர்குற்றத்தை மன்னிக்கும்படி போதித்தார். அவர்சொன்னது:

"நின்சகோதரன் நினக்குப் பிழைசெய்யின் அவனைக் கடிவது நின்கடன்; தன்பிழையை அவன் உணர்வனேல் அவன்குற்றத்தை நீ மன்னித்தல்வேண்டும். ஒருநாளில் ஏழுமுறை குற்றஞ்செய்து, ஒவ்வொருமுறையும் தன் பிழையை உணர்ந்து, 'நான்செய்தது பிழை, மனம் மிகவருந்துகின்றேன்' என்பானாயின், நீ அவனுக்கு மன்னித்தல் வேண்டும்."

அதைக்கேட்ட சீமன், "ஒருநாளில் ஏழுமுறை மன்னிப்பதோ?" என வினவினான். அதற்கு ஏசு, "ஏழுமுறையன்று, ஏழெழுபதுமுறை மன்னிக்கக்கடவை" என்றார்.

கடவுளரசு திடீரென வரும்.— சாத்திரிமார்சிலர் ஏசுவிடம்வந்து, "கடவுளரசு எப்போதுவரும்?" எனக் கேட்

* இவ்வுள்ளுறையால் யாம் அறியக்கிடப்பது யாது? இம்மையிற் செல்வமுடையாரெல்லாரும் மறுமையிற் துன்பமடைவரென்றும் இம்மையில் வறியவரெல்லாரும் மறுமையில் இன்பமனுபவிப்பாரென்றும் நாம் நினைக்கலாமோ? அஃது ஏசுவின் கருத்தன்று. இம்மையிற் செல்வம்பெற்றவர் அதனால் மயங்கி, கடவுளைமறந்து, தாம் பெற்ற செல்வத்திற் சிறிதேனும் வறியவருக்குக் கொடாமல், தம் சுகமொன்றையே நாடி வாழ்வரேல் மறுமையில் துன்பமடைவர் என்பதும்; இம்மையில் வறுமை அனுபவிப்பினும், கடவுளை மறவாது வாழ்வார் மறுமையில் இன்பமனுபவிப்பார் என்பதுமே ஏசுவின் கருத்து.

டனர். அதற்கு ஏசு, "கடவுளரசு கண்கூடாக வருவதொன்றன்று; 'பார், இங்குவருகின்றது', 'பார், அங்குவந்தது' என்னுந்தரத்ததன்று. கடவுளரசு திடீரென ஏககாலத்தில் எவ்விடத்தும் வரும்" என்றார். *

கடமைக்கு மிஞ்சியதில்லை.—ஒருநாள் ஏசு உபதேசஞ் செய்கையில் பின்வருமாறு போதித்தார்:

"நம்மில்ஒருவன் தன்அடிமை வயலில் உழுதுவிட்டு அல்லது ஆடுகளைமேய்த்துவிட்டு வீட்டுக்குத்திரும்பினல்,

* "கடவுளரசு" என்னும்விஷயம் ஏசு ஓகனமுனிவரர்பாற் கற்றது. இவ்விஷயத்தைக்குறித்துப் பலமுறை பலவிடங்களில் ஏசு பேசியுள்ளார். இதனைப்பற்றி ஏசு கூறிய உன்னுரைகளும் பல. இவர் இவ்விஷயத்திற் போதித்தவை முரண்படுவனபோலத் தோற்றுகின்றன. கடவுளரசு காலஞ் செல்லச்செல்ல, மெல்லமெல்ல, படிப்படி, வரும் என்பது சிலவிடங்களில் ஏசு சொல்லிய போதனை. வேறுசிலவிடங்களில், கடவுளரசு திடீரெனவரும்எனப் போதிக்கின்றார். இம் முரண்பாட்டைக்காணும் அறிஞருட்சிலர், இவ்விரண்டு போதனையையும் ஏசு போதித்திருப்பாரோ? இவ்விரண்டினுள் ஒன்றையே அவர் போதித்திருக்கவேண்டும்; மற்றையது எப்படியோ அவர்போதனையுள் நுழைந்துவிட்டது என எண்ணுகின்றார். ஒருகாலத்தில் ஒருபோதனையையும் பின்னொரு காலத்தில் மற்றதையும் ஏசுவே போதித்திருக்கலாம். ஏசுவின் வரலாற்றுக்கும் போதனைக்கும் காலக்கிரமங்கண்டுபிடித்தல் இப்பொழுது எவராலும் இயலாது. நம்கைக்கெட்டிய வரலாறும் உபதேசமும் சிதைந்து முறைதிறம்பி வந்துள்ளன. கடவுளரசு திடீரென வருமென ஏசு ஒருகாலத்தில் உபதேசித்தார் எனக்கொள்ளினும், கடவுளரசு என்பதற்கு ஏசுகொண்ட பொருள் யாது? தமதுகாலத்தில் சுவராச்சியம் யூதர் அடைவர் என ஏசு எண்ணினர்போலும். அவர் எண்ணினபடி சுவராச்சியம் யூதர் பெறவில்லை.

அவனைப்பார்த்து, 'வா, இதில்இரு, பசியாறு' என்பானோ? அல்லது, வந்தவனைப்பார்த்து, 'எனக்குச் சாப்பாடு ஆயத்தம் பண்ணு; நான்சாப்பிட்டு முடியுமட்டும், அருகில்நில்; அதன் பின் நீபோய்ச் சாப்பிடலாம்' என்பானோ? அவன், தான் இட்ட கட்டளைகளை அடிமைசெய்தால், 'நீ செய்த நன்றியை நான்மறவேன்' என்பானோ?

"நீவிர் நுமக்குக் கடவுள் விதித்தகட்டளையெல்லாம் தவறின்றியும் குறைவின்றியும் செய்து முடித்தபின்பும், 'யாம் அடியேம்; செய்யவேண்டியவற்றையே செய்தேம்; மிஞ்சி யேதுஞ் செய்துவிட்டேமோ?' என்று சொல்லல்வேண்டும்."

**சோர்வின்றி விண்ணப்பித்த கைம்பெண்ணும் அநீத முள்ள நீதிபதியும்.**—பின்வரும் உள்ளுறையை ஒருநாள் ஏசு போதித்தார்:

"ஒரூரில் ஒரு நீதிபதி. அவன் கடவுளை அஞ்சாதவன்; மனிதரை மதியாதவன். அவ்வூரில் ஒரு கைம்பெண். அவள் அடிக்கடி நீதிபதியிடம்வந்து, 'ஒருவன் எனக்கு அநியாயம் செய்தான்; இதைவிசாரித்து எனக்கு நீதிசெய்தல்வேண்டும்' என விண்ணப்பித்தாள். முதலில் நீதிபதி இவள் விண்ணப் பத்தைக் கவனிக்கவில்லை. பின்பு 'இவள் சும்மாசும்மா வந்து என்னை அலட்டுகிறாள். இவள்வழக்கை விசாரித்து, இவளுக்கு நீதிசெய்வேன். இல்லாவிட்டால் இவள் என்னை ஆறியிருக்க விடாள்' என்றான். அநீதனான மனிதன் இப்படிச்செய்வா னாயின், நீதிக்கு உறைவிடமாகிய கடவுள் தம்மைநோக்கி வேண்டும் தம் பிள்ளைகள் விண்ணப்பங்களுக்குச் செவி சாயாரோ?"

**சாத்திரியும் தண்டற்காரனும்.**— பெரும்பத்திமான்கள், எனத் தம்மைத்தாமே மதித்த போலிப்பத்தர் சிலருக்கு ஏசு கூறிய உள்ளுறை:

"ஒருநாள் திருக்கோயிலுக்கு இருவர் சென்றனர். அவருள் ஒருவன் சாத்திரி; மற்றவன் தண்டற்காரன். சாத்திரி கோயிலுக்குள்ளே பல பிராகாரங்களைக் கடந்து சென்று, மூலஸ்தானத்துக்கு அருகே நின்று, 'கடவுளே, நான் ஏனையோர் போன்றேனல்லேன்; களவு, மாய்மாலம், வியபிசாரம் என்னும் பாவங்களைச் செய்தறியேன்; உவனைப் போலத் தண்டற்காரன் அல்லேன். திங்கட்கிழமைவிரதம் வியாழக்கிழமைவிரதம் அனுட்டிக்க நான் தவறுவதில்லை; என் வருமானத்தில் பத்திலொன்றுகோயிலுக்குக் கொடுக்கிறேன். இப்படி உத்தமனாக நான் இருப்பதற்கு நினக்கு நன்றிபாராட்டுகிறேன்' என்றான். தண்டற்காரனோ கோயிலுக்குள்ளே வெளிவாசலுக்கு அருகில் நின்று, முகங்கவிழ்ந்து கண்ணிரண்டும் நிலத்தைநோக்க, மார்பிற் பலமுறைஅடித்துக் கொண்டு, 'ஆ கெட்டேன் பாவியேன்! கடவுளே, இந்தப் பாவிக்கு இரங்கு' என ஓலமிட்டான். பாவமன்னிப்புப் பெற்றவன் இவனே. சாத்திரி வந்ததுபோலவே மீண்டான்.

எருசலைப் பயணம்.—ஏசு எருசலைப் பெரும்பதியை நோக்கிப் பயணஞ்செய்கையில் பல ஊர்களினூடு சென்றார். ஆங்காங்குதங்கி உபதேசஞ்செய்தார். ஒருநாள் பன்னிருவரையும் விளித்து, "நான் பூமியிலே தீயிடவந்தேன்; நான் இடும் தீ மூண்டு கொழுந்துவிட்டு எரியும்நாள் எந்நாளோ? அதைக்காணப் பேரவாவுற்றேன். நான் முழுகவேண்டிய முழுக்கு ஒன்றுண்டு. அம்மட்டும் எனக்கு அமைதியில்லை" என்றார்.

சமரியத் தொழுநோயன்.—சமரிமாகாணத்துக்கும் ஊதைமாகாணத்துக்கும் எல்லையை ஊடறுத்துச்செல்கையில், ஏசு

ஒரு சிற்றூருக்குட்சென்றார். அங்கு தொழுநோயர் பதின்மர் அவரையடைந்து, தூரத்திலேநின்று, உரத்த சத்தத்தோடு, "ஆண்டவரே, ஆண்டவரே, எங்கள்மேலிரங்குக" என வேண்டினர். அதனை ஏசுகேட்டு அவரைநோக்கி, "போமின்; நீவிர் சுகமடைந்ததை அருச்சகர்களுக்குக் காட்டுமின்" என்றார்.*

பதின்மரும் ஏசுவைவிட்டு நடந்துபோகையில் வழியிலே தொழுநோய் தீரப்பெற்றனர். அவரில் ஒருவன் நோய் தீர்ந்ததைக்கண்டு, திரும்பிவந்து, உரத்தசத்தத்தோடே கடவுளைப் புகழ்ந்து, ஏசுவின்அடியில்வீழ்ந்து அவருக்கும் நன்றிபாராட்டினான். இவன் ஒரு சமரியன். அப்பொழுது ஏசு, "பதின்மரும் நோய்தீரப்பெற்றனரலரோ? தொண்மர் எங்கே? இந்த அன்னியனைத்தவிர வேறொருவனும் கடவுளுக்குத் துதிசெலுத்த வந்திலனோ?" என்று, இவனைநோக்கி, "எழுந்திரு; நீ உன்வீட்டுக்குப்போ. நீ நம்பினபடியே உன் நோய் தீர்ந்தது" என்றார்.

**மணமும் மணவொழிப்பும்.**— மணவொழிப்பைப்பற்றி ஏசுவின்போதனை யாதென அறியவிரும்பின சாத்திரிமார் சிலர் அவரிடம்வந்து, "ஒருவன் தன்மனைவியை நீக்க விரும்பின் தன்விருப்பத்தின்படியே அவளை நீக்கிவிடலாமோ?" எனக் கேட்டனர்.§

* இப்பதின்மருள் ஒருவன் சமரியன் என்பதை ஏசு அப்பொழுது அறிந்திலர் போலும். அறிந்திருப்பினும் சமரியனது நோயைத் தீர்க்க ஏசு பின்னிடார்.

§ ஏசுவின்காலத்துக்குச் சிறிதுமுன்பு பண்டிதர் இல்லலர், பண்டிதர் சம்மயர் எனப் பெயரிய சாத்திரிமார் இருவர் பிரபலம் பெற்றிருந்தனர். அவருள் பண்டிதர் இல்லலர், எக்காரணம்

அதற்கு ஏசு, "மனிதரைப்படைத்தவர் ஆதிமுதல் ஆணும்பெண்ணுமாகவே படைத்தனர் என நீவிர் வாசித்திலீரோ? ஆகவே, கணவனும் மனைவியும் ஒன்றே. கடவுள் இணைத்ததை ஒருவனும் பிரிக்கற்க" என்றார். இதனைக் கேட்ட சாத்திரிமார், "பின்னை ஏன் மோசயமுனிவர்* 'கணவன் தன்மனைவியை நீக்கும்போது, அவளுக்கு நீத்தற்சீட்டை எழுதிக்கொடுத்து நீக்கக்கடவன்' என விதித்தார்?" எனக் கேட்டனர். அதற்கு ஏசு, "இவ்வாறு மோசயர்கூறியது விதியன்று; உயர்ந்தவிதியைக் கைக்கொள்ள நுமக்குப் பக்குவம் வரவில்லையெனக்கண்டு, ஒருவன் தன் மனைவியை நீக்கிவிடலாம் என அனுமதி கொடுத்தார். தன் மனைவி கற்பழிந்தனள் எனக்கண்டாலன்றி ஒருவனும் அவளை நீக்கற்க. கற்புள்ளமனைவியை நீக்கிவிட்டு வேறொருத்தியை மணஞ்செய்பவன் வியபிசாரஞ்செய்தவனாவன்" என்றார்.§

பற்றியாயினுமாக, ஒருவனுக்குத் தன்மனைவியிடம் விருப்பமில்லையேல் அவளைநீக்கிவிடலாம் எனப் போதித்தனர். பண்டிதர் சம்மயரோ, ஒருவன் தன் மனைவி கற்பழிந்தனள் எனக்கண்டாலன்றி வேறு எக்காரணத்தின்பொருட்டும் அவளை நீக்கலாகாது எனப்போதித்தனர். இவ்விருவர் போதனையில் எதுசரியென்பதைக் கேட்பதே இவர் இப்பொழுது ஏசுவிடம்வந்தநோக்கம்.

* கடவுள் விதித்த விதியெல்லாம் மோசயமுனிவரைக்கொண்டு அறிவித்தவை என்பது யூதராது பாரம்பரியம்.

§ பண்டிதர் சம்மயர்கொள்கையே ஏசுவின்கொள்கை. பண்டிதர் இல்லலர் கொள்கையை ஏசு ஏற்றிலர். இவ்விஷயத்தையும் இவைபோன்ற வேறுசில விஷயங்களையும் ஆராய்கையில் நாம் மனத்தில் வைக்கற்பாலது ஒன்றுண்டு: ஏசு, நம்வாழ்க்கைக்கு இலக்கை உபதேசஞ்செய்யவந்த குரு. இவர் சட்டநிருமிகர் அல்லர்.

ஏசுவும் குழந்தைகளும்.—ஒருநாள் சிலர், தம் குழந்தைகளை, தலைமீது கைவைத்து ஆசீர்வதிக்கும்படி, ஏசுவிடங் கொண்டுவந்தனர். அவரைப் பன்னிருவரும் கடிந்தனர். அதை ஏசு கண்டபோது மிகச்சினந்து, பன்னிருவரையும் விளித்து, "சிறுபிள்ளைகள் என்னிடம்வருக. அவரை நீவிர் தடுக்க வேண்டா. பிள்ளைமைப்பான்மையுடையவருக்கே கடவுளரசு உரியது" என்று, சிறுபிள்ளைகளைத்தழுவி, அவர் தலைமேற் கைவைத்து அவரை ஆசீர்வதித்தார்.

முடிவிலாவாழ்வு விரும்பினசெல்வன்.—தாம் தங்கின இடத்தைவிட்டுப் புறப்பட்டு ஏசு பயணஞ்செய்யத்தொடங்குகையில், செல்வன்ஒருவன் அவரிடம்வந்து, "நல்லாசிரியரே, முடிவிலாவாழ்வடைய நான் யாதுசெய்தல் வேண்டும்?" என்றான்.

ஏசு: "என்னை ஏன் நல்லன் என்கிறாய்?* கடவுளைத் தவிர ஒருவரும் நல்லரல்லர். முடிவிலாவாழ்வு வேண்டுவையேல்; கொலைசெயேல், பிறனிற்புகேல், கள்ளேல், பொய்க் கரிபேசேல், தந்தைதாய்பேண் என்னுங் கட்டளைகளை அறிவாயல்லையோ?"

செல்வன்: "ஆசிரியரே, இக்கட்டளை யாவும் இளமை முதற் கைக்கொண்டுள்ளேன்."

ஏசு (அவனை அன்புடன் உற்றுநோக்கி): "இன்னும் ஒருகுறை உடையை; நின் பொருளனைத்தையும் விற்று, வந்த காசை வறியார்க்குக் கொடு; அதன்பின் என்பின் வா."§

* நீர்நல்லீரென்று பிறர் தம்மைச் சொல்வதைக்கேட்க ஏசுவின் நெஞ்சு இடங்கொடுக்கவில்லை.

§ செல்வரெல்லாரும் தம் பொருளெல்லாவற்றையும் துறத்தல் வேண்டுமென ஏசு யாண்டும் போதித்திலர். அவரிடம்வந்த இந்தச்செல்வன் தன்பொருளைத் தெய்வமென வழிபடுவதை இவன் முகக்குறியாலறிந்தஏசு, இவன் தன் பொருளெல்லாவற்றையும் துறத்தல்வேண்டும் என்றார்.

ஏசுவின் சொல்லைக்கேட்டபோது வாடினமுகத்தோடு செல்வன் இவரைவிட்டுச் சென்றான். ஏசு எப்புறமுஞ் சுற்றிப் பார்த்து, சீஷரைநோக்கி, "செல்வர் கடவுளரசிற் புகுதல் எத்துணை அரிது! செல்வனொருவன் கடவுளரசிற் புகுவதினும், ஒட்டகம் ஊசியின்காதில் நுழைவது எளிது!" என்றார். இவர் சொல்லைக்கேட்ட சீஷர் அதிசயித்தனர். ஏசு, "மக்காள், கடவுளரசிற் புகுவது எவருக்குமரிது" என்றார். சீஷர், "அப்படியாயின் உய்வார் ஆர்?" என; ஏசு, "இது மனிதருக்கரிது, கடவுளுக்கரிதன்று. கடவுள் எல்லாஞ்செய்ய வல்லார்" என்றார். சீமன் அதுகேட்டு, "நாங்கள் அனைத்தையுந் துறந்து, அடிகளுக்குப்பின் வந்தோமே, நாங்களடைவது யாதோ?" என்றான். ஏசு, "நான்சொல்வதைக் கேண்மின்: எவனாயினும் ஆக; அன்னைதந்தையரையேனும், அண்ணன் தம்பியரையேனும், அக்கைதங்கையரையேனும், மனைவியையேனும், மக்களையேனும், வீடுவாசல் காணிபூமியையேனும் கடவுளரசின்பொருட்டுத் துறந்தவன், தான் துறந்தவற்றிற் பன்மடங்கு பெறுவான்" என்றார்.

**தோட்டத்துக் கூலியாளர்.**—ஒருநாள் ஏசு பின்வரும் உள்ளுறையை உபதேசித்தார்:

"கடவுளரசு இத்தகையது: ஒருநாள் தோட்டத்துக்கு உடையவனொருவன் அதிகாலையிலெழுந்து, தோட்டத்தில் வேலைசெய்யும்பொருட்டுக் கூலியாளரைத் தேடிச்சென்றான். அவன், தான் கண்ட சிலரிடம், 'என்தோட்டத்தில் இன்று வேலைசெய்யின் உங்களில் ஒவ்வொருவனுக்கும் ஒருரூபா* தருவேன்' என்றான். அதற்கிணங்கி அவர்கள் போய் வேலை

* இங்கே ரூபா என்றது எட்டரையணா அல்லது ஐம்பத்துமூன்று சதம் பெறும் ஒரு வெள்ளிநாணகம்.

செய்தார்கள். ஏழுநாழிகையளவிலே, சந்தையில் வேலையின்றி நின்ற சிலரை அவன்கண்டு, 'நீங்களும்போய் வேலை செய்புங்கள்; தக்ககூலிகொடுப்பேன்' என்றான். அவர்கள் சென்று வேலைசெய்தார்கள். உச்சிப்பொழுதிலே வேறுசிலரை அவன்கண்டு, அவர்களையும் அனுப்பினான்; இருபதுநாழிகையளவில் வேறுசிலரை அனுப்பினான்; பொழுதுபட இரண்டு நாழிகையிருக்கையில் பின்னுஞ் சிலரையனுப்பினான். பொழுதுபட்டபின், உடையவன் அன்று தோட்டத்தில் வேலை செய்தவர்எல்லாரையும்நிரைநிரையாகநிறுத்தி, கூலிகொடுக்கத் தொடங்கினான். கடைசியில்வந்தவர்களைக் கூப்பிட்டு, அவர்களில் ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொருரூபா கொடுத்தான்; பின், பிற்பகலில் வந்தவர்களுக்கும் உச்சிப்பொழுதில் வந்தவர்களுக்கும் ஒவ்வொருரூபா கொடுத்தான். இப்படி இவன் செய்வதைக்கண்டவர்களில் அதிகாலை வந்தவர்கள் தங்களுக்கு அதிகங்கிடைக்குமென்று எண்ணினார்கள். அவர்கள்முறை வந்தபோது உடையவன் அவர்களுக்கும் ஒவ்வொருரூபா கொடுத்தான். அவர்களிலொருவன், 'இஃதென்ன அநியாயம்! இரண்டுநாழிகை வேலைசெய்தவனுக்கும் ஒருரூபா, வெய்யிலில்நின்று நெற்றிவியர்வை நிலத்திலொழுக முப்பதுநாழிகை வேலைசெய்த எனக்கும் ஒருரூபாவா? இது முறையோ?' என்றான்.

"இவனைநோக்கி, தோட்டத்துக்குடையவன், 'இன்று காலையில் வேலைசெய்யும்படி உன்னை நான் அழைத்தபோது, நீ ஒருரூபாவுக்குச் சம்மதித்தாயல்லையோ? உனக்குச் சொன்னபடியே உனக்குக்கொடுத்தேன். என்பொருளை நான் விரும்பியபடி செலவுசெய்வது தவறோ? இதில் என்ன அநியாயங் கண்டாய்? நான் இரக்கமுடையனாயின் அதைப்பார்க்கிற நீ வன்கண்ணனாகலாமோ?' என்றான்."

**ஏசு அஞ்சல்.**—எருசலேப் பெரும்பதியைநோக்கி வீதி வழியே, சீஷர் பின்னேவர, ஏசு முன்னே நடந்துசென்றனர். செல்கையில், எருசலேயில் தமக்கு நேரிடக்கூடிய பலதீமையை யெண்ணிப் பேரச்சங் கொண்டனர். அவ்வச்சம் அகத்திற் கடுத்து முகத்தில் வெளிப்பட்டது. அவர் பன்னிருவரை யும் அழைத்து, "நாம் எருசலேநகருக்குப் போகின்றோம். ஆங்கு என்னைக் கொல்லினுங்கொல்வர்" என்றார்.

**ஓகன யாகவர்.**—சிலநாட்சென்றபின் யாகவனும் ஓகன னும் ஏசுவிடம்வந்து, "குருவே, யாம் இருவேமும் அடி களை ஒருவரங் கேட்கின்றோம். அதனை எமக்குத் தரல் வேண்டும்" என்றனர். ஏசு, "நீவிர் கேட்கும் வரம்யாது?" என; அவர், "அடிகள் சிங்காசனபதியாய் வீற்றிருக்கை யில், எம்மில் ஒருவன் வலப்பக்கத்திலும் மற்றவன் இடப் பக்கத்திலும் இருக்கும் பதவியை இப்பொழுதே வேண்டு கின்றேம்" என்றார்.

அதற்கு ஏசு, "என் வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலு முள்ள ஆசனத்தில் வீற்றிருக்க வரங்கொடுப்பது எனக் கடுத்ததன்று. அவற்றில் வீற்றிருக்க அருகருக்கு அவை கிடைக்கும்" என்றார்.

இதனை ஏனைய பதின்மரும்கேட்டு ஓகன யாகவரைச் சினந்தனர். பன்னிருவரையும் ஏசு அழைத்து, "புறச்சமயி களது அரசர் குடிகள்மீது பிரபுத்துவஞ்செலுத்த விரும்பு கின்றனர்; தம்மைக் குடிகள் 'வள்ளல்' என அழைப்பதை நாடுகின்றனர். இவ்வீண்பெருமை நுமக்குத் தகாது. நும்மில் உயர்ந்தோன் எவரினுஞ் சிறியனைப்போலவும் நும் மில் மேம்பட்டவன் அடிமைபோலவும் நடத்தல் வேண்டும். உடையவனோ அடியவனோ பெரியவன்? நும்மனைவருக்கும் அடியவனென நடக்கின்றேன் நான்" என்றார்.

**சகயன்.**—எரிகம் என்னும் பதியினூடே ஏசு நடந்து சென்றார். அப்பதியில் தண்டற்காரருக்குத் தலைவன் சகயன் என்னும் பெயரினன். இவன் செல்வன். பலர் பல முறை இவனிடம் ஏசுவைப்பற்றிப் பேச அவர் புகழைக் கேள்வியுற்றிருந்தனன். இப்பொழுது தன் ஊருக்குள்ளே, வீதிவழியே ஏசு நடந்துசெல்கின்றனர் என யாரோ சொல்லக்கேட்டு, சகயன் அவரைக்காண விரைந்துசென்றான். எம்மருங்கும் பலர் திரண்டுசூழ நடுவிலே நடந்துவந்த ஏசுவைக்காண, உருவத்திற்குறியன் இவனால் முடியவில்லை. ஆயினும், ஏசுவைக் காணல்வேண்டும் என்னும் பேரவா தூண்ட, சனத்திரளுக்குச் சிறிதுமுன்பு ஓடி, ஒரு காட்டத்திமரத்தில் ஏறி அவ்வழியே ஏசு வரும்வரையும் காத்திருந்தான். அங்கு ஏசு வந்தபோது, கூட்டத்திற்சிலர் மரத்தின்மீதிருந்த சகயனைக்கண்டு நகைத்ததைப்பார்த்த ஏசு, அம்மரத்தடியில்நின்று, "சகய, இறங்கிவா. இன்று நின்வீட்டுக்கு நான் அதிதியாய்வந்தேன்" என்றார். இவன் உடனே இறங்கிவந்து, ஏசுவை உவகையோடேற்று உபசரித்தனன். இதைப்பார்த்த சிலர், "இவ்வூரில் நல்லார் பலரிருக்க, அவரொருவர்வீட்டுக்கும் போகாது, இப்பாவியின் வீட்டுக்கா இவர் செல்லல்வேண்டும்?" என முறுமுறுத்தனர். இதைக் கேட்ட சகயன் எழுந்துநின்று, ஏசுவைப் பார்த்து, "அடிகாள், என்பொருளிற் பாதியை வறிஞருக்குத் தானஞ்செய்கிறேன். எவனிடத்தாயினும் முறைதிறம்பி நான் வரிதண்டியிருப்பின், நான்குமடங்கு திருப்பிக்கொடுப்பேன்" என்றான்.* அப்பொழுது ஏசு, "இன்று உய்ந்தது இவ்வீடு" என்றார்.

* நெறிதவறிப் பொருள்சம்பாதித்தவர், அப்பொருளால் கோயில் மடம் முதலியன கட்டுவதினாலும் தானங்கொடுப்பதினாலும், முன்செய்த பாவம் தீரா. தாம் அபகரித்த பொருளை உடையவருக்கே திருப்பிக்கொடுத்தல் வேண்டும்.

பத்திமன்.—சீஷரும் பெருஞ்சனத்திரளும் தம்மைச் சூழ்ந்துவர ஏசு எரிகத்தைவிட்டுக் கடந்துசெல்கையில், ஓர் இரவல்ன், குருடன், பத்திமன் என்னும் பெயரினன், வீதி யருகே இருந்தவன், நசரையர்ஏசு அவ்வழியே செல்கின்ரு ரென யாரோ சொல்லக்கேட்டு, “குருவே, என்மேல் இரங் குக” என்று உரத்தசத்தத்தோடு ஓலமிட்டனன். இதைக் கேட்ட சிலர், “வாயைமூடு” என இவனை அதட்டினர். இவனோ முன்னிலும் உரத்தசத்தத்தோடு, “குருவே, குருவே, இரங்கும்என்மீது” எனக் கதறினன். இவனிட்ட ஓலம் ஏசுவின் செவியிற்புக, அவர் மேல் ஓரடியும்எடுத்து வையாமல் நின்று, “அவனை அழைமின்” என்ருர். சிலர் குருடனிடஞ் சென்று, “நல்லகாலம் உனக்கு; எழுந்திரு. அவர் உன்னை அழைக்கிருர்” என்றனர். இவன் மேலாடையை எறிந்துவிட்டு, பாய்ந்துஎழுந்து, ஏசுவிடம் வந்தான். “என்ன வேண்டும் நினக்கு?” என ஏசு இவனைக் கேட்டார். பத்திமன், “குருவே, நான் மீட்டும் பார்வைபெறல்வேண்டும்” என்ருன். ஏசு, “நீ நம்பினபடியே நினக்கு ஆக; போ” என்ருர். உடனே மீண்டும் பார்வைபெற்று, வீதியிலே மற்றனைவ ரோடும் ஏசுவுக்குப்பின்சென்ருன் பத்திமன்.*

* பத்திமன் பிறவிக்குருடன் அல்லன், இடையிலே பார்வை யிழந்தவன். சிறிதுகாலம் இவன் இழந்த பார்வையை ஏசுவின் மூலம் மீண்டும் பெற்ருன்.

# அறுவது படலம்

## எருசலேத் திருப்பணி

எருசலேப் பதியை ஏந்தல் அடைந்த்'அவண்
சொற்றன உற்றன சொல்லும்இப் படலம்.

[எருசலேக்கு ஏசு சென்றநோக்கம் யாது? இவரது நோக்கம் யாதெனஅறியுமுன், எஃது இவரது நோக்கமன்று என்பதையறிவாம். இவர் எருசலேக்குச் சென்ற நோக்கம் அங்கு தாம் சாகவேண்டுமென்பது அன்று. இஃது ஒரு தலே. இவர் செய்த நகரப்பிரவேசத்தின் தன்மையும், தம்வாழ் நாளின் கடையிரவில் கெற்சமனேயில் கடவுளிடம் இவர் செய்த விண்ணப்பமும், சிலுவையில் உயிர்விடுமுன் இட்ட ஓலமும், சாவாது மானபங்கமின்றித் தப்பித்துக்கொள்ள லாமெனின், அவ்வாறே ஏசு செய்திருப்பர் எனக்காட்டும். அப்படியாயின் ஏசு எருசலேக்குப்போன நோக்கந்தான் யாதோவெனின், எருசலேப்பெரும்பதியினருக்கும் அவருட் சிரோமணிகளாய் விளங்கினவர்களுக்கும், தாமே தேவராச மேசியர் என்பதை எடுத்துக்கூறும் நோக்கமே. இவ்வாறு தாம் எடுத்துக்கூறின், தமக்கு இரண்டில் ஒன்று நேரிடுமென் பது இவர் முன்னமே அறிந்த விஷயம்: ஒன்று, தஞ்சொல்லே அந்நகரத்து மாந்தரும் தலேவரும் அங்கிகரித்தல்; மற்றது, அன்னூர் அவ்வாறு அங்கிகரியாராயின், உரமை வேந்தர்வேந்த னுக்குப் பிரதிநிதியாய்ப் பலத்தினையை ஆண்டபொந்திபிலத்த ணூல் தாம் சாவது. போர்செய்யச்செல்லும் சேனுபதி போரில் மடிதல்வேண்டும் என்னும் நோக்கத்தோடு போவதில்லே.

வெற்றிபெற்றுத் திரும்புவதே அவனது நோக்கம். ஆயினும், போரில் மடியநேரினும் நேரும் என்பதையும் அவன் மறவான். "தண்டிலே போனால் இரண்டிலே ஒன்று" என்பது பழமொழி. தேவராச மேசியராகத் தம்மை யூதர்தலைவர், அங்கிகரிப்பர் என்றநம்பிக்கை ஏசுவை உந்தியது; பிலத்தன் தம்மைக் கொல்லல்கூடும் என்ற அச்சம் இவர்நெஞ்சை வாட்டியது. இப்படி ஊசலாடும் உள்ளத்தோடு எருசலைப் பதியுட் புகுந்தனர் ஏசு.]

## இன்னல்நாள் ஆறு

### ஞாயிற்றுக்கிழமை

**எருசலைப் பிரவேசம்.**— ஒலிவமலைஅடியில் எருசலைக்கு அருகில் ஏசு சேர்ந்தவுடனே சீஷரிருவரை வெற்பகம் என்னும் சிற்றூருக்கனுப்பினார். இவர் அவரைநோக்கி, "முன்னே தோன்றுகிற சிற்றூருக்குச் செல்லுங்கள். அங்கு என் நண்பரொருவருளர்; அவர் பெயர் —. அவரிடம் பலகழுதையுண்டு. ஒரு குட்டியை இரவலாக நான் கேட்கிறேனென்றும், அதை நாளைக்குத் திருப்பி அனுப்பிவிடுவேனென்றும் அவருக்குச் சொன்மின்" என்றார். சீஷர் சென்று ஏசு சொன்னவாறே அவனிடங் கேட்டனர். உடனே அவன் ஒரு கழுதைக்குட்டியை அனுப்பினான். அவர் அதை ஏசுவிடங் கொண்டுவந்தார். கழுதைக்குட்டியின்மேல் சீஷர் வஸ்திரங்களை ஒன்றின்மேலொன்றாக விரித்தார். ஏசு அதின்மேல் ஏறியிருந்து எருசலைநகருக்கு ஊர்ந்துவந்தார். பலர் வீதியிலே ஆடைகளை நிலப்பாவாடையாக விரித்தார்; வேறுசிலர் வயல்களிற் தழைகளை ஆய்ந்து வழியெல்லாந் தூவினர். முன்னும் பின்னுஞ் சென்றவர்:

"திருப்பதிவருவாரைத் தேவன் அனுக்கிரகிக்க"* என ஆர்த்தனர்.

**நசரை மகாமுனிவர்.**—சனத்திரள் புடைசூழ ஏசு எருசலேப்பிரவேசஞ் செய்தபோது இவரைப்பார்த்தவர் சிலர் "இவர் யார்?" என வினவினர். சனத்திரள், "இவர் கலிலே நசரையிலிருந்து வரும் ஏசுமுனிவர்" என விடைபகர்ந்தது.

ஏசு திருக்கோயிலுட்புகுந்து அங்குள்ளவற்றையெல்லாம் சுற்றிப்பார்த்தனர். நேரங்கடந்துவிட்டபடியால் அங்கு பல நாழிகை தங்காமல் ஏசு பன்னிருவரோடும் எருசலேக்குப் புறம்பேயுள்ள வேதனியூருக்குச்சென்று இரவைக்கழித்தனர்.

## திங்கட்கிழமை

**தூயது கோயில்.**—அடுத்தநாள் ஏசு வேதனியைவிட்டு எருசலேக்குப் போயினர். அங்கு இவர் திருக்கோயிலுக்குப் போனபொழுது, கோயிலுக்குள்ளே புறமக்கள்பிராகாரத்திலே பலர் கடைவைத்து வியாபாரஞ்செய்யக் கண்டனர். ஆட்டுக்கடை சில, மாட்டுக்கடை சில, புறுக்கடை சில. கோயிலில் வழிபடவருபவர் பலியிட இவ்வாடுமாடு புறுக்களை விலைக்கு வாங்கும்படிக்கே இக்கடைகள் இருந்தன. ஒரு பக்கத்திலே காசுக்கடை பல இருந்தன. ஊதநாணகசாலையில் வார்த்தகாசன்றி வேறுகாசொன்றும் கோயிலிற் தட்சிணைக்கு வழங்கலாகாது. ஆகவே உரமநாணகங்களை இக்கடைகளில் மாற்றி ஊதநாணகங்கள் பெற்றுக்கொள்ளலாம். இதன் பொருட்டு இக்காசுக்கடைகள் இங்கிருந்தன. இவற்றையெல்லாங் கண்ட ஏசு, "இக்கடைகள் அவசியமானல், இவை

* திருப்பதிக்கு யாத்திரிகராய் வருபவரை அங்குள்ளார் உபசரித்து முகமன் கூறுகையிற் சொல்லும் சொல் இது.

கோயிலுக்குப் புறம்பேயன்றோ இருத்தல்வேண்டும்? கோயிலுக்குள்ளே கடைகள் இருக்கலாமோ? கோயில், கடவுளை வழிபடுமிடமோ, வாணிகஞ்செய்யுமிடமோ?" எனத் தம்முள் எண்ணி, "இவர் இங்கு கடைவைத்திருப்பது பெரும் பாதகம். இதனை இப்பொழுதே ஒழித்தல் வேண்டும்" எனத் துணிந்து, ஆடுமாடு புறா விற்பாரையுங் கொள்வாரையும் அவ்விடத்தைவிட்டு வெளியேபோம்படி துரத்தினர்; காசுக்கடைகளிலே பலகைகளிலே அடுக்கடுக்காயிருந்த நாணகங்களைப் பலகைகளோடு கவிழ்த்துக்கொட்டினர். கோயிலுக்குள்ளே தட்டுமுட்டுச்சாமான்கள் கொண்டுவந்தாரை அவற்றோடு உள்ளேவர ஏசு விடவில்லை. "'புறமக்களும் என் ஆலயத்தில் வந்து வணங்குவார்' எனத் திருமுறையொன்றில் வாசிக்கிறோம். நீயிரோ கோயிலைக் கள்வர்குகை ஆக்கினீர்" எனச் சீறிச்சினந்தார்.

திருக்கோயிலில் ஏசுசெய்தவையெல்லாம் பரிசாரகர் அருச்சகருட்தலைவருக்கு அறிவித்தார். அதைக்கேட்ட அருச்சகர், "நம்மையும் பேயரென நினைத்தானோ இவன்? இது கப்பணம் அன்று, எருசலை என்பதை மறந்தான்போலும்! இவனைஇப்படியேவிட்டுவிட்டால் நம்மைச் சனங்கள் மதிக்கும் மதிப்பெல்லாம் போய்விடும். செல்வத்தையுமிழந்து வறிஞராய்ப்போவோம்.* இவனைக்கொல்வதே சரி" என ஆலோசித்தனர்.

பொழுதுபடுமுன்னே ஏசுவும் பன்னிருவரும் எருசலையை விட்டுப் புறம்பே சென்றனர்.

* கோயிலுக்குள் இருந்தகடை ஒவ்வொன்றுக்கும் வாடகை வாங்கிவந்த அருச்சகர் கடையெல்லாம் போய்விட்டால் என் செய்வார்! இதனாலன்றோ 'செல்வத்தையுமிழந்து வறிஞராய்ப் போவோம்' என அஞ்சினர்!

## செவ்வாய்க்கிழமை

**சிரேஷ்ட அருச்சகர்வினு.**—அடுத்தநாள் ஏசு எருசலேக்கு மீட்டுஞ் சென்றனர். இவர் திருக்கோயிலுள் நடந்துபோகையில் சிரேஷ்ட அருச்சகர் அனுப்பிய சாத்திரிமார் சிலர் இவரிடம்வந்து, "இவ்வாறெல்லாம் நீர்செய்ய உமக்கு அதிகாரங்கொடுத்தவர் யாவர்?" என வினவினர். ஏசு அவரை நோக்கி, "நானும் நும்மை ஒன்று கேட்கிறேன்; அதற்கு விடைகொடுத்தால், நான் எந்த அதிகாரத்தால் இவையெல்லாஞ் செய்கிறேன் என்பதை நுமக்குச் சொல்வேன்: திருமுழுக்காட்ட ஓகனமுனிவருக்கு அதிகாரங்கொடுத்தவர் யாவர்—கடவுளோ, மனிதனோ?" என்றார். அவர், "யாம் அறியேம்" என்றனர். ஏசுவும் "எவ்வதிகாரத்தால் இவை செய்கிறேனென்பதை நுமக்கு யான் சொல்லேன்" என்றார்.

**மக்கள் இருவர்கதை.**— இப்படிச்சொன்னபின், ஏசு சாத்திரிமாரைநோக்கி, பின்வருங்கதை சொன்னார்:

"ஒருவனுக்கு மக்களிருவர். அவன் அவரைநோக்கி, 'மக்காள், இன்று நீவிர் தோட்டத்திற்போய் வேலைசெய்தல் வேண்டும்' என்றான். மூத்தமகன் 'நான் போகேன்' என்றான். ஆயினும் சிறிதுநேரத்தில் தான் தந்தை சொல்லைத் தட்டிப்பேசினது தவறு என உணர்ந்து, தோட்டத்திற்போய் வேலைசெய்தான். இளையவன், 'அப்பா, நான் போகிறேன்' என்றான். அப்படிச் சொல்லியும் அவன் போனானில்லை.

"இவ்விருவரில் தந்தையின் விருப்பத்தின்படி செய்தவன் எவன்?"

சாத்திரிமார்: "மூத்தவனே."

ஏசு: "நான் சொல்வதைக் கேண்மின்: தண்டற்காரரும் வேசையரும் கடவுளரசிற் புகுவர்; நீவிரோ அதிற் புகுவதில்லை. ஒகனமுனிவரர் தருமம் உபதேசித்தனர். அவர் சொல்லை நீவிர் நம்பவில்லை. தண்டற்காரரும் வேசையருமோ அவர்சொல்லைநம்பி நல்வழிப்பட்டனர்."

சாத்திரிமார் இதனைக்கேட்டுவிட்டுத் திரும்பிப்போயினர்.

உரமைவேந்தனுக்கு வரியிறுத்தல்.— சிறிதுநேரத்தின்பின் வேறுசாத்திரிமார் சிலரும் ஏரதனைச்சார்ந்தார் சிலரும், பேச்சில் ஏசுவைக் குற்றப்படுத்தலாம் எனஎண்ணி, இவரிடம்வந்து, "குருவே, நீர் உண்மைபேச அஞ்சீர். மனிதருக்குப் பயப்படுதல் உமக்கு எந்நாளுமில்லை. ஒருவனது தயையும் நீர் வேண்டீர். நீர் நெஞ்சில் எண்ணுவதையே உம்வாய் பேசும். எமக்கு ஓர் ஐயம்; அதை நீர் தீர்ப்பீரென்று நம்பி உம்மிடம் வந்தோம்: ஊதர்நாம் உரமை வேந்தனுக்கு இறைகொடுப்பது சரியோ தவறோ? இறை கொடோம் என மறுப்பின் பிழையோ?" எனக் கேட்டார். இவர் கள்ளச்சிந்தையை அறிந்த ஏசு, "ஏன் என்னைச் சோதிக்கிறீர்? தினாரம்* ஒன்று காட்டுமின்" என்றார். அவர் அவ்வாறே செய்தனர். ஏசு தினாரத்தைக் கையில் வாங்கி, அதிற் பொறித்துள்ள வேந்தன்தலையைச் சுட்டிக்காட்டி, "இஃது யார்தலை?" எனக் கேட்க; அவர், "உரமை வேந்தன்தலை" என்றனர். ஏசு, "உரமை வேந்தனுக்குரி

* தினாரம் உரமையில் வழங்கிய ஒருநாணகம். இந்நாணகம் பத்தொன்பது நூற்றாண்டுகளுக்கு முன்னே தமிழகத்திலும் வழங்கியது. மதுரையையடுத்த இடங்களில் உரமநாணகங்கள் இப்பொழுதும் அகப்படுகின்றன. தினாரம் எட்டரையணா அல்லது ஐம்பத்துமூன்று சதம் பெறும்.

யதை அவனுக்குக் கொடுமின்; கடவுளுக்குரியதைக் கடவுளுக்குக் கொடுமின்" என்றார்.

இவர் தாம் எண்ணிவந்தகாரியம் வாய்க்கவில்லையென வெள்கி அகன்றனர்.*

நிலை தவறிய மகள்.— விபசாரத்திற் பிடித்த ஒரு பெண்ணைச் சாத்திரிமார்சிலர் ஏசுவிடங்கொண்டுவந்து, அவர் முன் நிறுத்தி, "போதகரே, இவளைக் கையும்மெய்யுமாக விபசாரத்திற் பிடித்தோம். இவ்வகைப் பாவிகளைக் கல்லெறிந்து கொல்லும்படி மோசயர் விதிக்கின்றார். தமது கருத்து என்னையோ?"என வினவினர். எவ்வகைவிடைதரினும் அதிற் பிழைபிடிக்கலாம் என்றதே இவர் நோக்கம். இவர் இப்படி வினவ, ஏசு குனிந்து தரையிற் தம்விரலால் யாதோ எழுதினர். தாம் கேட்ட வினவை ஏசு கவனித்திலாபோலும் எனவெண்ணி, மீட்டும்மீட்டும் உசாவினர். ஏசு தலைநிமிர்ந்து இவரைநோக்கி, "பாவமொன்றுஞ்செய்யாதவன் யாரேனும்

* இவர் எண்ணிவந்தது: 'இறைகொடுத்தல் சரியென்பர், அல்லது தவறென்பர்; இறைகொடுத்தல் சரியென்பரேல், இவருக்குச் சுவசனாபிமானம் இல்லை என ஊதருக்குச்சொல்லி விடலாம்; கொடுத்தல் தவறென்பரேல், இறைகொடுக்க வேண்டா எனக் குடிகளுக்குப் போதிக்கிறார் என்று அரசினரிடம் அறிவிக்கலாம். இவ்விரண்டில் எதைக்கூறினும் குற்றஞ்சுமத்தலாம்.' இவர் வஞ்சகநினைவைக்கண்ட ஏசு சொன்னவிடையால் ஏமாந்துபோயினர் இவர்.

தற்காலத்தில் நமக்கும் இவ்விஷயத்தில் நிகழும் ஐயங்களுக்கு, ஏசு கொடுத்தவிடையே போதுமென நாம் நினைக்கலாகாது. ஆயினும், 'கடவுளுக்குரியதைக் கடவுளுக்குக் கொடுமின்' என்றசொல் எவருக்கும் எக்காலத்துக்கும் ஏற்ற போதனையே.

நும்முள் இருப்பின் அவன் இவளைக் கல்லெறிக" என விடை கூறி, முன்போலவே குனிந்து தரையில் யாதோ எழுதினர். சாத்திரிமார் ஒருவர்பின் ஒருவராய் அகன்றனர்.* ஏசு நிமிர்ந்து சுற்றிப்பார்த்தபொழுது, பெண்ணை விட்டுவிட்டு எல்லாரும் போய்விட்டார் எனக்கண்டு, இவளைநோக்கி, "மகளே, அவர் எல்லாரும் எங்கே? ஒருவரும் உன்மீது குற்றஞ்சுமத்தவில்லையோ?" எனக் கேட்டனர். இவள், "ஐயா, ஒருவரும் என்மேற் குற்றஞ்சுமத்தவில்லை" என்றாள். ஏசு, "நானும் உன்மீது பழிகூறேன். போ, இனிப்பாவஞ்செய்யாதே" என்றார்.§

* இவளும் போயிருக்கலாம். ஏன் போகவில்லை?

§ விபசாரத்திற் பிடித்தவரைக் கொல்லும்படி மோசயர் கூறினாராயினும், ஊதர் தம் அரசிழந்து உரமையரசுக்கு உட்பட்டபின் தேசச்சட்டம் மாறிவிட்டது. எவ்வகைக் குற்றஞ்செய்யினும் கொலைத்தீர்ப்புச்செய்ய ஊதருக்கு இப்பொழுது அதிகாரமில்லை. அன்றியும், மோசயர் விதித்தபடி செய்யப்புகின், விபசாரத்திற் பிடித்த ஆண்பெண் இருபாலாரையுங் கொல்லல்வேண்டும். சாத்திரிமார் ஆடவனைப் போகவிட்டுப் பெண்ணைமட்டும் ஏசுவிடம் இழுத்துவந்தது அயோக்கியம். இவ்விஷயத்தில் ஆணுக்கு ஒருவிதி பெண்ணுக்கு ஒரு விதியில்லை. நம்மவருள்ளும் ஆடவர் தீநெறிக்குட்படின் அது பெரும்பிழையன்று எனவும் பெண்கள் தவறுசெய்யின் அது பெரும்பாதகம் எனவும் நாம் எண்ணுவதும் நடத்துவதும் பெருங்குறையே. ஆணைப்போலவே பெண், பெண்ணைப்போலவே ஆண் என இருபாலாரையும் ஒப்ப மதிப்பதே நமது கடமை.

பாவிகளைக் குற்றம்பிடிக்க ஏசு நினைத்ததில்லை; அவரை எப்படியாயினும் உய்விப்பதே ஏசுவின் நோக்கம், கடவுள் கருத்து இஃதேயாதலின்.

சாவின்பின் வாழ்வுண்டோ?—ஊதருக்குள்ளே சதுசயர் என்பார் ஒரு பிரிவினர். சாவின்பின் மனிதன் சூனியமாவன் என்பது இவர் கொள்கை. இவருட்சிலர் ஏசுவிடம் வந்து, "போதகரே, 'ஒருவன் பிள்ளையின்றிச் செத்தால் அவன் கைம்பெண் அவன் உடன்பிறந்தானை மணந்து, செத்தவனுக்குச் சந்ததியுண்டாக்குக' என மோசயர்விதித்தார். எம்முள் உடன்பிறந்தார் ஆடவர் எழுவர். அவருள்மூத்தவன் ஒருத்தியைமணந்து, பிள்ளையின்றிச் செத்தான். அடுத்தவன் அவளைமணந்தான்; அவனும் பிள்ளையின்றிச் செத்தான். இவ்வாறே எழுவரும், ஒருவன்பின் ஒருவன், அவளை மணந்து, பிள்ளையின்றிச் செத்தனர். ஈற்றில் அவளும் மாண்டாள். செத்தவர் மீண்டும் உயிரோடெழுவர் என்பது நுமது கொள்கையன்றோ? உடன்பிறந்தார் ஆடவர் எழுவரும், ஒருவன்பின்ஒருவனாய் இவ்வெழுவரும் மணந்த பெண்ணும் மீண்டும் உயிரோடுவருவராயின், இப்பெண்ணுக்கு உடையவன் யாவனோ?" என வினவினர். ஏசு புன்னகைசெய்து, "நீவிர் கூரியமதியீர்! ஆயினும் திருமுறையை நுணித்துக் கற்றிருப்பீரேல் இவ்வாறு கூறீர். மோசயருக்குக் கடவுள் முட்செடியிற் காட்சிகொடுத்தபொழுது, 'ஆபிரகனுக்கும் ஈசகனுக்கும் யாகவனுக்கும் கடவுள் யானே'* என அருளிய திருவாசகத்தின் பொருள் அறிவீரோ? கடவுள் செத்தவருக்குக் கடவுளல்லர், உயிரோடிருப்பவர்க்கே கடவுள். அன்றியும்

* திருமுறையில் இச்சந்தை கூறுமிடத்து, இவ்வாக்கியம், ஆபிரகன் ஈசகன் யாகவன் என்பார் இப்பொழுது உயிரோடு இருக்கின்றார் என்றாயினும், இனியொருகாலத்தில் உயிரடைவர் என்றாயினும் பொருள்படாது. அச்சந்தர்ப்பத்தில் அதன்பொருள்: "நின் முன்னோர் ஆபிரகன் ஈசகன் யாகவன் வழிபட்டுவந்த கடவுள் யானே" என்பதே.

மறுமையிலே கொள்வினை கொடுவினை இல்லை. கணவன் மனைவியர் என்ற உறவும் அங்கில்லை" என்றார்.

**தலைமைவிதி இரண்டு.**—சதுசயரும் ஏசுவும் பேசிய பொருளை அங்குநின்ற சாத்திரி ஒருவன் செவிகொடுத்துக் கேட்டான். ஏசு அவர் கேட்ட கேள்விக்குத் தக்கவிடை தந்ததைக்கண்டு, இவன் ஏசுவைநோக்கி, "குருவே, விதியெல்லாவற்றுள்ளும் தலைமைவிதி எது?" என வினவினன்.

ஏசு: 'ஓ இசரலே, *ஏகவர் ஒருவரே நின்கடவுள்; நீ நின்கடவுள் ஏகவரை முழுச்சிந்தையாலும் சிந்தித்து, முழுநெஞ்சாலும் அன்புசெய்து, முழுவாற்றலோடுந் தொண்டு செய்' என்பதே முதல் விதி.

இதற்கு இருவதுவிதி இதனை ஒத்தது: 'நின்னிடத்து நீ அன்புவைத்தல்போலவே அயலவனிடத்தும் அன்பு வை'

* 'ஏகவர் ஒருவரே நின்கடவுள்' எனத் திருமுறை கூறுமிடத்து, ஏகேசுவரவாதத்தைக்கருதிக் கூறவில்லை. ஆங்குக் கருதியதெல்லாம் ஏகேசுவரபத்தியே. இவ்விரண்டுக்கும் வேற்றுமை யாதெனில்: கடவுள் ஒருவர், வேறுகடவுள் இல்லை என்பது முன்னையது; கடவுளர் பலரிருப்பினும் நான் வணங்குவது அப்பலருள் ஒருவரையே என்பது பின்னையது.

["உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லாதெங்கள் உத்தமனே"

என்பதின்பொருளை ஆழ்ந்து நோக்குக.]

ஆயினும் ஏசுவும் அவரோடு இப்பொழுது பேசின சாத்திரியும் ஏகேசுவரவாதிகள். தம் மனக்கிடக்கையின்படியே, 'ஏகவர் ஒருவரே நின்கடவுள்' என்ற திருமுறை வாக்கியத்துக்கு, 'கடவுள் ஒருவர்; அவர் ஏகவரே' எனப் பொருள் கொண்டனர்.

இவ்விரண்டுக்கும் மேற்பட்ட விதி இல்லை.*

சாத்திரி: "அடிகள்சொன்னது உண்மையே. ஏகவர் ஒருவரே கடவுள், வேறுகடவுள் இல்லை. அவரை முழுச் சிந்தையாலுஞ் சிந்தித்து, முழுநெஞ்சாலும் அன்புவைத்து, முழுவாற்றலோடும் தொண்டுசெய்து; ஒருவன் தன்னிடத்தில் அன்புவைத்தல்போல அயலானிடத்தும் அன்பு வைப்பனேல்,—இவன் கைக்கொள்ள வேறுவிதியுமுண்டோ? இவன் கடவுளுக்கு நைவேத்தியஞ்செலுத்தல் வேண்டுமோ? இவன்செய்யவேண்டிய வேள்வியுண்டோ?

ஏசு (இவன்கொடுத்த விடையின் ஆழ்ந்தபொருளைக் கிரகித்து): அறிவுள்ளாய் நீ. அறிந்தவண்ணம் ஒழுகு. கடவுள் நினக்கு முத்தியருள்வர்.

இதன்பின் ஒருவரும் ஏசுவைக் கேள்விகேட்கத் துணியவில்லை.

மேசியர் தாவிதனூர் மரபினரோ?:— திருக்கோயிலில் உபதேசஞ்செய்கையில் ஏசு அங்கிருந்தவரை நோக்கி, "மேசியர் தாவிதனூர் மரபினரெனச் சாத்திரிமார் கூறுவதேனோ? 'ஏகவர் நங்கோனைநோக்கி, நின்பகைஞரை நினக்கு அடிதாங்கி ஆக்கும்வரையும் நீ என்வலத்தில் இரு எனத் திருவாய்மலர்ந்தருளினர்' எனத் தாவிதனூர் திருப்புகழ்

* ஆதியில் இவ்விரண்டுவிதியும் வெவ்வேறிடத்துக் கூறியுள்ளன; இவை ஒன்றோடொன்று சம்பந்தமுடையனவல்ல. இவ்விரண்டு விதியையும் பிற்காலத்தவர் இணைத்தனர். இப்படிச்செய்தவர் ஏசுவே என்பார் நூலாசிரியர் சிலர்; ஏசுவின்காலத்துக்கு முன்னரே பண்டிதர் இல்லலர் இவ்விரண்டு விதியையும் இணைத்தனர் என்பார் வேறுசிலர்.

மாலையிலே கூறுகின்றாரே.* தாவிதனாரே மேசியரை 'நங் கோன்' என்பரேல், மேசியர் தாவிதனார் மகனாரெனச் சாத்திரி மார் கூறுவது சரியோ?" என்றார். ஏசு பேசிய எல்லா வற்றையும் சனத்திரள் கேட்டுக் களித்தது.

போலிப்பத்தி :—இதன்பின் ஏசு இவ்வாறு கூறுவார் :

"நீண்டு தாழ்ந்த அங்கியுடுத்துத்திரிவாருட் போலிப் பத்தர் சிலர். நீவிர் இவரைக்கண்டு மயங்கவேண்டா. அங்கு மிங்கும்போவார் தம்மை வணங்குவதைநாடி இவர் கடைத் தெருக்களிலும் சந்திகளிலும் நிற்பார்; ஊர்ப்பள்ளிகளிலே தலைமையிடங்களைத் தேடுவார். நீண்ட பிரார்த்தனைகளை இவர் வாய்சொல்லும், மனமோ வேறு பலவற்றை நினைக்கும். கைம்பெண்கள் பொருளையெல்லாம் பறிக்கும் கள்வர் இவர். தண்டற்காரருக்கும் வேசையருக்கும் கிட்டாத நரகம் இவர் கதியாகும்.

"நாசமுறுவீர், கபடநாடக வேடதாரிகாள். கடவு ளரசுள் ஒருவரும் புகாமற் கதவடைத்தீர்; நீவிரும் புகுவ தில்லை, புகவிரும்பினோரையும் நீவிர் விடுவதில்லை.

"நாசமுறுவீர், கபடநாடக வேடதாரிகாள். உண்கலங் களையும் கிண்ணங்களையும் சுத்தஞ்செய்வீர், நுமது நெஞ்சமோ பொருளாசையும் போகப்பிரியமும் நிறைந்தவை.§

* இது திருப்புகழ்மாலையில் நூற்றுப்பதின்மதது திருப்புகழிற் கூறியுள்ளது. இத்திருப்புகழ் பாடியவர் தாவிதனார் அல்லர். தாவிதனார் இதைப் பாடினர் என ஏசுநினைத்துப் பேசியது தவறு. ஆயினும் இதைப் பாடினவர் தாவிதனார் என்பதே அக்காலத்திற் பலர்கொண்ட கொள்கை.

§ "மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்த்'அறன்;
ஆகுல நீர பிற."
—திருவள்ளுவர்.

"நாசமுறுவீர், கபடநாடக வேடதாரிகாள். கடுகிலும் சீரகத்திலும் வெந்தயத்திலும் பத்திலொன்று கோயிலுக்குக் கொடுக்கத்தவறீர், நடுவுநிலை அருள் வாய்மை முதலிய அற மெல்லாம் புறக்கணித்தீர். கொதுகை* வடிகட்டிக் காத்து, ஒட்டகத்தை விழுங்குங் குருடர் நம்மையன்றி வேறுயார்?

"நாசமுறுவீர், கபடநாடக வேடதாரிகாள். பிணக்குழி மேற்கல் வெள்ளையடித்துப் பொன்முலாம்பூசி அழகுநிறைந்து விளங்கும், அதின்கீழே பிணம் கட்டுத்தளர்ந்து புலால்நாறும். இவ்வாறே நீவிரும்—புறம்பே தூயர், அகத்தே அழுக்கர்.

"நாசமுறுவீர், கபடநாடகவேடதாரிகாள். முனிவர் முனிபுங்கவர் கடவுளடியாருக்குச் சமாதிகட்டி, 'ஐயையோ, நம் முன்னோர் என்னகொடுமைசெய்தார்! இம்மகானுபாவ ரைக் கொல்ல எப்படித் துணிந்தாரோ? அந்நாட்களில் நாம் உயிர்வாழ்ந்திருப்பேமேல் இக்கொடிய செய்கைக்கு உடன்பட் டிரேம்' என்பீர். இதனால் முனிபுங்கவரைக்கொன்ற கொடி யரின் பிள்ளைகள் நீவிர் எனச் சொல்லாமற்சொல்கின்றீர்! நமது முன்னோரின் கொடுமை இன்னும் நிறைவுறவில்லை; அதைநிறைவுறச்செய்து அவர் பிள்ளைகள் நீவிர் என்பதை உலகத்துக்கு விளக்குமின்."

கைம்பெண் காணிக்கை.—திருக்கோயிலிலே உண்டிப் பெட்டி வைத்திருந்த இடத்தின்முன்னே ஏசு உட்கார்ந்து, வழிபடவந்தசனம் இடுங் காணிக்கைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார். செல்வர்பலர் பலபல வெள்ளிநாணகங் களை உண்டியில் இட்டார். அப்பொழுது ஏழைக்கைம்பெண்

* கொதுகு — கொசு.

ஒருத்தி இரண்டு* சிறு செப்புநாணகத்தை இட்டாள். இதனைக்கண்ட ஏசு, சீஷரை அழைத்து, "செல்வர்பலர் இட்ட பலவெள்ளிநாணகத்திலும் இவ்வேழைக்கைம்பெண் இட்ட இவ்வரைக்காசு இரண்டுமே கடவுள்பார்வையில் மதிப்புள்ளன. செல்வரோ தம் செல்வத்தில் மிகச் சிறுபாகத்தை இட்டார். இவள் இற்றைப்பிழைப்புக்கிருந்த அரைக்காசு இரண்டையும் காணிக்கை கொடுத்துவிட்டு, பையிலும் கையிலும் ஒன்று மின்றி,கடவுளே துணை யென்று செல்கின்றாள். இஃதன்றோ காணிக்கை!" என இவள் செய்கையை வியந்தார்.

**கோயிலில்லாக் காலம்.**--திருக்கோயிலைவிட்டு ஏசு புறப் படுகையில் சீஷரிலொருவன் இவரைநோக்கி, "அடிகாள், இங்குகாண்க, எத்துணை அழகியகற்கள்! எத்துணை விசித்திர வேலைப்பாடமைந்த கட்டடங்கள்!" என்றான். அப்பொழுது ஏசு அவனைப்பார்த்து, "இம்மாடங்களின் வேலைப்பாட்டைப் பார்த்து வியப்புறுகின்றாய் நீ. நான் சொல்வதைக் கேள், இம்மாடங்களில் ஒருகல்லின்மேல் ஒருகல்லிராமல் முற்றும் அழிந்துபோங் காலம் வரும்" என்றார்.§†

* இவ்விரண்டு சிறுநாணகமும் சேர்ந்து காலணா மதிப்புப் பெறும். (இலங்கைக்காசு ஒன்றரைச்சதம்.)

§ ஏசு இப்படிக்கூறினதின் பொருளை அங்குநின்றசிலர் உட்கொண்டிலர். 'இத்திருக்கோயிலை நானே அழிப்பேன்' என ஏசு சொன்னதாக அவர் எண்ணினர். இரண்டுநாளைக்குப் பின்பு ஏசுவை நியாயசபையில் விசாரித்தபோது, ஏசுவுக்கு விரோதமாய் இப்படியே அவர் சாட்சியம்சொன்னார்.

† இஃது ஏசு சொன்னது கி. பி. முப்பதின்மது ஆண்டிற் போலும்; கி. பி. எழுபதின்மது ஆண்டில் எருசலேத்திருக் கோயிலை உரமைவேர்தனது சேனாபதி தீத்தன் இடித்து

சிறிதுநேரங்கழிந்தபின் சீமன் யாகவன் ஓகனன் அந்திரன் என்னும் நால்வரோடு ஏசு ஒலிவமலை* உச்சியில் உட்காந்திருக்கும்போது, அவர் இவரைநோக்கி, "அடிகள் சொல்லியது நிறைவேறுங்காலம் எதுவோ?" என்றனர். ஏசு, "கடவுளுக்குத்தான் தெரியும்" என்றனர்.

தலைவர் சூழ்ச்சி.— பேசக விழவுக்கு இரண்டுமூன்று நாளைக்குமுன் அருச்சகசிரேஷ்டர் எவ்வகைத் தந்திரத்தாலேனும் ஏசுவைப்பிடித்துக் கொல்விக்கச் சூழ்ச்சிசெய்தனர். "ஆயினும் அது திருவிழாக்காலத்திற்செய்வது புத்தியன்று, அதினால் நகரிற் பெருங்கலகம் நேரிடக்கூடும்" என்றார் சிலர்.

## புதன்கிழமை

நளதாபிஷேகம்.—வேதனியூரிலே சீமன்தொழுநோயன் வீட்டில்§ ஏசு வதிந்தனர். புதன்கிழமை அவர் பகலுண்டி

அழித்தனன். நாற்பது ஆண்டுக்குப்பின்பு நடக்கப்போவதை ஏசு சிந்தைவிளக்கால் முன்னமேயறிந்து இப்படிச் சொன்னரோ, அன்றேல் யூதரெல்லாரும் பரமாத்துமசொரூபியாகிய கடவுளை 'நெஞ்சகமே கோயில்' எனக்கடைப்பிடித்து மனத்தால் வழிபடுங்காலம் வரும்போது, மனிதர்கையாற்கட்டிய கோயில் இல்லாமற்போய்விடும் என்னும் உண்மைதாண்ட இப்படிச்சொன்னரோ, நாம் அறியேம்.

* ஒலிவமலை – ஒலிவை+மலை., ஒலிவை ஒருவகை இருப்பை மரம்.

§ வேதனியூரில் ஒருவீட்டுக்குச் 'சீமன்தொழுநோயன் வீடு' எனும்பெயர் வழங்கிற்று. சீமன் தொழுநோயன் இறந்து பல்லாண்டாயினபோலும். அவன் இறந்தபின்னும் அவ்வீட்டுக்குச் 'சீமன் தொழுநோயன்வீடு' எனும்பெயர் ஒழிந்தில்லைப் போலும்.

அருந்துகையில், ஒருபெண்* கையில் ஒரு வெண்கற் சிமிழோடு§ உண்ணறையுட் புகுந்து, சிமிழின்மூடியைத் திறக்க முயன்றும் முடியாது, சிமிழையுடைத்து, அதிலிருந்த நளதம்† என்னும் விலையுயர்ந்த நெய்யை ஏசுவின் உச்சியில் ஊற்றி அபிஷேகஞ்செய்தாள். அங்கிருந்தவரிற்சிலர் இதனைக் கண்டு சினந்து, “ஏன் இவ்வீண்செலவு? இந்நளதத்தை முந்நூறு தினாரத்துக்கு¶ விற்று, ஏழைகளுக்கு ஈயலாமே!” என்றனர். ஏசு, “இவளைவிடுமின். ஏன் சும்மா கோபிக்கின்றீர்? என்மேலுள்ள அன்பு இவள்நெஞ்சில் நிறைந்து பொங்கிவழிய, இவள் இப்படிச்செய்தாள். இச்செய்கையின் அழகென்னே!” என அவளை வியந்தனர்.

ஊதயன் அருச்சகசிரேஷ்டரோடு சூழ்தல்.—பன்னிருவரில் ஒருவன், கரியதப்பதியினன், ஊதயன் என்பான் அருச்சகசிரேஷ்டரிடஞ்சென்று, “சனத்திரள் இல்லாத நேரத்தில், ஏசு தனித்திருக்கும்போது நான் உங்களுக்கு அறிவிப்பேன். யாதொரு வருத்தமுமின்றி நீங்கள் அவனைப் பற்றிப்பிடிக்கலாம்” என்றான். அதனைக்கேட்ட அருச்சகர்

* இப்பெண் யாரென அறியேம். இவள் மாதையின் உடன்பிறந்தாள் மரி என்பதற்கு ஆதாரம் இல்லை.

§ சிமிழ், செப்பு, பரணி ஒருபொருட்சொற்கள்.

† நளதம் வெட்டிவேரிலிறக்கும் ஒரு நெய். வெட்டிவேருக்கு இலாமச்சம்வேரென்றும் பெயர்.

¶ முந்நூறு தினாரம் ஏறத்தாழ நூற்றைம்பதுரூபா பெறும்.

அகமகிழ்ந்தனர். தக்க தருணம் எப்போது வாய்க்குமென்று காத்திருந்தான் ஊதயன்.*

## வியாழக்கிழமை

கடைசி உண்டி.—ஊத விழாக்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்தது பேசகவிழவு. இதனை நீசான்மாதம் பதினைவது தேதி தொடங்கி ஏழுநாள் ஆசரிப்பர். மாலைமுதல் மாலை வரையுமுள்ள காலம் ஊதருக்கு ஒருநாள் என்பதை முன்னமே கண்டுளேம். பேசகவிழவின் முதலிரா உண்ணும் உணவினுள், முதனாட் பிற்பகல் அடித்த பேசகயாட்டின் இறைச்சி விசேடமுடைத்து.

* ஊதயன் இவ்வாறு ஏசுவுக்கு உட்பகைஞனானது எப்படி? இவன் இப்படிச்செய்யத் துணிந்ததற்குக் காரணம் என்னே? நூல்வல்லார் பலர் பலவாறு கருதுவர். சிலர், 'இவன் முதற் தொடங்கி வஞ்சகன், தீயன்; ஏசுவுக்குச் சீஷனாவதால் தான் பெருநிலையடையலாம் என எண்ணி வந்தவன்; இலவுகாத்த கிளி ஏமாந்ததுபோல இவனும் ஏமாந்தபின், ஏசுவின்மீது பகை இவனதுநெஞ்சிற் தோன்றிக் குடிகொண்டது; இவன் இப்பொழுது இவ்வாறு செய்ததற்குக் காரணம் அதுவே' என்பர். வேறுசிலர், 'தொடக்கத்தில் ஊதயன் ஏனைய பதினொருவரைப்போலவே நல்லன், அவர் எல்லாரினும் வல்லன்; ஏசுவைச் சேரின் பெருநிலையடையலாமென எண்ணினவன் இவன் ஒருவன்மட்டுமோ? யாகவன், ஓகனன், சீமன் முதலியோரும் அப்படி நினைத்தவரலரோ? முதலில் நல்லவன் பின் கெடத்தொடங்கியகாலம் யாது? காரணம்யாது? இவன் இப்பொழுது இவ்வாறுசெய்ததற்கும் காரணம் யாது? இக்கேள்விகட்கு விடை சுசமாசாரங்களிலே காண்டல் முடியாது' என்பர். இவ்விரு வகுப்பினருட் பின்னையோர் கூறுவதே பொருத்தமுடையதுபோலும்.

இவ்வாண்டு பேசகவிழா (நம் கணிதத்தின்படி) வியாழக் கிழமைமாலை தொடங்கிற்று. அதற்குமுன்னரே, அன்று காலை பன்னிருவர் ஏசுவைநோக்கி, "அடிகள் பேசகபோசனத்தை எவ்விடத்தில் உண்பதெனஎங்களுக்குத் தெரிவிப்பின், நாங்கள் போய் ஆயத்தஞ்செய்வோம்" என்றனர். எருசலைப்பதியிலுள்ள நண்பன் ஒருவனது வீட்டைக்குறிப்பிட்டு, அங்குசென்று பேசகபோசனத்தை ஆயத்தஞ்செய்யும்படி ஏசு சொல்ல, சீஷரில் இருவர் அவ்வாறே செய்தனர். பொழுது பட்டபின்* ஏசு சீஷரோடு எருசலைப்பதியில் தமது நண்பன் வீட்டுக்குச்சென்று அங்கு ஆயத்தம்பண்ணியிருந்த போசனத்தை உண்டார். உண்டி முடியுமுன் ஏசு ஓர் அப்பத்தைக் கையில் எடுத்து, கடவுளைவாழ்த்தி, அப்பத்தைப்பிட்டுச் சீஷரிடங்கொடுக்க அவரெல்லாரும் உண்டனர். அதன்பின் அதிலொரு துண்டை ஏசுவும் உட்கொண்டனர். பின்பு ஒரு கிண்ணத்தில் திராட்சைரசம்வார்த்து, அதைக் கையிலேந்தி, கடவுளைவாழ்த்தி, சீஷருக்குக் கொடுத்தார். அதில் அவர் எல்லாரும் பருகினர். அதன்பின்பு ஏசுவும் அதிற்பருகினர்.§

இதன்பின்பு ஏசுவும் சீஷரும் அலல்† என்னுந் திருப்புகழ் பாடினர். அதன்பின் எல்லாரும் எழுந்து ஒலிவமலை

* வியாழக்கிழமை பொழுதுபட்டவுடனே, யூத கணிதப்படி, வெள்ளிக்கிழமை தொடங்கிற்று.

§ இப்பொழுது கிறைஸ்தவ திருச்சபைகளில் ஆசரிக்கும் இராப்போசனம் என்னும் சமஸ்காரத்துக்கு ஆதி இஃதேயெனக் கூறுவர். ஏசு திருச்சபையைநாட்டவில்லை. அதில் ஆசரிக்கும் சமஸ்காரங்களுள் ஒன்றையேனும் ஏசு தாபித்ததுமில்லை. திருச்சபையும் அதன் சமஸ்காரங்களும் ஏசுவின்காலத்துக்குப் பிந்தி எழுந்தவை.

† திருப்புகழ்மாலையில், நூற்றுப்பதின்மூன்றுமுதல் நூற்றுப்பதினெட்டுவரையும் உள்ள திருப்புகழ் அலல் எனப் பெயர்பெறும்.

நோக்கிப் புறப்பட்டனர். அப்பொழுது ஊதயன், எவரும் அறியாது, கூட்டத்தைவிட்டுநழுவி, அருச்சகசிரேஷ்டரிடம் சென்றான். வழியிலே ஏசு சீஷரைப்பார்த்து, நமக்குத் தீங்குசெய்ய எண்ணுகின்றார் சிலர். அவர்கைக்ககப்படாமல் நாம் நம்மைக் காத்துக்கொள்ளல் வேண்டும். நும்மிடத்தில் வாட்படை உண்டோ?" என்றார். "இங்கு இரண்டு வாள் உள" என்றார் சீஷர். "அவை போதும்" என்றார் ஏசு.*

கெற்சமனே.—நகரத்துக்குவெளியே ஒரு சிற்றோடைக் கருகே ஒரு தோட்டம். அதற்குக் கெற்சமனே என்பது பெயர். ஏசு சீஷரோடு அதனுட் சென்றார். அங்கு தரையிற் சிறிதுநேரம் உட்காந்திருந்தார். இவரைப் பேரச்சம்பிடித் தது; இவர் மனம் தத்தளித்தது. அப்பொழுது இவர் சீஷரைநோக்கி, "அளவுகடந்த துயரம் என்னை அமிழ்த்து கிறது; இப்பொழுதே இத்துயரம் என்னைக்கொல்லும் போலும். நீவிர் எல்லீரும் இங்கே இருமின். நான் போய்ப் பிரார்த்தனஞ்செய்வேன்" என்று; சிறிதுதூரம்போய், தரை யிலேவிழுந்து, நெடுஞ்சாண்கிடை கிடந்து, "அப்பா,

* போர்செய்தலும் படைக்கலங்களை உபயோகித்தலும் ஏசுவின் கொள்கைக்கு விரோதம்என்பது பலர் கருத்து. போர்செய்தல் தவறென்றும் படைக்கலங்களை உபயோகித்தல் தப்பித மென்றும் ஏசு போதித்ததில்லை. ஆயினும், ஏசுவின் உப தேசத்தை உலகம் முழுதும் கைக்கொள்ளுங்காலம்வருகையில் போர் உலகத்திலிராது. மனிதர் ஒருவரைஒருவர் கொல்ல லும் இராது. அக்காலம் எக்காலமோ? அது வரும்வரையும் போர்செய்வதும் படைக்கலப்பயிற்சியும் சிற்சிலகாலங்களில் அவசியம்போலும்

எல்லாஞ்செய்ப வல்லாய்நீ. இக்கிண்ணத்தை* என்னைவிட்டகற்று. ஆயினும் என்கருத்தன்று, நின்கருத்தே செய்க"§ என விண்ணப்பஞ்செய்தனர்.

இதன்பின் ஏசு எழுந்து சீஷரிடந்திரும்பி வந்தார். சீமன் உறங்குவதைக்கண்டு, இவர் அவனை நோக்கி, "சீமனே, உறங்குகின்றாயோ? ஓர் ஓரைவிழித்திருக்க உன்னுலாகாதோ?" என்றார். இது சொல்லிமுடியுமுன் சனத்திரள் கிட்டிவருவது இவர்கண்ணுக்கோ செவிக்கோ புலப்பட்டது. நெஞ்சம் சிறிது கலங்க, ஏசு பன்னிருவரையும் விளித்து, "எழுமின். நாமேபோய் அவரைச் சந்திப்போம்" என்றார்.

ஏசுவைப் பிடித்தல்.—அக்கணமே, ஏசு பேசிமுடியுமுன், ஊதயன் வந்தான். அவனோடு பலர் திரண்டுவந்தனர். சிலர்கையில் வாள் இருந்தன, சிலர்கையிற் றடியிருந்தன. வந்தவர் ஏசுவைப்பார்த்து, "உன்னைப் பிடித்துவரும்படி சனதரம்† எங்களையனுப்ப, நாங்கள் வந்தோம். வா எங்களோடே" என்று, இவரைப்பிடிக்க முயல்கையில் பன்னிரு

* இங்கே கிண்ணமென்றது துயரத்தை.

§ "திருவுளத்துக் கருத்தெதுவோ அதுவெனக்கும் கருத்தென்றான் தெய்வ மன்னன்."

—மகாபாரதம்.

† சனதரம் என்பது ஊத அதிகாரிகள்சங்கம். ஊதருள் எவரையும் நியாயம் விசாரிக்கவும், மரணதண்டனையல்லாத வேறு எவ்வகைத் தண்டனையையும் விதிக்கவும் இச்சங்கத்துக்கு அதிகாரம் இருந்தது. இதற்குத் தலைவன் மகா அருச்சகன். தலைவனுட்படச் சங்கத்து அவயவம் எழுபத்துமூவர்.

வரிலொருவன்* வாளையுருவி, மகாஅருச்சகனது அடிமை யொருவனைக் காதற வெட்டினன். தம்மைப் பிடிக்கவந்தவரை ஏசுநோக்கி, "கள்வனைப் பிடிக்குமாப்போல், வாளொடுந் தடி யொடும் வந்தீர்! பகல்தோறும் திருக்கோயிலில் நும்நடுவி லிருந்து உபதேசஞ்செய்தேனே; அப்பொழுது நீவிர் என்னைப் பிடிக்கவில்லையே" என்றார்.§

ஏசுவைச் சேவகர்பிடித்தவுடனே பன்னிருவரும் இவரை விட்டுவிட்டுத் தப்பியோடினர். சீமனும் முதலில் ஓடின னாயினும் பின்பு சிறிதுதூரத்திலே ஏசுவின்பின் நடந்து சென்றான்.

சனதர விசாரணை. — ஏசுவைப் பிடித்தவர் மகா அருச்சகன் காயபனிடம் கொண்டுபோய் அவன்முன் இவரை நிறுத்தினர். அப்பொழுது காயபனும் சிரேஷ்ட அருச்ச கர்களும் மூப்பர்களும் சாத்திரிமாரும்அடங்கிய சனதரம் கூடிற்று. சங்கத்துக்குமுன்னே ஏசுவைக் கொண்டுவந்து நிறுத்தினர் சேவகர்.

நியாயம்விசாரிக்கிறவர் பட்சபாதஞ்செய்யாமற் பொதுநிலையில் நிற்பது கடன். சிரேஷ்ட அருச்சகரோ

* பன்னிருவரில் ஒருவன் யாவன்? ஊதயனல்லன் என்பது தெள்ளிது. சீமனுமல்லன் என நினைக்க இடமுண்டு. மகா அருச்சகனது அடிமையைக் காதறவெட்டினவன் சீம னாயின், மற்றவரெல்லாந் தப்பியோட அவன்மட்டும் ஏசு வுக்குப்பின் செல்லான்.

§ தம்மைப் பிடிக்கவந்தவர் நீதிமன்றத்தார் அனுப்பினவர் என் பதையும், வந்தவர் வாள் தடி கைப்பிடித்து வந்துளாரென் பதையும் கண்ட ஏசு, அவரை எதிர்த்தல் நியாயமன்று எனவும் புத்தியன்று எனவும் எண்ணினார்போலும்.

ஏசுவை மரணக்கினைக்குத் தீர்க்கத்தக்க குற்றங்களைக் கண்டு பிடிக்கத் தேடினர். ஆயினும் அதற்கு யாதோர் அத் தாட்சியும்* கிடைக்கவில்லை. சாட்சிகளாக வந்தோர்சிலர், "'நான் இந்தக் கோயிலை இடிப்பேன்'§ என இவன்சொல்ல நாங்கள் கேட்டோம்" என்றார். இப்படிச் சொன்னவ ருள்ளும் ஒருவரோடொருவர் மாறுபட்டனர். மகா அருச் சகன் காயபன் ஏசுவைநோக்கி, "இந்தச் சாட்சிகள் உனக்கு விரோதமாகச் சொல்வதை நீ கேட்கவில்லையோ? நீ யாது கூறுகின்றாய்?" என, ஏசு மறுமொழியொன்றுஞ் சொல்லாது வாளாநின்றனர். அதன்பின் மகா அருச்சகன் இவரைநோக்கி, "நீ மேசியரோ?" என வினவினன்.†

"ஆம், நான் மேசியரே" என விடைபகர்ந்தார் ஏசு.

உடனே மகா அருச்சகன் தன் மேலங்கியைக் கிழித்துக் கொண்டு, "இனி ஏன் வேறுசாட்சி? இவன் பேசிய தேவ நிந்தையை நீங்களே காதாற் கேட்டீர்களே. இவனை என்ன செய்யத்தகும்?" என்றான். "இவனைக்கொல்லலே நீதி" எனச் சங்கத்தார் தீர்த்தனர். இதன்பின் ஏசுவின்மேற் துப்பினர் சிலர். வேறுசிலர் இவரைக் கண்ணைக்கட்டி, தலை யிற் குட்டி, "சுவாமிகள் ஞானதிருஷ்டி உடையது. சுவாமி களைக் குட்டினர் யார்கொலோ? திருவாய்மலர்ந்தருள்க" என

* 'ஹஸ்தஸாக்ஷிந்' எனும் சங்கதச்சொல் அத்தாட்சி ஆயிற்று.

§ இப்படி ஏசு ஒருபொழுதுஞ் சொன்னதில்லை. "இந்தக்கோயில் இல்லாமற் போகுங்காலம் வரும்" என இவர் கூறியதுமெய்.

† தாமே மேசியரென ஏசு பன்னிருவருக்குமேயன்றி இதற்கு முன் ஒருகாலத்தும் பகிரங்கத்திற் கூறினதில்லை. காயபன் இதனை அறிந்தது எப்படி? ஊதயன் வாய்மொழியாற்போலும்.

வஞ்சப்புகழ்ச்சொற் கூறி இகழ்ந்தனர். அங்குநின்ற குற்றேவல்மாக்கள் அவரைக் கன்னத்தில் அறைந்தார்.*

சீமன் ஏசுவை அறியேனெனல்.— இப்பொழுது நாம் கண்ட விசாரணை நடந்தது மகா அருச்சகன் காயபன் மாளிகையின் மேல்வீட்டிலே. இஃது இங்கு இப்படி நடக்கையில் கீழே முற்றத்திலே தீக்காய்ந்துகொண்டிருந்த சேவகர் சிலரோடு சீமனும் தீக்காய்ந்துகொண்டிருந்தான். அங்கிருந்த அடிமைப்பெண்ணொருத்தி சீமனை உற்றுநோக்கி, "நீயும் இந்த நசரயனைச்சேர்ந்தாயல்லையோ?" என; அவன், "என்ன சொன்னாய்? நான் அவனைச்சேர்ந்தவனல்லன்" என்று, அவ்விடத்தைவிட்டு வெளிமுற்றத்துக்குச் சென்றான். அவ்வடிமைப்பெண் மீட்டும் அவனைக்கண்டு, "இவனும் அவனைச் சேர்ந்தவன்" என; சீமன் முன்போலவே மறுத்தான். சிறிது நேரங்கழிந்தபின் அங்குநின்றவருளொருவன் சீமனைநோக்கி, "நீயும் அவனைச்சேர்ந்தவன். நீ கலிலேமாகாணத்தான் என்பதை உன்பேச்சுக் காட்டுகிறதே" என்றான். அதற்குச் சீமன், "கண்ணனே, அந்தமனிதனை நான் அறியேன். நான் சொல்வது பொய்யென்றால் என் இரண்டுகண்ணுங்கெடுக"

* இப்பொழுது கூறியது மார்க்கனார் கூற்று. வியாழக்கிழமை இரவிற் சனதரங்கூடவில்லையென்பதும்; அடுத்தநாட் காலையிற் கூடும் சங்கத்திற்கு அறிவிப்பதற்குச் சனதரத்தின் அவயவங்களிற் சிலரும் மகா அருச்சகனும் முன்விசாரணைசெய்தாரென்பதும் உலுகனார் கூற்று. இஃதன்றியும், இரவில் ஏசுவை இகழ்ந்தவரும் புன்செயல்செய்தவரும் குற்றேவல்மாக்களே என்பார் இவர். இருவர் கூற்றையும் நோக்குகையில், சனதாசங்கம் சங்கமாக இரவிற் கூடவில்லையெனவும், வெள்ளிக்கிழமைகாலையிற் கூடியகூட்டமே சங்கத்தின் கூட்டமெனவும் எண்ணுதற்கு இடமுண்டு.

என்றான். உடனே சேவலொன்று கூவிற்று. என்றுங் கூவின சேவலே இன்றுங் கூவினது; என்றுங் கூவினது போலவே இன்றுங் கூவினது. ஆயினும் தன் நெஞ்சு அறிந்ததைப் பொய்த்த சீமன்செவியில், சேவல் கூவியது, "சீமனே, பொய்த்தாய், பொய்த்தாய். குருத்துரோகியானாய்! ஏசுவின் சீஷனென்ன நின்னை அச்சம் பிடித்ததோ? சீச்சீ! வெட்கம், வெட்கம்!" எனக் கழறியதுபோல் ஒலித்தது.* உடனே சீமன் தாங்கொணாத் துயரத்தில் மூழ்கி, வெளியே சென்று, "ஐயையோ! கெட்டேன் பாவியேன்! எனக்குமுண்டோ உய்வு?" என உள்ளம் உடைய, வாய் புலம்ப, கண்ணீர் ஆறாய்ப் பெருக, தேம்பித்தேம்பி அழுதான்.

## வெள்ளிக்கிழமை

**சனதரங்கூடுதல்.**—வெள்ளிக்கிழமை பொழுது காலித்தவுடனே சிரேஷ்ட அருச்சகர்கள் சனதரத்தைக்கூட்டி, கடந்த இரவில் தாங்கள் தீர்மானித்ததையே நிருணயித்தார்கள். அதன்பின் ஏசுவைக் கைத்தளைபூட்டி, தேசாதிபதி பொந்து பிலத்தன்வசம் ஒப்பித்தனர்.

**பிலத்தன் விசாரணை.**--சிரேஷ்ட அருச்சகர்கள் ஏசுவைப் பிலத்தனிடம் ஒப்பிக்கையில் இவர்மேல் இவ்வாறு குற்றஞ் சுமத்தினர்:

"தேவராச மேசியர் தானே என்றும், உரமை வேந்தர் வேந்தனுக்கு இறைகொடுத்தல் தவறென்றும், இவன் எங்கள்

* "காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ — நாதம்
அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ, ஓடி
ஒளிக்கின்ற தென்னோ? உரை."
—நளவெண்பா.

சனத்துக்குப் பொய்ப்போதனைசெய்து; எம்மவரை இராசவிசு வாசத்தினின்று விலக்குவதை நாங்கள் கண்டோம்."

பிலத்தன் ஏசுவைநோக்கி, "நீ யூதருக்கு அரசனோ?' என வினவினன்.

"ஆம், யூதருக்கரசன் நானே" என்றார் ஏசு.

சிரேஷ்ட அருச்சகர்கள் பின்னும் பற்பல குற்றங்களை ஏசுவின்மேற் சுமத்தினார்கள். இவரோ வாய்திறவாது வாளா நின்றனர். பிலத்தன் ஏசுவைநோக்கி, "உன்மேல் எத்தனை குற்றம் சுமத்துகிறார்கள் இவர்கள்! நீ இவற்றிற்கு விடை கூறாயோ?" என்றான். அப்பொழுதும் ஏசு ஒன்றும் பேசினாரில்லை. அதைக்கண்டு பிலத்தன் ஆச்சரியப்பட்டான்.

மரணாக்கினை.—ஏசுவைச் *சிலுவையிலறைந்து கொல்லும்படி பிலத்தன் தீர்ப்புச்செய்தான். அங்குநின்ற போர்ச் சேவகரை இவன்பார்த்து, "இன்றே இக்கட்டளைப்படி செய்வது நுங்கடன்" என்றான்.§

* 'சிலுவை' என்பது சிரியகமொழி. 'குருசு' என்னும் இலத்தின்மொழியும் இதனையே குறிக்கும்.

§ உரமைக்குடிகள் இருபிரிவினர். "உரமையூரன்" என்னும் உரிமைபெற்றவனெவனையும் கைத்தளை காற்றளை பூட்டுதல்,பிரம்பாலடித்தல், கசையாலடித்தல், சிலுவையிலறைதல் என்னுந் தண்டனைகளைச் செய்யலாகாது. இவ்வுரிமைபெற்றவர் கொலைத் தீர்ப்புப்பெறின் அவர் தலையைக் கோடரியாற் துண்டிப்பர். அவரல்லாரே மேற்கூறிய தண்டங்கள்பெறுவர். ஏசு உரமை வேந்தர்வேந்தனது குடியேயாயினும், "உரமையூரன்" உரிமை பெற்றவரல்லர். ஆகவே இவருக்குச் சிலுவை மரணத்தீர்ப்புக் கிடைத்தது.

பாரதகண்டத்திலும் ஈழமண்டலத்திலும் எக்காலத்தும் சிலுவைமரணதண்டனை இல்லை. பாரதகண்டத்தில் கழு

**கசையடி.**— போர்ச்சேவகர் ஏசுவின் மேலாடையை உரிந்து, இவரை ஒருமரத்தோடு கட்டினபின், அவரில் இருவர். இவர் முதுகில் மாறிமாறிப் பலமுறை கசையால் அடித்தார்.*

**உரமைப்போர்ச்சேவகர் அவமதித்தல்.** — ஏசுவைக் கசையாலடித்தபின், சேவகர் அந்தனிக்கோட்டையிலிருந்த பிரத்தரியம் என்னும் மாளிகையினது முன்றிலுக்கு இவரைக் கொண்டுபோனார். அங்கிருந்த போர்ச்சேவகரையும் வரும்படி அழைத்தார். அதன்பின் காயாம்பூநிறமுள்ள அங்கியை இவருக்குத் தரித்து, ஓர் இருக்கையில் இருத்தி, முள்ளால் ஒரு முடிபின்னி, அதை இவர் தலையிற்சூட்டி, இவர்முன் முழங்காற் படியிட்டு நமஸ்கரித்து, "ஊதர்கோன் நீடூழி வாழ்க" என வாழ்த்தினர். அதன்பின் ஒருகோலால் இவர் தலையிலடித்து,

வேற்றுதல் இருந்தது. அதைப்போன்றது, அதிலுங்கொடியது சிலுவையிலறைதல்.

சிலுவை என்பது மரணக்கினைக்கருவிகளில் ஒன்று; இது நெடுமரம் குறுமரம் என்னும் இரண்டு கொண்டது. நெடுமரத்தைத் தரையிலே நிறுத்துவர். இது தரைமட்டத்துக்கு மேல் பத்துப்பன்னிரண்டடி உயரமுள்ளது. இதில் குறுமரத்தைத் தரைமட்டத்துக்குமேல் ஏட்டுப்பத்தடி உயரத்திலே குறுக்கே பொருத்துவர். இதன்மேல், கொலைத்தீர்ப்புப்பெற்ற ஆளை ஆடையெல்லாம் உரிந்து, கையிலும் காலிலும் இருப்பாணியறைந்து, சாகும்வரையிலும் விட்டுவிடுவர். சிலுவையிலறையுண்ட ஆள் இரண்டுமூன்றுநாள் சொல்லொணாப் பாடுபட்டபின்பு சாகும்.

* சிலுவைமரணமடையுமெவரையும் முதலிற் கசையாலடித்த பின்பே சிலுவையிலறைவது வழக்கமாகலின், இது விதித்த தண்டனைக்கு மேற்பட்டதொன்றன்று.

இவர்மீது காறித்துப்பினர். இவ்வாறு அவமானஞ்செய்தபின் காயாம்பூ நிறமுள்ள அங்கியைக் களைந்து, இவரது ஆடையை இவருக்கு உடுத்தினர்.

கோல்கதைவழி.—கொல்கதை என்பது எருசலே நகருக்குப் புறம்பே அண்மையிலிருந்த வெளி. அங்கே ஏசுவைச் சிலுவையிலறையும்படி கொண்டுபோனார். அன்று இவருடன் சிலுவையில் அறையும்படி குற்றவாளிகளிருவரைக் கொண்டுபோயினர். சிலுவையி லறையுண்பாரே தம்தம் தோளில் சிலுவையின் நெடுமரம் குறுமரம் இரண்டையும் தூக்கிச் செல்வர். ஏசுவும் தமது சிலுவையைத் தாமே தூக்கிக்கொண்டு தெருவழியே நடந்துபோனார். மரத்தின் பாரத்தாலோ உடற்சோர்வினாலோ அதைத் தூக்கிச்செல்கையில் இவர் மேனி துவண்டது. இக்காட்சியைக்காணத் தெருவிற் கூடிநின்றவர் பலர். அவரில் ஒருவன் சீமன்என்னும் பெயரினன். இவன் *சிரேனியூரான். இவனைப் போர்ச்சேவகர் பிடித்து இழுத்து ஏசுவின் சிலுவையை இவன்தோளில் வைத்து, அதைச் சுமந்துவரும்படி நெருக்கினர். பெருஞ்சனத்திரள் பின்னே நடந்துவந்தது. ஏசுவைக் கொல்கதைக்குக் கொண்டுவந்தார்.

சிலுவையில் அறையுண்ணல்.—கொல்கதைசேர்ந்ததும், குங்கிலியங்கலந்த திராட்சைரசத்தைப் பானம்பண்ணும்படி இவருக்குக் கொடுத்தனர். இவர் அதைப் பருகவில்லை.§ இதன்பின் ஏசுவைச் சிலுவையில் அறைந்தனர். இவர் இரு

* சிரேனியூர் ஆபிரிகத்தின் வடக்கே இலிபிநாட்டில் இருந்தது.

§ எருசலேநகரிலிருந்த இரக்கமுள்ள நங்கையர் பலர் இப்புண்ணிய கைங்கரியத்தை விரும்பிச் செய்வர். இவர் பாகஞ்

பக்கத்திலும் பக்கத்துக்கொருவனுகக் குற்றவாளிகள் இருவரையும் சிலுவையிலறைந்தார். ஏசுவைச் சிலுவையிலறையும்போது ஏசு, "அப்பா, இவருக்கு இப்பிழையை மன்னி. தாம் செய்வது யாதென இவர் அறிந்திலர்" என வேண்டினர்.*

செய்தனுப்பின திராட்சைரசத்தை ஏசு பருகாததற்குக் காரணம் யாதோ அறியேம். இப்பொழுதாயினும் தம்மைப் பகைவர் கையினின்று எப்படியோ கடவுள் மீட்பர் என்னும் நம்பிக்கையோ அல்லது சாகுமட்டும் தமது அறிவு தெளிவுடனிருக்க வேண்டும் என்ற விருப்பமோ குங்கிலியங்கலந்த திராட்சைரசம் பருகாமல் இவரைத் தடுத்தது.

* "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றி,'மற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால் — உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்!' என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்."

—நாலடியார்

'இவருக்கு இப்பிழையை மன்னி' என்பதில் இவர் என்றது யாரை? தம்மைச் சிலுவையிலறைந்த போர்ச்சேவகரையோ, கொலைத்தீர்ப்புச்செய்த பிலத்தனையோ, தம்மைப் பிலத்தனுக்குமுன் கொண்டுவந்து குற்றஞ்சுமத்தின சிரேஷ்ட அருச்சகர்களையோ, அதற்குமுன் விசாரணைசெய்த சனதாத்து அவயவங்களையோ என்னுங் கேள்விகேட்பார் பலர். இவர் எல்லாரையும் இது குறிக்கும்போலும்.

இவ்விண்ணப்பம் உலுகனுர் சுசமாசாரத்தில் மட்டும் உள்ளது. இதிலும் சுத்தக் கையெழுத்துப்பிரதிகளில் இவ் விண்ணப்பம் இல்லை. இதனை உலுகனுர் நூலுள் யாரோ சொருகினர்போலும். அவ்வாறு சொருகினதேனும் இஃது உண்மையில் ஏசு செய்த விண்ணப்பமே என எண்ண இடமுண்டு. 'நமக்குத் தீமைசெய்பவர் பொருட்டு விண்ணப்பஞ்செய்ம்மின்' எனப் பிறருக்குப் போதித்தவர், தமக்குத் தீமைசெய்தவர்பொருட்டு விண்ணப்பஞ்செய்தாரென்பது நம்பத்தக்கதே.

ஏசுவின் ஆடைகளைக் கொலைச்சேவகர் பங்கிட்டுக்கொண்டனர்.*

ஏசுவைச் சிலுவையிலறைந்தது காலை ஒன்பது மணியளவில். இவரதுகுற்றம் இன்னதெனக் காட்டும்பொருட்டு, சிலுவையின் தலைப்பில் ஊதருக்கு வேந்தன் எனத் தீட்டின சாசனம் ஆணியாற் கடாவியிருந்தது.

வழியிற் சென்றவர் இவரை இகழ்ந்தார். சிரேஷ்ட அருச்சகர்களும் சாத்திரிமார்சிலரும், "தமது நாட்டாரைக் காக்கக் கங்கணங்கட்டினவர் தம்மை முதலிற் காக்க" என்றும் "இவர் மேசிய தேவராசராயின் சிலுவையிலிருந்து இறங்கி வருக" என்றும் நிந்தித்தனர்.

ஏசு சாதல்.—பிற்பகல் மூன்றுமணியளவிலே ஏசு உரத்த சத்தத்தோடு, "எலீ எலீ லமா சபக்தானி?"§ என ஓலமிட்டார்.

* சிலுவையிலறையுண்பவரைச் சுத்த நிருவாணிகளாகவே அறைவர்.

§ இஃது ஊதசமயத் திருமுறையினுள் திருப்புகழ்மாலையில் இருபத்திருவது திருப்புகழ் முதலடி. "என்கடவுளே, என்கடவுளே, ஏன் என்னைக் கைவிட்டாய்? என்பது பொருள.

கடவுள் ஏசுவைக் கைவிட்டாரோ? கடவுள் ஒருவரையுங் கைவிடுவதில்லை. ஏசுவை ஒருகணமேனும் கடவுள் கைவிட்டிலர். பின் ஏன் இவர் இப்படி ஓலமிட்டார்? தமரெல்லாரும் கைவிட்ட ஏசு, தாங்கொணுத்துயரத்தால் வருந்தும்போது, கடவுளும் கைவிட்டார் எனஎண்ணினுர்.

"ஆரொடு நோகேன், ஆர்க்கெடுத் துரைக்கேன்,
ஆண்டநீ அருளிலை யானல்?"

என மாணிக்கவாசகர் கடவுளருளை ஐயுறும் நிலையைக் கவனிக்க.

கடவுள் தம்மைக் கைவிட்டாரென ஏசு ஐயமுற்றது கணப்பொழுதே.

சிறிதுநேரத்துக்குப்பின், "எனக்கு விடாய்க்கிறது" என்றார் ஏசு. உடனே அங்கு நின்ற போர்ச்சேவகருள் ஒருவன் ஓடிப்போய் ஒரு கடற்காளானைப் பொற்கம்* என்னும் பானத்திற் தோய்த்து அதை ஒருகோலின் நுனியில்மாட்டி, ஏசுவின் வாய்க்குநேரே நீட்டினான். ஏசு அதனை உண்டார். அதன்பின், "அப்பா, என்னுயிர் நினக்கு அடைக்கலம்" என்றார் ஏசு. இதுசொல்லி முடிந்ததும் ஏசு செத்தார்.§

காவல்காத்துக்கொண்டிருந்த போர்ச்சேவகருக்குத் தலைவன் நூற்றுவர்க்கதிபதி, இவ்வாறு ஏசு செத்ததைக்கண்டு, "இந்தமனிதன் குற்றமற்றவன். இதுமெய்" என்றான்.

மகதலைமரி, சின்னயாகவன் சூசை என்னும் இருவருக்கும் தாய் மரி, யாகவன் ஒகனன் இருவருக்கும் தாய் சலூமி முதலிய பெண்கள் சிலர் தூரத்திலேநின்று நிகழ்வதையெல்லாம் உற்றுநோக்கினர்.¶

* பொற்கம் என்பது உரமைப்போர்ச்சேவகர் தமக்குச்செய்து வைத்திருந்த பானம். இது தண்ணீரில் காடி, சருக்கரை, முட்டை கலந்தது.

§ 'இறந்தார்,' 'தேகவியோகமடைந்தார்,' 'கடவுள்திருவடி நீழலைச் சேர்ந்தார்' முதலிய மங்கலம் மரியாதை பத்தியைக் காட்டும் மொழிகளைவிட்டு, செத்தார் எனும் கடுஞ்சொல் வழங்கியது ஏன்? மனிதன் எவனும் சாக்காடு என்னும் இயற்கைவிதிக்கு உட்பட்டவன் என்பதை வற்புறுத்தும் பொருட்டே.

¶ ஏசுவின் தாயார் மரியம்மையார் தமது மகனார் சித்திரவதையுண்டகாலத்தில் அருகே நின்றிலர்போலும். நாம் கேட்டறியாத பெண்களின் பெயரையெல்லாம் சொல்லும் ஆசிரியர்கள், மரியம்மையார் இங்கு இருப்பின் அவர் பெயரைச் சொல்லாமல் விடுவார்களோ? இது நிகழ்ந்தகாலத்தில் மரியம்மையார் கலிலையில் நசரையூரில் இருந்தனர்போலும்.

அடக்கம்.—ஞாயிறுபடுமுன்,* அஃதாவது ஓய்வுநாள் தொடங்குமுன், அரிமத்தியூரன், சூசையென்னும் பெயரினன், சனதரசங்கத்தாருளொருவன், புகழ் மிகப்படைத்தவன், கடவுளரசு எப்பொழுது வருமோவெனக் காத்திருந்தவன், பிலத்தன்பாற் துணிந்துசென்று, ஏசுவின் §திருமேனியைத் தரும்படி வேண்டினன். இத்துணை விரைவில் ஏசுசெத்ததைக்கேட்டுப் பிலத்தன் ஆச்சரியமடைந்தனன். அதன் உண்மையை விசாரித்தறிந்தபின், "நும்வேண்டுகோட்படியே செய்கின்றேன்: பிணத்தை§ எடுத்துக்கொண்டு செல்க" என்றான் பிலத்தன். சூசை ஏசுவினுடலைச் சிலுவையினின்று இறக்கி, மெல்லிய வெள்ளாடை சுற்றி, அண்மையில் ஒரு கற்பாறையில், முன்னரே குழித்த குழியொன்றில், அடக்கஞ்செய்து, குழியின்வாயை ஒரு பெருங்கல்லால் அடைத்துவிட்டுச் சென்றான். மகதலேமரியும், யாகவனுக்கும் சூசைக்கும் தாய் மரியும் இதைக்கண்ணுற்றனர்.†

* "ஞாயிறுபட்டபின்பு" என மார்க்கனுர் உரை பொருள்படும் போலும். ஓய்வுநாளிலும் பிரேதத்தை அடக்கஞ்செய்யலாம், குழி முன்னரே ஆயத்தமாயின்.

§ சூசை கேட்டது 'திருமேனி' பிலத்தன் எடுத்துக்கொண்டு போகச்சொன்னது 'பிணம்.'

† சிலுவையிலறையுண்டு செத்தவரை அடக்கம்பண்ணுவதில்லை; பருந்து கழுகு முதலிய பறவை பிணத்தைத்தின்ன விட்டுவிடுவர். ஏசுவினுடலுக்கும் இப்படியே நேர்ந்திருக்கும், அரிமத்திச் சூசை பிலத்தன்பாற்சென்று, அதனைப்பெற்று அடக்கஞ்செய்யாவிடின்.

# எழுவது படலம்

ஏசுவின் மொழியுள் இக்கா லத்தன
இவ்விடத் தனவென யாமறி யாதவை

## இடம் காலம் இவையென நாம் அறியாத ஏசு உபதேசங்கள்

விளக்கைக் குறுணியால் மூடிவைப்பரோ? விளக்குத் தண்டின்மேலன்றோ வைப்பர்.

உலகத்துக்கு ஒளி நீவிர்; நும் நற்செயல்களைக்கண்டு நும் அப்பனை எவரும் புகழ, மனிதர்முன் நும் மெய்ம்மை விளங்குக.

மலைமேல் ஊரை மறைத்தல் இயலாது.

கேட்பவை கேட்க.

சாத்திரிமார்சொல் புளித்தமா அனைய. நும்மைக் கெடாதபடி அவற்றைக் காமின்.

நமக்கு விரோதியல்லான் நமக்கு உற்றானே.

நின் கை நினக்குத் தீமைவிளைப்பின் தறித்தெறி; கையிரண்டோடும் நரகில் வீழ்வதினும் ஒற்றைக் கையனாய் வாழ்வதே மேன்மையுடைத்து. நின் கால் நினக்குத் தீமை விளைக்குமேல் தறித்தெறி; இணையடி உடையனாய் நிரயம் புகுவதினும் ஒற்றையடியோடு வாழ்வதே மேன்மையுடைத்து. நின் கண் நினக்குத் தீங்குவிளைக்குமேல் தோண்டியெறி; இரண்டு கண்ணோடும் நரகிற் புகுவதினும் ஒற்றைக்கண்ணனாய் வாழ்வதே மேன்மையுடைத்து.*

* அணிபெறப்புனைந்த மொழியின் அணி இஃதென ஆராயாது, சொல்லளவிற் பொருள்கொள்வார் வாளா இடர்ப்படுவர்.

உப்பு நன்று, உவர்ப்பு இருக்கும்வரையிலும். உவர்ப்பு ஒழியுமேல் அதற்கு உவர்ப்பூட்டுவதெப்படி? நும்மில் உப்பு இருக்கக்கடவது.

ஒருவரோடொருவர் சாந்தியோடுறைமின்.

சிறு குழந்தையைப்போல ஒருவன் கடவுளரசைக் கொள்ளானுபின் அதை அடைதல் இயலாது.

கடவுளை நம்புமின்.

நீவிர் வேண்டுவது எஃதாயினுமாக, அதனைப் பெற்று விட்டோமென்றே நம்பி வேண்டுமின்; அதனை நீவிர் பெறு வீர்.

ஒருவன் மலையைப்பார்த்து, "நீ பெயர்ந்து கடலில் விழு" என்று சொல்வனேல், அஃது அவ்வாறே நடக்கும்; தான் சொல்லும்வண்ணம் நடக்குமென உறுதியோடு நம்புவனேல்.*

நெஞ்சில் மாசிலார் வாழ்வுடையார்; அவர் கடவுளைக் காண்பார்.

பத்திநெறி அறநெறிகளை அனுட்டிக்கையில் பிறர் காண வேண்டுமென்று விரும்பாதே; மனிதர்புகழ் வீண்புகழ்; அதனை விரும்புவையேல் நின்னப்பன் நினக்குப் பலன் அளியான்: (1) நீ பிரார்த்தனஞ்செய்யும்போது போலிப் பத்தர் செய்வதுபோலச் செய்யாதே. பிறர்புகழ்விரும்பி அவர்

"நின் மெய்வாழ்வுக்கு இடையூறு விளைப்பன எவை? விளைப்பவர் எவர்? அவற்றை, அவரை விடு" என்பதே பொருள்.

"கண்ணுவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே"
என்னுந் தாயுமானவர் வாக்கை நோக்குக.

* இதற்குச் சொற்படியே பொருள்கொள்வது தவறு. வேறொரு வகையாலும் முடியாதது கடவுளால் முடியும் என்பதே இதன் பொருள்.

பள்ளிகளிலும் தெருக்களின் மூலைகளிலும் நின்று பிரார்த்தனை செய்கிறார். தாம் தேடிய பலன் அவருக்குக் கிடைக்கின்றது, நீயோ பிரார்த்தனஞ்செய்யும்போது, நின் அறைக்குட் சென்று கதவைச்சாத்தி உள்ளே தாழிட்டு, இரகசியத்திலே நின் அப்பனைவேண்டு; இரகசியமெல்லாம் அறிந்த நின் அப்பன் நினக்குப் பலன் அளிப்பன்; நினக்கு வேண்டுவன யாவையென நீ கேட்குமுன்னே நின் அப்பன் அறிந்துளன். (2) போலிப்பத்தர் பிறர்புகழை விரும்பி, பள்ளிகளிலும் தெருக்களிலும் நின்று, தாரைஊதி, தானஞ்செய்கின்றார். தாம் தேடிய பலன் அவருக்குக் கிடைக்கின்றது. அவர்போல நீ செய்யாதே. நீ தானஞ்செய்கையில் நின் வலக்கை ஈவதை இடக்கை அறியவேண்டா; நீ செய்யுந் தானம் இரகசியத்திற் செய்; இரகசியமெல்லாம் அறிந்த நின் அப்பன் நினக்குப் பலனளிப்பான்.*

வாழ்வுக்குச் செல்லும்வழி இடுங்கியவழி; வாழ்வினுட் செல்லும் வாயிலும் இடுங்கிய வாயில்; இவ்வழியே சென்று இவ்வாயிலினூடு நுழைமின்.

புத்தியிலே பாம்புபோன்மின், கபடின்மையிலே புறாப் போன்மின்.

கடுந்தவஞ்செய்வீர்காள், பொறுத்தற்கரிய சுமை ஏற்றப் பட்டீர்காள், நீவிர் அனைவீரும் என்பால் வம்மின்; சாந்தியடையும்நெறி நுமக்கு நான் காட்டுவேன். நான் சுமத்தும்

* ஒருவன் தானஞ்செய்யும்போது, கடவுள் தரும் பலனும் விரும்பலாகாது. கடவுள் பலன்தருவரென எண்ணித் தானஞ்செய்ய ஏசு போதிக்கவில்லை. பகவற்கீதையில், நிட்காமியகருமஞ் செய்யுமாறு கண்ணன் அருச்சுனனுக்கு உபதேசித்ததையும் சிந்திக்க.

நுகத்தைச் சுமந்து, என்பாற் கன்மின்; நான் சுமத்தும் நுகம் இலகுவுள்ளது, நான் ஏற்றும் பாரம் இலேசுள்ளது.*

நெறிச்செல்வார் இடறிவிழுதற்கு உள்ள பொறிகளை நினைக்கையில், "இவையும் வேண்டுமோ?" என உள்ளம் துடிக்கின்றது. நெறிச்செல்வார் வழியில்விழ வைத்திருக்கும் பொறிகள் அவசியம்போலும். ஆயினும் பிறர்கேடு சூழ்ப வன் கெடுவன்.

கலப்பையிற் கைவைத்தபிறகு பின்னே திரும்பிப்பார்ப் பவன் கடவுளரசுக்கு அருகனல்லன்.

என்பக்கத்தில்லாதவன் எனக்கு விரோதி.§

ஒருவனைவிட்டுப் புறம்பேசென்ற பேயொன்று, தான் ஆயிருப்பதற்கு இடந்தேடி, பாலைவனமெல்லாம் ஊடுருவிப் போயும் இடங்காணமல், 'நான் விட்டுவிட்டுவந்த வீட்டுக்குத் திரும்பிப்போவேன்' எனத் திரும்பிவந்து, 'வீடு' சுத்தமும் செம்மையும் உடையதாய், குடியில்லாமலிருக்கக் கண்டு, தான் குடிபுகுவதுமன்றி, தன்னிலும் தீய வேறு ஏழு பேயை அழைத்துவந்து, அவற்றோடு வாசஞ்செய்யும்.

* ஏசுகுருநாதரும் நுகம் சுமத்துவார், பாரம் ஏற்றுவார். ஆயினும் வேறு குருமார்சிலர் சுமத்தும் நுகத்திலும் இலகு வுள்ளது ஏசு சுமத்தும் நுகம்; வேறு குருமார்சிலர் ஏற்றும் பாரத்தினும் இலேசுள்ளது ஏசு ஏற்றும் பாரம்.

§ இதுவும், முன்கூறிய 'நமக்கு விரோதியல்லான் நமக்கு உற்றோனே' என்பதும் ஒன்றோடொன்று முரணுவதுபோலத் தோன்றினும், இது வெறுந்தோற்றமேயன்றி உண்மை யன்று. சிலசந்தர்ப்பங்களில் ஒன்றுமெய்,வேறு சில சந்தர்ப் பங்களில் மற்றது மெய்.

அந்த மனிதனதுநிலை முன்னிலும் பலமடங்கு கேடுறும்.*

வீட்டின் மூலைகளிலும் இருள் தங்காவண்ணம் வீடு முழுவதும் விளக்குவெளிச்சத்தாற் பிரகாசிப்பதுபோல, நின் அகம் முழுவதும் வெளிச்சம் நிறைக.

அதிகம் உரிமையுடையார் அதிகங் கடமையுடையார்; உரிமை சிறிதுடையார்க்குக் கடமையுஞ் சிறிதே.

ஆண்டவர் இருவருக்கு ஊழியஞ்செய்தல் எவனுலும் ஆகாது: ஒருவனைவிரும்பி, மற்றவனை வெறுப்பான்; அல்லது ஒருவனுக்கு உற்சாகத்தோடு ஊழியஞ்செய்து, மற்றவன் விஷயத்தில் பராமுகஞ்செய்வான். கடவுளையும் உலகப் பொருளையும் நாடுதல் நும்மால் முடியாது.§

மனிதர் தாம்பேசும் ஒவ்வொரு சொல்லுக்கும் விசாரணை நாளிலே கணக்குக்கொடுத்தல் வேண்டும். நீ பேசும் பேச்சால் நினக்குப் புகழ்வரும்; நீ பேசும் பேச்சால்நினக்குப் பழி வரும்.

* தீயகுணமும் பழக்கமும் உள்ள ஒருவன் தன் தீமையெல்லாவற்றையும் விட்டுவிடுவது போதாது என்பதும், நற்குணமும் நற்பழக்கமும் உடையவனுதல் வேண்டும் என்பதும், அவ்வாறு செய்யானேல் அவன் முன்னிலும் தீயனுதல்கூடும் என்பதும் இதன் கருத்து.

மலமெல்லாம் ஒழியப்பெற்றூலும் வாசனுமலம் பின்னும் இருக்குமென்றும், பெயூர்த்தும் மலபந்தனுகாவண்ணம் சிவபூசையும் அடியாரிணக்கமும் தேடல்வேண்டுமென்றும் சைவசித்தாந்தம் போதிப்பதைக் கவனிக்க.

§ "பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்;
என்னை நாடிய என்னுயிர் நாதனே,
உன்னை நாடுவன்"

என்ற தாயுமானவர் வாக்கை ஆராய்க.

ஆன்மாவடேற்றமடைதற்கு நிலையுள்ள மனமும் பொறுமையும் வேண்டும்.

இரப்பதினும் ஈவதே பாக்கியம்.

உள்ளம்நிரம்பி வழிந்தோட, வாய் பேசும்.

[மனம்] உள்ளவன் மேலும்மேலும் பெறுவான்; [மனம்] இல்லாதவன் உள்ளதும் இழப்பான்.

**பொன்னுணகம்.**—கடவுளரசின் இயல்பு பின்வருமாறு:

செல்வன் ஒருவன் நாட்டைவிட்டுப்போகுமுன் அடிமைகளிற் சிலரையழைத்து, அவனவன் தகுதிக்கேற்றவாறு, ஒருவனுக்கு ஐந்துபொன்னும்,* ஒருவனுக்கு இரண்டுபொன்னும், ஒருவனுக்கு ஒருபொன்னும் கொடுத்து, 'நான் திரும்பிவரும்போது கணக்குக்கேட்பேன்' என்று, போனான்.

ஐந்துபொன்பெற்றவன் அதை முதலாகவைத்து, வியாபாரம்பண்ணி, ஐந்துபொன் சம்பாதித்தான். இரண்டுபொன் பெற்றவனும் அப்படியேசெய்து, இரண்டுபொன் சம்பாதித்தான். ஒருபொன் பெற்றவனோ தான் பெற்றபொன்னை, நிலத்தைத் தோண்டி, புதைத்துவைத்தான். சில ஆண்டு சென்றபின், ஆண்டவன் திரும்பிவந்து, அடிமைகளை அழைத்துக் கணக்குக் கேட்டான். ஐந்துபொன்பெற்றவன், 'சுவாமி, நாம் என்வசம் ஒப்பித்த ஐந்துபொன்னையும் முதலாக வைத்து, ஐந்துபொன் சம்பாதித்தேன். இதோ, முதலும் ஊதியமுமாகப் பத்துப்பொன்' என்று பொருளை நீட்டினான். எசமானன் அகமிகமகிழ்ந்து, 'நன்று, நன்று;

* இங்கே பொன் என்றது ஒரு நாணகம். ஒருபொன் ஏறக்குறைய ஐம்பத்துநான்குரூபா பெறும்.

உண்மையும் உத்தமமுமுள்ள அடியான் நீ; உனக்குப் பெரிய உத்தியோகங் கொடுப்பேன்' என்றான். இரண்டுபொன் பெற்றவனும், 'சுவாமி, நாம் என்வசம் ஒப்பித்த இரண்டு பொன்னையும் முதலாகக்கொண்டு, இரண்டுபொன் சம்பாதித்தேன். இதோ, முதலும் ஊதியமுமாக நாலுபொன்' என நீட்டினான். எசமானன் அகமிகமகிழ்ந்து, 'நன்று, நன்று; உண்மையும் உத்தமமுமுள்ள அடியான் நீ; உனக்குப் பெரிய உத்தியோகங்கொடுப்பேன்' என்றான். இவ்வடிமைகளிருவரையும் எசமானன் தன்னோடு போசனம்பண்ண அழைத்து, தன் அருகிலிருத்தி அவரோடு உண்டான். ஒருபொன் பெற்றவன், 'ஆண்டையை நான் அறிவேன்—விதையாத வயலில் அறுக்கிறவர் என்றும், தூற்றாத களத்திற் குவிக்கிறவர் என்றும். வன்கண்ணரே, நீர் ஒப்பித்த பொன்னை, நிலத்தைத்தோண்டி, புதைத்துப் பத்திரப்படுத்தினேன். இதோ, உமதுபொன்' என்றான். எசமானன், 'ஏட, சோம்பற் போக்கிரி, நான் வன்கண்ணனென்றும், விதையாதவயலில் அறுக்கிறவனென்றும், தூற்றாதகளத்திற் குவிப்பவனென்றும் அறிவாயல்லையோ! அப்படியானால், என்பொன்னை நீ திரவியசாலையிற் சேமித்திருக்கவேண்டும். என் முதலுக்கு வட்டியாயினும் வந்திருக்கும்' என்று, தன் ஊழியரைப் பார்த்து, 'இவன் கையிலுள்ள பொன்னை வாங்குமின்' என்றான்.*

* இம்மையில் நாம்பெற்ற தனுகரண புவனபோகங்களையெல்லாம் நம் இன்பத்தையேநாடி அழித்தொழியாமல், அவற்றையெல்லாம் நமக்குக் கொடுத்த கடவுளுக்கு மகிமையும் பிறருக்கும் நமக்கும் நன்மையும் வரும்படி உபயோகித்தல்வேண்டும் என்பதும்; அவரவர் தாம்தாம்பெற்ற அளவுக்குத்தக்கபடி திருப்பணி செய்தாற் போதும் என்பதும்; அப்படிச்செய்யாதவர் பிறந்தும் பிறவாதவரே என்பதும் இதன் கருத்து.

# I

## ஏசு செத்தபின் சீடர்க்குப் பன்முறை காட்சி யளித்ததை விசாரணை செய்வாம்.

ஏசுசெத்து அவர் சரீரம் அடக்கம்பண்ணப்பட்டபின், அச் சரீரம் மீட்டும் உயிர்பெற்று, பிணக்குழியைவிட்டு வெளியே வந்தது உண்மையோ?

வெள்ளிக்கிழமை பிற்பகல் மூன்றுமணியளவில் ஏசு சிலுவையிற் செத்தாரெனவும், அன்றுபொழுதுபடுவதன்முன் அவருடல் அடக்கம்பண்ணப்பட்டதெனவும் கண்டாம். அடுத்த ஞாயிற்றுக்கிழமை சூரியோதயத்துக்குமுன் ஏசு சரீரத்தோடு உயிர்த்தெழுந்து, பலநாள் பலமுறை சீஷருக்குக் காட்சிகொடுத்தாரெனச் சுசமாசாரங்களெல்லாம் கூறும். இவ்வாறு சுசமாசாரம் கூறுவதைக் கிறைஸ்தவ திருச்சபை மெய்யென ஒப்புக்கொள்ளும். ஆயினும் விவிலியநூல் வல்லார் பலர் இதனை மறுப்பர்.

பாலையும் நீரையுங் கலந்துகொடுப்பினும், பாலை நீரிற் பிரித்துப் பாலையே உட்கொள்ளும் அன்னம்போன்றவர் தலை மாணக்கர். சுசமாசாரம் நான்கினும் காலத்தில் முந்தியது மார்க்கனுர் சுசமாசாரம். இஃதும் ஏசு இறந்து நாற்பது வருடத்துக்குப்பின்னரே எழுதியது. இதற்கு இருபது வருடத்துக்கு முன்னரே பவுல்முனிவர் கிறைஸ்தவ சபைகளுக்குத் தாம் எழுதிய நிருபங்களில்: ஏசுவின் உடன்பிறந்தார் யாகவமுனிவரையும், பன்னிருவரில் ஒருவர் சீமமுனிவரையும் தாம் நேரிற்கண்டு, பதினன்குபகல் தாம் அவரோடு கழித்தாரெனவும் கூறுவர். இறந்துபோன ஏசுவின் சரீரத்தை அடக்கம்பண்ணியது மெய்யேயெனப் பவுல்முனிவர் கூறி

யுள்ளார். அச்சரீரத்தோடு எழுந்து ஏசு மீட்டும் வந்தது பவுல்முனிவருக்குத் தெரியாது. இறந்துபோன ஏசு, தனித் தனிச் சீடருக்கும் சீடர்குழாத்துக்கும் பலமுறை காட்சி கொடுத்தார் என்பது இவர் கூற்று. இக்காட்சியெல்லாம், கனவில் அல்ல, நனவில் நிகழ்ந்தவை.

இஃது உண்மையேல், ஏசுவினுடலும் மனிதர் எல்லார் உடலையும்போலவே அழிந்தொழிந்ததெனவும், ஏசுகொடுத்த காட்சியெல்லாம் ஆவிக்கு ஆவிகொடுத்த காட்சியெனவும் கொள்ள இடமுண்டு. இஃதெவ்வாறாயினுமாக, ஏசு வரலாறு அவருக்குச்செய்த சரமகிரியையோடு முற்றுப்பெற்றது. சரதூஷ்டிரர், கௌதமசித்தார்த்தர், முகம்மதுநபி முதலிய குரு மணிகள் பூவுலகத்தில் வாழ்ந்து, பல நூறாயிரவருக்குப் போதித்து, தொண்டுகளியற்றி, கடவுளடி சேர்ந்ததுபோல, ஏசுகுருமணியும் வாழ்ந்து, போதித்து, தொண்டியற்றியபின் கடவுளடி சேர்ந்தனர்.

யாதோரு சமயத்தையேனும் சபையையேனும் ஏசு நாட்டினதுண்டோ ?

கிறைஸ்தவசமய ஸ்தாபனஞ்செய்தவர் ஏசு என்றும், கிறைஸ்தவ திருச்சபையை நாட்டினவர் இவரேயென்றும் பேசுவதும் எழுதுவதும் சாதாரணம்.

1. ஏசு ஒருசமயத்தைத் தாபித்தாரென்றாயினும், தாபிக்க எண்ணினாரென்றாயினும் முதல்மூன்று சுசமாசாரங்களேனும் நான்காம் சுசமாசாரமேனும் யாண்டும் சொல்லவில்லை.

ஏசு ஊதசமயத்தினர்; ஊதசமயத் திருமுறைகளை அங்கிகரித்தவர். தமதுநாட்டில் தமது சாதியினருட் பல்லாயிரவர் பத்தியும் நல்லொழுக்கமுமின்றித் திரிந்ததைக் கண்ட ஏசு அன்னாருக்கு உபதேசஞ்செய்து, மெய்ப்பத்தி இஃதெனவும் அறநெறி இஃதெனவும் காட்டி அவரை உய்விக்க முயன்றார். தம் சமயத்தவருட்சிலர் தாங்கள் பத்திமான்கள் நீதிமான்கள் எனச்சொல்லிக் கபடநாடகம் நடித்ததைக் கண்ட ஏசு அவரைக் கண்டித்து எச்சரித்தார். கடவுளரசு சமீபித்ததென ஓகன்முனிவரர் உபதேசித்ததை நம்பின ஏசு அவ்வாறே தாமும் போதித்தார். கலிலேமாகாணத்திற் செய்த தொண்டின் பிற்பகுதியில், வருவாரென்று ஊதர் எதிர்பார்த்திருந்த மேசிய தேவராசர் தாமேயென ஏசு நம்பி, அந்நம்பிக்கைக்கேற்றவாறு நடக்கமுயன்றார். இவையெல்லாம் சுசமாசாரங்களிற் காணலாம். ஆயினும், எப்பொழுதேனும் தமது சீஷரை ஏனைய ஊதரினின்று ஏசு பிரித்து அவரை ஒரு சபையாகக் கூட்ட எண்ணினாரென்றாயினும், ஒரு புதுச்

சமயத்தைத் தாபிக்கக் கருதினரென்றாயினும் யாண்டுங் கூற வில்லை.

மத்தர் சுசமாசாரத்தில் பதினாறு பதினெண்மது அதி காரங்களில், தாம் தாபிக்க எண்ணியிருக்கும் திருச்சபையைக் குறித்து ஏசு பேசியவை எழுதியிருக்கின்றனவல்லவோ. என் பார்க்கு, ஒருநாளும் ஏசுசொல்லாதனவற்றை இவர் சொன்ன தாகச் சிற்சிலவிடங்களிற் சுசமாசாரங்கள் கூறும் என்பதற்கு இஃதோர் உதாரணம் எனக் கூறுவர் விவிலியநூல் வல்லார். அப்படியின்றி, இங்குசொல்லியிருப்பவை ஏசுசொன்னவையே என நம்பினும், இதனால் நாம் பெறுவது யாது? ஒரு சபை யை நாட்ட ஏசு எண்ணியிருந்தும், அதை நாட்டுமுன் இவர் இறந்தனர் என்பதே.

ஏசு இறந்து சிறிதுகாலத்துக்குள் சீஷர் பலர் எரு சலேப்பெரும்பதிக்குச் சென்று ஆங்கு வதிந்துவந்தனர். பன் னிருவருள் யூதயன் ஒழிந்த ஏனையோரும் அங்கு வதிந் தனர். இவரே அங்கிருந்த சீஷரெல்லாரையுந் திரட்டித் திருச்சபையை நாட்டினர். ஆகவே திருச்சபையை நாட்டி னவர் ஏசு அல்லர், அப்போஸ்தலரே.* §

இவ்வாறு தோன்றின கிறைஸ்தவ திருச்சபையும் யூத சமயத்தினது உட்பிரிவாகவே இருந்தது பலவருஷம். சபை

* அப்போஸ்தலர் என்னும் பட்டத்தைப் பதினொருவருக்கும் அவர்போல்வார் வேறு சிலருக்கும் திருச்சபை வழங்கியது.

§ ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸருக்குச் சீடர் பலர். ஆயினும் அவர்களை அவர் ஒரு சங்கமாகக் கூட்டவில்லை. இராமகிருஷ் ணர் பரமபதமடைந்து சிலவருடம் சென்றபின்பே அவரது சீஷருட் தலைமைபெற்ற விவேகானந்தசுவாமிகள் 'இராம கிருஷ்ணசங்கம்' என ஒரு சங்கத்தை நாட்டியது. இவ்வாறு வந்ததே கிறைஸ்தவ திருச்சபையும்.

யார் யாவரும் ஊதரே. இவரெல்லாரும் ஏனைய ஊதர்போல வே எருசலேத் திருக்கோயிலுக்குச்சென்று வழிபட்டு வந்த னர். காலகதியில் இச்சபை பலவிடங்களிற் பரவியது. அப் பொழுது ஊதரல்லாதாரும் கிறைஸ்தவசபையிற் சேர்ந்தனர். இதனால் கிறைஸ்தவ திருச்சபையார் ஊதரைவிட்டுப் பிரிய நேரிட்டது. அப்பொழுது உதித்தது கிறைஸ்தவசமயம்.*

2. ஒருசமயத்தையேனும் ஒரு சபையையேனும் ஏசு தமது வாழ்நாளிற் தாபித்ததில்லையெனக் கண்டோம். ஞான ஸ்நானம் பிரபுபோசனம் என்னும் இரண்டு சமஸ்காரங்களில் ஒன்றையேனும் ஏசு நாட்டினரோ? இவ்விரண்டு சமஸ்காரங் களையும் நிலைநிறுத்தினவர் ஏசுவே யென்னுங்கொள்கை சருவ சாதாரணம்.

(i) ஒகனமுனிவரர் உபதேசத்தைக்கேட்டு ஏசு திரு மஞ்சனமாடினர் என்பது மெய். தாம் கைங்கரியம் செய்து வந்த காலத்தில் தம்மிடம்வந்தவர் யாரேனும் திருமஞ்சன மாடல்வேண்டுமென்று ஏசு உபதேசஞ்செய்ததில்லை. முதல் மூன்று சுவிசேஷங்களில் திருமஞ்சனத்தைக்குறித்து ஏசு உபதேசித்ததாக ஒன்றுஞ் சொல்லவில்லை.

(ii) தாம் சாவதற்குமுன், வியாழக்கிழமை மாலை ஏசு பன்னிருவரோடும் பேசகபோசனஞ்செய்தபின், ஓர் அப்

* கௌதமபுத்தர் ஹிந்துசமயி. தாம் புத்தநிலை எய்தியபின்பும் அவர் புதுச்சமயமொன்றை நாட்டவில்லை. வேள்வியில் உயிர் களைப்பலியிடுதல், வருணபேதம் முதலியனவற்றைக் கண் டித்து, மனிதர் நடக்கவேண்டிய அறநெறி இஃதெனக் காட்டி ஞர் இவர். ஆயினும், தருமோபதேசஞ்செய்யச் சங்கத்தைப் புத்தர் தாபித்தாரென்பது மெய். கௌதமபுத்தர் பரிநிரு வாணமடைந்து பலவருஷத்துக்குப்பின்பே பௌத்தசமயம் உதித்தது. இதுபோன்றதே கிறைஸ்தவசமய உற்பத்தியும்.

பத்தை எடுத்து, பிட்டு, பன்னிருவரையும் உண்பித்தபின், ஏசு தாமும் உண்டாரெனவும், அதன்பின் கொடிமுந்திரிப்பழச் சாற்றை எடுத்து, பன்னிருவரையும் பருகச்செய்து, ஏசு தாமும் பருகினரெனவும் முன் கண்டோம். ஆயினும், தங் காலத்துக்குப்பின்பு சீஷர் இதனைச் சமஸ்காரமாகக் கைக் கொள்ளல்வேண்டும் என ஏசு எண்ணினரில்லை. இச் சமஸ்காரத்துக்கு ஆதாரம் மார்க்கனர் சுசமாசாரத்திலும் மத்தனர் சுசமாசாரத்திலும் இல்லை. உலுகனர்சுசமாசாரத்தில் ஆதாரமுண்டு என்பாருக்கு; உலுகனர்சுசமாசாரக் கையெழுத் துப்பிரதி பலவற்றில் ஆதாரம் உண்டேனும், பழைய சுத்தக் கையெழுத்துப்பிரதிகளில் இருபத்திருவது அதிகாரத்தில் பதின்மூன்மது வசனம் 'என்னுடைய சரீரம்' என்னுஞ் சொற்களோடு முடிகின்றது எனவும், அதன்பின்வருஞ் சொற் களும் இருபதின்மது வசனம் முழுவதும் பிற்காலத்தில் யாரோ சொருகினவை எனவும் விடைகூறுவேம்.

பவுல்முனிவர் கொரிந்துநகரத்துக் கிறைஸ்தவதிருச் சபைக்கு எழுதின முதற்கடிதத்தில், பிரபுபோசன சமஸ்காரத் துக்கு ஆதாரம் உண்டென்பாருக்கு, ஏசு வியாழக்கிழமை மாலை பன்னிருவரோடும் உண்ட கடைஉண்டியை எடுத்துக் கூறும் முதல்மூன்று சுசமாசாரக் கிரந்தகர்த்தாக்கள் கூருது விட்டமை கவனிக்கத்தக்கதோ; அன்றி, பவுல்முனிவர் வாக்கே சரியெனக் கொள்ளத்தக்கதோ, என்பதை உய்த் துணர்க.

[கிறைஸ்தவசமயஸ்தாபனம் செய்தவர் ஏசு அல்லர் என்பதும், கிறைஸ்தவதிருச்சபையை நாட்டினவர் ஏசு அல்லர் என்பதும், கிறைஸ்தவதிருச்சபையில் வழங்கிவரும் சமஸ் க்காரங்களில் ஒன்றையேனும் நாட்டியவர் ஏசு அல்லர் என் பதுமே யான் ஈண்டுக்கூறுபவை. காலகதியில் கிறைஸ்தவ

சமயம் என ஒரு சமயம் உதித்ததும், கிறைஸ்தவதிருச்சபை யென ஒரு சங்கம் உதித்ததும், கிறைஸ்தவதிருச்சபையில் சமஸ்காரங்கள் உதித்ததும் தவறு என யான் கூறுகின் றிலேன். இவையெல்லாம் கோடானுகோடியருக்குப் பத்தி சாதனமாய், பெருநன்மை விளைத்திருக்கின்றன என்பதையும் யான் சிறிதும் மறுக்கின்றிலேன்.]

நேரிசைவெண்பா

ஈசனே நின்சீர் இணையடி கண்டுய்ந்த
ஏசு வரலா றியம்பநான் — மாசில்
மணியே யருள்செய்தாய் மன்னுமதி போலக்
குணம்ஒளிரக் குற்றங்க ளோடு.

## கடவுள் வணக்கம்

“மெய்தான் அரும்பி, விதிர்விதிர்த்த்’ உன்விரை யார்கழற்கே,
கைதாம் தலைவைத்து, கண்ணீர் ததும்பி, வெதும்பிஉள்ளம்,
பொய்தான் தவிர்ந்த்’உன்னை, ‘போற்றி, சயசய, போற்றி,’என்னும்
கைதான் நெகிழ விடேன்,உடை யாய்,என்னைக் கண்டுகொள்ளே.”